கழக வெளியீடு—௲௮௫



# சங்க இலக்கிய இன்கவித் திரட்டு

## மூன்றும் பாகம்






திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
லிமிடெட்,

திருநெல்வேலி :: சென்னை, 1.

கழக வெளியீடு - ௲௧௬

# சங்க இலக்கிய
# இன்கவித் திரட்டு
## (மூன்றும் பாகம்)

※

திரு. இளவழகனாரவர்கள்

எழுதிய

விளக்கங்களுடன்

: : திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்

திருநெல்வேலி : : சென்னை

# பதிப்புரை

இந்நூல் "சங்க இலக்கிய இன்கவித் திரட்டு" மூன்றும் பாகமாகும். முதற்பாகம் 1940 ஆகஸ்டிலும், இரண்டாம் பாகம் 1945 சனவரியிலும் வெளிவந்துள்ளன. முதற்பாகம் அவ்வப் பாக்களின் கருத்து விளக்கங்களுடனும் அரிய திருத்தங்களுடனும் அண்மையில் இரண்டாம் பதிப்பாக வெளிவந்துளது.

முதலிரு பாகங்களையும் படித்து மகிழ்ந்த அன்பர்கள் மேலும் இவைபோல பல நூல்கள் வெளிவருதல் வேண்டுமென விழைந்ததோடு எம்மை ஊக்கியும் வந்துள்ளனர். ஆகவே, இப்போது இம் மூன்றும் பாகம் வெளியிடப்பெறுகின்றது. இதிலும் முதலிரு பாகங்களைப்போலவே அவ்வப் பாக்களின் தலைப்பில் கருத்து விளக்கமும் பாகுபாட்டமைப்பும் செம்மையுற அமைக்கப்பட்டுள்ளன.

தமிழ் நாடு இப்போது தமிழ் வேட்கையில் விஞ்சி நிற்கின்றது; வேட்கை வேட்டமாகவும் மாறிப் பேருணர்ச்சியிற் பாய்ந்து செல்கின்றது. இந் நிலையிற் 'சங்கத் தமிழ்' தக்க கலங்கரை விளக்கமாய்த் தொலைவில் நின்று ஒளி மிளிர்ந்து தமிழ் மக்களைக் கரையேற்றி உய்வித்து வருகின்றது.

திருந்திய தமிழொளி, கருத்தொளி, சங்க இலக்கியத்திலிருந்தே மின்னி வருகின்றன; ஆழ்ந்த அழகிய மொழியறிவு, கலையறிவு, எளிய வாழ்க்கை, விரிந்த மனப்பான்மை, உயர்ந்த நாகரிகம், செம்மை நலம் என்பன சங்க இலக்கியத்தின் பேரொளிக்கதிர்கள்; உள்ளன்புடன் அக் கதிர்களில் திளைத்து

வருவோர், பசி பிணி பகை என்னும் வாழ்க்கை யிடையூறுகள் நீங்கி, வசியும் வளனும் சுரந்து, இனிய தமிழியல் வாழ்வில் வயங்குவர் ; புகழும் அருளும் அவர்களைப் பொருந்தி நிழலாடும்.

ஆதலால், சங்க இலக்கியத்தைப்பற்றிய ஆராய்ச்சி விளக்க நூல்கள் மேன்மேலும் வெளிவருதல் இன்றியமையாததே.

தமிழகம் இத்தகைய இனிய நூற்பதிப்புகட்குத் தக்க ஆதரவு அளித்து வருவதாக ! வாழி தமிழ் ! !

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்



பக்கம்.

# நூலின் பெயர்கள் முதலியன

| | செய்யுள் அல்லது வரிகளின் எண். | இந்நூலின் பக்க எண். |
|---|---|---|
| **I. தொல்காப்பியம் :** | | |
| *காமஞ்சான்ற* | ௧௧௩௮ | 203 |
| **II. பத்துப்பாட்டு :** | | |
| **(1) பெரும்பாணாற்றுப்படை** | | |
| *நள்ளிருள் விடியல்* | ௧௫௫ - ௧௯௯ | 59 |
| **(2) பட்டினப்பாலை** | | |
| *புலிப்பொறி* | ௬௦ - ௫௦ | 55 |
| *அகல்நகர்* | ௨௦ - ௭ | 57 |
| *வான்முகந்த* | ௧௨௯ - ௧௬௧ | 168 |
| **III. எட்டுத்தொகை :** | | |
| **(1) நற்றிணை** | | |
| *பெருநகைகேளாய்* | ௧௨௧ | 6 |
| *ஈன்பருந்துயவும்* | ௩ | 66 |
| *தேம்படு சிலம்பின்* | ௨௪௩ | 104 |
| *மன்ற எருமை* | ௮௦ | 204 |
| *கல்லாக்கடுவன்* | ௨௩௩ | 207 |
| *தோளும் அழியும்* | ௩௯௭ | 210 |
| **(2) குறுந்தொகை** | | |
| *மெல்லிய இனிய* | ௩௦௯ | 4 |
| *நெடிய திரண்ட* | ௨௫௨ | 62 |
| *அமர்க்கண் ஆமான்* | ௩௨௨ | 64 |
| *ஓரூர் வாழினும்* | ௨௩௧ | 75 |
| *இதுமற்றெவனோ* | ௧௮௧ | 88 |
| *இல்லோன் இன்பம்* | ௧௨௦ | 122 |
| *அணில்பல் அன்ன* | ௪௯ | 134 |
| *நன்னலம் தொலைய* | ௯௩ | 136 |

| | செய்யுள் அல்லது வரிகளின் எண். | இந்நூலின் பக்க எண். |
|---|---|---|
| கொங்குதேர் | ௨ | 152 |
| வண்டுபடத் | ௨௧ | 153 |
| உள்ளின் உள்ளம் | ௧௦௨ | 155 |
| பறைபடப் பணிலம் | ௧௫ | 171 |
| மள்ளர் குழீஇய | ௩௧ | 211 |
| அமிழ்தத் தன்ன | ௨௦௬ | 213 |
| அழியல் ஆயிழை | ௧௪௩ | 220 |
| வேரல் வேலி | ௧௮ | 181 |

(3) ஐங்குறுநூறு

| | | |
|---|---|---|
| நீலமேனி | (கடவுள் வாழ்த்து) | 1 |

(4) பதிற்றுப்பத்து

| | | |
|---|---|---|
| நன்மரந்துவன்றிய | ௮௫ | 20 |
| பதி பாழாக | ௭௧ : ௧௮ - ௨௭ | 107 |
| தேஎர் பரந்த | ௨௬ | 131 |

(5) பரிபாடல்

| | | |
|---|---|---|
| மாயோன் கொப்பூழ் (பரிபாடல் திரட்டு) | ௭ | 42 |
| கொடியியலார் | ௨௦ : ௯௮ - ௧௦௭ | 44 |
| உலகம் ஒருநிறையா (பரிபாடல் திரட்டு) | ௬ | 178 |

(6) கலித்தொகை

| | | |
|---|---|---|
| தொல்லெழில் | ௨௯ : ௧ - ௯ | 35 |
| பொருந்தியான் | ௧௭ : ௧௮ ௨௧ | 41 |
| ஒன்றிப் புகரினத்து | ௧௦௫ : ௬௬ - ௯ | 77 |
| மன்றப்பனை | ௧௪௨ : ௪௭ - ௫௦ | 123 |
| சொல்லறியா | ௧௧௪ : ௮ - ௧௧ | 125 |
| அஞ்சாதி நீயும் | ௮௪ : ௩௬ - ௪௧ | 127 |
| யார் இவன் | ௮௯ : ௧ - ௯ | 129 |
| பொய்த்தற்குரியனோ | ௪௧ : ௨௧ - ௪ | 142 |
| ஒன்று, இரப்பான்போல் | ௪௭ : ௧ - ௧௧ | 144 |
| இனியான், உண்ணலும் | ௨௩ : ௬ - ௧௩ | 161 |
| வளியே எதிர்போம் | ௧௪௪ : ௪௦ - ௪௪ | 200 |
| பொருளல்லால் | ௧௪ : ௧௦ - ௧௯ | 222 |

## சங்க இலக்கிய

# இன்கவித் திரட்டு

## (மூன்றாம் பாகம்)

## 1. கருத்து

### அம்மை யப்பர்

[கடவுள் ஒருவர்; அவர் அம்மை யப்பராய் இருக்கின்றார்; அவர் அருளாற்றலால் உலகங்கள் தோன்றி இயங்குகின்றன. உமை யொரு பாகராகிய அவரே படைப்பு முதலிய எல்லாவற்றிற் குந் தலைவர்.]

நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே.

—ஐங்குறுநூறு, கடவுள் வாழ்த்து.

"அம்மை யப்பராய் விளங்குங் கடவுள் ஒருவரது திருவருள் ஆற்றலால் கீழுலகு மேலுலகு மண்ணுலகு என்னும் மூவகையுலகுந் தோன்றி நடைபெற்று வருகின்றன" என்பது இச் செய்யுளின் பொருள்.

கடவுள் என்னும் ஒரு முதல், தன் இருப்பினை உணர்த்தும் ஒரு கூறும், தன் ஆற்றலை உணர்த்தும் ஒரு கூறுமாக இரு பகுக்கப்பட்ட ஒரு பொருளாய் விளங்கும் இயல்பினைத் தமிழ் மக்கள் எவ்வாறோ நெடுங்காலத்திற்கு முன்பே கண்டறிந்து, வழிபட்டுவந்திருக்கின்றனர்.

இருப்பினை உணர்த்துங் கூறு ஆண்மை இயல்பாகவும், ஆற்றலை உணர்த்துங் கூறு பெண்மை இயல்பாகவும் இருத்தலை விளங்க அறிந்து, கடவுளை 'அம்மையப்ப' ரெனவும், தமிழ் மக்கள், பெயர் வழங்கி மகிழ்ந்திருக்கின்றனர்.

கடவுள் ஒருவரேயாதலால், இங்ஙனம் உமையொரு பாகராக விளங்கும் அப் பெம்மான்றன் ஆற்றலினாலேயே உலகங்கள் தோன்றி நடைபெறுகின்றன என்றும், படைப்பு அவனால் நிகழ்தலால் ஏனை அளிப்பு அழிப்புக் களும் அவனாலேயே நிகழ்தற்குரியன என்றும் தமிழ் முன்னோர் நன்கு தெளிந்து ஒரு தெய்வ வழிபாட்டில் உறைப்புடையராகவும் விளங்கியிருக்கின்றனர்.

இக் கருத்துக்களெல்லாம் இச் செய்யுளில் விளங்கு கின்றன. எல்லாம் நுண்ணிய மெய்க் கருத்துக்கள்.

**குறிப்புரை :** நீல மேனி வால் இழை - நீலநிறமான திரு மேனியினையுடைய வெண்ணிறமான அணிகலனை அணிந்த உமையம்மையின். பாகத்து - ஒரு கூற்றினையுடைய. ஒருவன் - ஒரு முழுமுதற் கடவுளது. இருதாள் நிழற்கீழ் - இரண்டு திரு வடிகளின் அருளில் ; அங்ஙனங் கூறியது, அவன் அருளாற்ற லால் என்னும் பொருட்டு. மூகிழ்த்தன - அரும்பின ; தோன்றி நடைபெறுகின்றன என்றபடி. (க)

## அருமையும் எளிமையும்

[வாழ்க்கைக்கு இரண்டும் வேண்டும். தேவையைக் கொள்ளு தலும் அல்லாததைத் தள்ளுதலுமே இவ் விரு பண்புகளின் பயன். அருமைக்கு ஆற்றலும் எளிமைக்கு அன்பும் வேண்டும். அருமையும் எளிமையும் வாழ்க்கையில் மதிப்பை யும் இன்பத்தையுந் தருகின்றன.]

ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும எமக்கே ; மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெரும! நின் ஒன்னா தோர்க்கே.

—புறநானூறு, கூச.

ஒரே பொருளை இருவகைப் படுத்தி, இரு வேறுபட்ட இயல்புக்கு அதனை உவமை காட்டிய அழகு இச் செய்யுளில் வருகின்றது. அதுமட்டுமன்று; அதியமான் நெடுமான் அஞ்சியின் கண்ணியம் இச் செய்யுளால் பலமடங்கு மிகுந்து தோன்றுகின்றது. அஞ்சியின் கண்ணியத்தை உவமை அத்தனை மடங்கு பெருக்கியதா, அல்லது, அஞ்சியின் கண்ணியத்தால் உவமைதான் அவ்வளவு அழகு பெறுகின்றதா என்று துணியலாகாதபடி, இச் செய்யுள் அன்பும் அருமையுங் கொண்டு விளங்குகின்றது. ஒளவையாரைப் போன்ற அழகிய திறமையாளரன்றி வேறு யார் இங்ஙனஞ் செய்யுள் செய்ய இயலும்! இச் செய்யுளின் மெருகு இணையற்றதொன்றாய் இருக்கின்றது. ஒளவையார் அஞ்சியைப் நோக்கிச் சொல்கின்றார்:

"பெருமானே! ஒரு பெரிய ஆண் யானையானது, ஊரிலுள்ள சிறு பிள்ளைகள் தனது வெண்ணிறமான கொம்பினைக் கழுவும் பொருட்டு நீர்த்துறையில் அப் பிள்ளைகளின் கைக்கு எட்டும்படி அடங்கிப் பணியும்; அதுபோல, எம்போன்றவர்களுக்கு நீ இனியையாய்த் தாழ்ந்து ஒழுகுகின்றனை; ஆனால் அந்த யானை பிறர் நெருங்கக் கூடாதபடி சில வேளைகளில் மதம்பட்டு விடுவதும் உண்டு; அதுபோல, பெரும! நின் பகைவர்களுக்கு நீ கடுமையானவனாய் வீறி நிற்கின்றனை."

அருமையுடையோர் இங்ஙனம் எளியராய் இல்லையாயின், அவரால் பிறருக்கும் பயனில்லை; பிறரால் அவருக்கும் பயனில்லை என்னுங் கருத்தும் இச் செய்யுளில் விளங்கும்படி இது, இயற்றப்பட்டிருக்கின்றது. ஆனால், அதே நேரத்தில் அவ் வருமையாளரின் கண்ணியத்துக்குங் குறைவு நேராதபடி வல்லமையாய் அக் கருத்துக் குறிக்கப்பட்டிருப்பது மிக்க வியப்பினைத் தருகின்றது.

வேட்டையில் யானை பகை விலங்குகளுடன் போரிட்டுக் கொம்பு கறை படிந்துவிட்டமையால் அதனைப் பிறர் கழுவித் தூய்மை செய்யும் பொருட்டு, அது குளிர்ந்த நீர்த்

துறையிற் படியும். அதியமான் அஞ்சியைப்போன்றாரும், பகை மன்னரொடு போர் செய்தலால் தம்முட் பொங்கிய அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் முதலிய உள்ளக் கறைகளைப் புலவர் பெருமக்களின் குளிர்ந்த நீர்மைகளிற் படிந்து தூய்மை செய்துகொள்ளவேண்டிய கட்டாயத்தில் உள்ளனர். ஆனால், யானையின் கோடு, இயல்பில் வெண்கோடாகும்; அதுபோல், அதியமானைப்போன்றார் இயல்பிற் கறையற்ற தக்கோரேயாவர் என்று அவர் கண்ணியத்திற்குக் குறைவின்றிக் குறித்திருத்தலுங் கண்டு கொள்ளப்படும். இவைபோல்வன இச் செய்யுளின் மெருகுகள்!

**குறிப்புரை:** குறு மாக்கள் - சிறு பிள்ளைகள். கோடு - கொம்பு. கழாஅலின் - கழாலின்; கழுவுதல் காரணமாக. இனியை - இனிமையுடையை. மற்று - ஆனால் என்னும் பொருட்டு. துன் அரு - பிறர் அணுகுதற்கு அரிய. கடாஅம் போல - கடம்பட்ட நிலைமையோல. கடம் - மதம். ஒன்னாதோர்க்கு - பகைவர்க்கு. (உ)

## மக்களியல்பு நல்லியல்பே

[தம்மைத் தாமே மக்கள் தீமையில் செலுத்திக்கொள்வது உலகத்தில் காணப்படுகின்றது. மற்று, மக்கள், இயல்பில் நல்லவர்களே! அன்பும் அறிவும் அவர்கட்கு இயற்கை. தமது நல்லியல்பைக் காத்து வளர்த்துக்கொள்வதே அவர்கள் செய்ய வேண்டுவது. தீமைக்கு இடங்கொடுத்தலாகாது.]

மெல்லிய இனிய மேவரு தகுந
இவைமொழி யாம்எனச் சொல்லினும் அவைநீ
மறத்தியோ வாழிஎன் நெஞ்சே பலவுடன்
காமர் மாஅத்துத் தாதமர் பூவின்
வண்டுவீழ்பு அயருங் கானல்
தண்கடல் சேர்ப்பனைக் கண்ட பின்னே.

—குறுந்தொகை, ௩0௬.

மக்கள் தன்மை இயல்பில் நன்மையுள்ளதாயிருக்கின்றது. இயற்கையில் மக்கள் நல்லவர்களே: பிறரைப் பகைத்

துக்கொள்ளவேண்டும் என்று துணிவு கொண்டாலும் இடையில் உள்ளம் நெகிழ்ந்துவிடுகின்றது. காரணம், உயிர்களுக்கு இயற்கையிலேயே அறிவும் அன்பும் அமைந் திருப்பதனாலேதான்.

தலைவன் விரைவில் வரைந்துகொள்ளாமல் இடை விட்டுவிட்டு வந்துபோவது தலைவிக்குப் பிரிவாற்றியிருக்க முடியவில்லை. வீட்டிலுள்ளாரது காவல் மிகுதி அத் துன்ப நிலையினைப் பின்னும் மிகுதியாக்குகின்றது. அடுத்தபடி தலைவன் வந்தால், மெல்லிய இனிய விரும்பத்தக்க மொழிக ளால் அவனோடு பேசக்கூடாது என்று தனது நெஞ்சத் தோடு சொல்லித் தீர்மானித்துக்கொள்கின்றாள்.

ஆனால், தலைவனைக் கண்டபின் அவள் நெஞ்சத்தி லுள்ள அன்பானது முன் தீர்மானத்தை மறந்துவிடு கின்றது. 'நெஞ்சே, மெல்லிய இனிய மேவருதகுநவாகிய இவை மொழியாம் எனச் சொல்லினும், சேர்ப்பனைக் கண்டபின் நீ மறத்தியோ' எனத் தலைவி தனது நெஞ்சைக் கேட்பதனால் என்ன பயன்?

மக்களின் இயற்கை பகைகொள்ளும் இயல்பாயில் லையே! அதற்கு நெஞ்சந்தான் என்ன செய்யும்?

**குறிப்புரை:** மெல்லிய - ஓசை மெல்லிய சொற்கள். இனிய- கருத்தால் இனிய சொற்கள். மேவரு தகுந - விரும்பத்தக்க சொற்கள். இவை - ஆகிய இந் நல்ல சொற்களை. மறத்தியோ - மறந்துவிடுகின்றனையோ. வாழி என்பதற்கு இங்கே பொரு ளில்லை; அசை. காமர் மாஅத்து - அழகிய மாமரத்தின். தாது அமர் பூவின் - மகரந்தப் பொடிகள் பொருந்திய பூக்களில். பல வுடன் வண்டு வீழ்பு அயரும் கானல் தண் கடல் சேர்ப்பனை - வண்டுகள் பல ஒருங்கே வீழ்தலைச் செய்யும் சோலையையுடைய குளிர்ந்த கடற்கரைத் தலைவனை. 'பலவுடன்......சேர்ப்பனை' என்றது, தலைவனை என்னும் பொருட்டு. வீழ்பு - வீழ்தலை; வீழ்ந்து தேன் நுகர்தலை. அயரும் - செய்யும். கானல் - சோலையையுடைய. சேர்ப்பனைக் கண்டபின் நெஞ்சே அவை நீ மறத்தியோ என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (ரு)

## மென்மையின் இயல்பு

[எப்போதுமே ஆற்றல் மிக்கவையெல்லாம் மிக்க மென்மை யுடையவை. அவற்றைக் காத்துப் போற்றிக்கொள்வதுதான் மிகவும் அருமை. அங்ஙனம் போற்றிக்கொண்டால் மட்டும், அவற்றாற் பின்பு பெருஞ் செயல்களெல்லாம் நிகழக் காணலாம். ஆனால், மயிரிழை யளவும் விழிப்பின்றி இருக்க முடியாதே.]

பெருநகை கேளாய், தோழி! காதலர்
ஒருநாள் கழியினும் உயிர்வேறு படூஉம்
பொம்மல் ஓதி! நம்இவண் ஒழியச்
செல்ப என்ப; தாமே சென்று
தம்வினை முற்றி வரூஉம்வரை நம்மனை
வாழ்தும் என்ப; நாமே அதன்றலைக்
கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனிப்பப்
படுமழை உருமின் உரற்றுகுரல்
நடுநாள் யாமத்தும் தமியம் கேட்டே.

—நற்றிணை, கஉகூ.

மென்மை ஆற்றலுள்ளதுதான்; ஆனால், அந்த மென்மையை நிலைப்பித்துக்கொள்வது மிக்க அருமையாயிருக்கின்றது.

தலைவன் தலைவியரது உயிர் அன்பிற்கறைந்து மென்மை வாய்ந்து விளங்குகின்றது; தலைவியின் உயிர் இன்னும் மென்மை வாய்ந்ததுதான். ஆனால், தலைவன் ஏதேனும் வினை காரணமாகப் பிரியும்படி நேர்ந்தால், தலைவியின் உயிர் அதன் மென்மை நிலைக்கேற்ப உடனே அவள் உடலைவிட்டுப் பிரிந்துவிடுவதாயிருக்கின்றது.

இயற்கைத்தன்மை அவ்வாறிருப்பதனால், தலைவன் கூடிய வரையில் தலைவியைப் பிரியாதிருந்து இல்லறம் நிகழ்த்துதற்கே முயல்வான். அருமை அறியாமல் அவன்

பிரிவோனாயிருந்தால், அப்போது அவன் செயல் பெரு நகைக்கு இடமாகவே இருக்கும்.

ஒருநாள் ஏதோ கட்டாயம் நேர்ந்து தலைவன் பிரியும்படி நேர்ந்தது. மெல்லத் தோழிக்குத் தன் கருத்தைப் புலப்படுத்தினான். இப்படிப்பட்ட நேரத்தில் தலைவியை ஆற்றிக்கொண்டிருக்க வேண்டிய பெரும் பொறுப்புத் தோழிக்கு நேர்ந்து விடும். அதற்காக அவள் தலைவியின் கருத்தைத் தன்முகமாகத் திருப்பித் தன் சொல்வழி இயங்கும்படி நிறுத்திக்கொள்ளவேண்டிய கட்டாயம் அவளுக்கு உண்டு.

அதற்காக, தோழி தலைவியினிடம் சென்று அவளுக்கு ஆதரவாகவே பேசுவதுபோலப் பின்வருமாறு சொல்லுகின்றாள் :

"தோழி, காதலர் ஒருநாள் பிரிந்தாலும் உயிர்த் தன்மை வேறுபடுகின்ற தலைவீ! பெருநகைக்கு இடமான நம் தலைவரது செய்தி ஒன்றைக் கேள்; நம்மை இங்கே விடுத்து அவர் வினை காரணமாகப் பிரிந்து செல்வார் என்று சொல்லுகிறார்கள். அவர், தனியாகச் சென்று தம் காரியம் நிறைவேற்றி வரும் வரையில், பாம்பின் தலை நடுங்கும்படி முழங்கும் இடி முழக்கத்தை நள்ளிரவிலும் நாம் இந்த மனையில் தனித்திருந்து கேட்டுக்கொண்டு உயிர் வாழ்ந்திருக்கவேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். எப்படி இருக்கின்றது செய்தி?'' என்பது.

'அவ்வளவு வன்மையுடையபதா நமது உயிர்; இவர், மென்மையைப் போற்றாத ஆடவராயிருக்கின்றாரே' என்று தோழி கருதுவதாகத் தெரிகின்றது. அந்நிலை நகைத்தற்குரிய நிலையென்று அவள் இதன்கண் புலப்படுத்தியிருக்கின்றாள்..

மென்மையின் இயல்பு அவ்வாறிருந்தால் அதற்கு யார்தான் என்ன செய்யலாம்?

குறிப்புரை: கழியினும் - பிரியினும். உயிர் - உயிர்த்தன்மை. பொம்மல் ஓதி - பொலிவு மிக்க கூந்தலையுடைய தலைவீ. நம் -

நம்மை. ஒழிய - ஒழியவிட்டு. தாமே - தாம் ஒருவரே; தனியாக என்றபடி. வினை - காரியம். முற்றி - முடித்து. நம் மனை - நமது மனையில். வாழ்தும் - உயிர்வாழ்வேம்; உயிர் வாழ்ந்திருக்கக்கடவேம்; அதாவது, உயிர்வாழ்ந்திருக்கவேண்டும் என்றபடி. அதன்தலை - அதன்மேல்; 'செல்ப என்ப; அதன் மேல், நம் மனை நாம் வாழ்தும் என்ப' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும். கேழ் கிளர் உத்தி அரவு - நிறம் மிக்க படத்தின் புள்ளியையுடைய பாம்பு. பனிப்ப - நடுங்கும்படி. படு மழை உருமின் உரற்று குரல் - மழை பெய்யும்போது தோன்றும் இடியினுடைய முழங்கும் ஓசையை. படு - தோன்றும் என்றபடி. நடு நாள் யாமம் - நாளின் நடுவாகிய நள்ளிரா நேரத்திலும். தமியம் கேட்டு - தனிமையுடையேமாய் இருந்து கேட்டுக்கொண்டு. 'கேட்டுக்கொண்டு நம் மனை நாம் வாழ்தும் என்ப' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். (௪)

## உறுதிப் பொருள்கள்

[மக்கட் பிறவியின் உறுதிப்பொருள்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு என்பர். அறத்தின் பயன், வீடு; பொருள் இன்பங்களின் பயன், அறம். வீடு, கடவுள் வழிபாட்டினால் உண்டாவது; அறம், நல்லார் இணக்கத்தினால் உண்டாவது; பொருள், தொழிலால் உண்டாவது; இன்பம், பெண்மையினால் உண்டாவது. இச் செய்யுளில் இப் பொருள் வரம்புகள் இனிது விளக்கப்பட்டிருக்கின்றன.]

பணியிய ரத்தைநின் குடையே, முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே;
இறைஞ்சுக பெரும! நின் சென்னி, சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே;
வாடுக இறைவ! நின் கண்ணி, ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை எறித்த லானே;
செலிய ரத்தைநின் வெகுளி, வாலிழை
மங்கையர் துனித்த வாள்முகத் தெதிரே;
ஆங்க, வென்றி யெல்லாம் வென்றகத் தடக்கிய
தண்டா ஈகைத் தகைமாண் குடுமி!

தண்கதிர் மதியம் போலவும் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெரும! நீ நிலமிசை யானே.

—புறநானூறு, சு: கஎ - உக.

பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பவன் தமிழ்நாட்டின் மிகப் பழைய மன்னன். அவன் காலத்திற் காரிகிழார் என்னும் சிவநேய மிக்க புலவர் பெருமான் ஒருவர் இருந்தார். முதுகுடுமிப் பெருவழுதி பற்பல வேள்விகள் செய்து பெருமையுற்றவன். அவன் இங்ஙனம் தெய்விக ஒழுக்கமுடையவனாய் விளங்கினமையால், அவன்பால் காரிகிழார் நேயமுடையராய் அளவளாவி மகிழ்ந்திருந்தார். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகை உறுதிப்பொருள்களிலும் அவன் சிறந்து விளங்கவேண்டும் என்பது காரிகிழார் கருத்து. அவர் வழுதியை நோக்கிப் பின் வருமாறு சில செவியறிவுறுத்து, ஓர் வாழ்த்துங் கூறினார்:

"பல போர்களை வென்று, அவ்வென்றியெல்லாம் வியவாது அகத்தே அடக்கிய தணியாத வண்மையையுடைய தகுதி மாட்சிமைப்பட்ட முதுகுடுமி! நின் கொற்றக் குடை, சிவபிரான் திருக்கோயிலை வலஞ்செய்தற்குத் தாழ்க! நினது முடி, முனிவர் நின்னை வாழ்த்துதற்கு எடுத்த கையின் எதிரே வணங்குக! நினது மாலை, நீ பகைவரது நாட்டினைச் சுடுதலால் உண்டான புகை உறைத்தலால் வாடுக! நின் சினம், நின் தேவியருடைய ஊடல் கொண்ட ஒளிமுகத்தெதிரே தணிக!

"இங்ஙனம் தண்கதிர் மதியம்போல் அருளோடும், ஒண்கதிர் ஞாயிறுபோல் வீரத்தோடும வீடும், அதற்குக் காரணமான அறம் பொருள் இன்பங்களுஞ் சிறந்து இவ்வுலகில், பெரும! நீ நீடு நிலைபெறுக!"

காரிகிழார், முதுகுடுமியின் மாட்டு வைத்திருந்த அன்பும் நேயமும் இந்த அறிவுரையினாலும் வாழ்த்தினாலும் இனிது விளங்குகின்றது.

திருக்கோயிலை வலம் வருக என்றதனால் வீடும், முனி வர் வாழ்த்துக்கு வணங்குக என்றதனால் அறமும், பகை வர் ஊர்களைச் சுடுதலாற் கண்ணி வாடுக என்றதனால் பொருளும், தேவியர்பாற் சினந் தணிக என்றதனால் இன்பமும் அறிவுறுத்தியபடியாகும்.

குடை இன்னதற்குத் தாழ்க, முடி இன்னதற்கு வணங்குக, மாலை இன்னதற்கு வாடுக, சினம் இன்னதற் குத் தணிக எனக் கூறியதனாற் பிறவிடங்களிற் குடை தாழாமையும், முடி வணங்காமையும், மாலை வாடாமை யும், சினம் தணியாமையுமான வழுதியின் தலைமையியல்பு கள் இனிது பெறப்பட்டன. இன்னின்ன இடங்களில் மட்டும் அவை தாழ்தல் முதலியன கொண்டு நலனுறுக என்றமையால், இப் பொருள் மிக்க ஆற்றலோடு பெறப்படு கின்றது.

முழுமுதற் கடவுளின் வழிபாட்டினால் வீடுபேறும், முனிவர்கள் தொடர்பினால் அறமும், தொழிலாற் பொரு ளும், பெண்மையால் இன்பமும் உண்டாகும் என்று இச் செய்யுளில் வரும் பொருள் வரம்புகள் மிகவும் நுண் ணுணர்ந்து கருத்திருத்திக் கடைப்பிடிக்கற்பாலன.

**குறிப்புரை :** பணியியர் - பணிக ; தாழ்க. அத்தை, அசைச் சொல் ; இதற்குப் பொருளில்லை. முனிவர் முக்கட் செல்வர் நகர் - முனிவரால் வணங்கப்படும் மூன்று திருக்கண்களையுடைய செல்வராகிய சிவபிரானது திருக்கோயிலை. நகர் - கோயில். இறைஞ்சுக - வணங்குக. சென்னி - முடி. முனிவர் ஏந்து கை - முனிவர் வாழ்த்துதற்கு எடுத்த கையின். இறைவ - அரசே ; கண்ணி - தலைமாலை. ஒன்னார் நாடு - பகைவரது நாட்டை. சுடு - சுடுகின்ற. கமழ் புகை - பல வகையான மணங்கள் கமழு கின்ற புகையானது. எறித்தலான் - உறைத்தலால். செலியர் - செல்லுக ; அதாவது, தணிக. வால் இழை - வெண்ணிறமான அணிகலன் ; என்றது, முத்துமாலை போல்வன. மங்கையர் துனித்த - நின் தேவியரது துனிகொண்ட. துனித்தல் - ஊடு தல். ஆங்க, அசைச்சொல் ; இதற்குப் பொருளில்லை. வென்றி யெல்லாம் வென்று - பல வகையான வெற்றிகளையெல்லாம் வென்று. அகத்து அடக்கிய - அவற்றை வியந்து பாராட்டிக்

கொள்ளாமல் அகத்தே உட்கொண்ட. தண்டா - குறையாத. தகை மாண் - தகுதி மாட்சிமைப்பட்ட. குடுமி - முதுகுடுமிப் பெருவழுதியே! தெறு சுடர் - சுடுகின்ற தீப் பொருந்திய. மன்னிய - நிலைபெறுக; நிலமிசை - உலகத்தில். 'நகர்வலஞ் செயற்குக் குடை பணியியர்; கையெதிரே சென்னி இறைஞ்சுக; புகை எறித்தலான் கண்ணி வாடுக; வாண்முகத்தெதிரே வெகுளி செலியர்; குடுமி! நீ நிலமிசை மதியம்போலவும் ஞாயிறுபோலவும் மன்னிய!' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும்.

## நற்செயலும் தீச்செயலும்

[நல்லோர்க்கு ஆக்கஞ்செய்வது நற்செயல்; தீயோர்க்கு ஆக்கஞ் செய்வது நற்செயலாகாது. தீயோரை ஒறுத்துத் திருத்துதலே நற்செயலாகும். ஒறுக்கும்போது நினைவு சொற் செயல்களுக்கு உண்டாகும் வன்மைத்தன்மை, நல்லோர்க்கு உதவும் நற்செயல் வகையினுல் பண்பட்டுவிடும்.]

பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது விறல்மாண் குடுமி!
இன்னு வாகப் பிறர்மண் கொண்டு
இனிய செய்திநின் ஆர்வலர் முகத்தே.

—புறநானூறு, கஉ.

கடமை செய்தலில், பல ஐயங்கள் உண்டாகக்கூடும். மக்கள் செயலை, மக்களில் தக்கோர் செயலையுங்கூட, உற்று நோக்கினுல் சிலர்க்கு நன்மை செய்வதுபோலவும் சிலர்க்குத் தீமை செய்வதுபோலவும் தோற்றும். அரசர்களில் நல்லோராய் இருப்பவர்களும் பகை யரசரைப் போரில் அழித்து அவரிடமிருந்து பொருள்களைக் கொள்ளைகொள்கின்றனர். தமக்கு அன்பராயிருப்பவர்கட்கு அப்பொருளை வழங்கி இன்பஞ் செய்கின்றனர். இங்ஙனமெல்லாம் ஒரு சாரார்க்குக் கெடுதி செய்து, அக் கெடுதியினுல் வரும் ஆக்கத்தைக் கொண்டு மற்றொரு சாரார்க்கு நன்மை செய்வது எப்படி நன்மையாகும் என்று ஐயந் தோன்றுமன்றோ?

ஒரு கருத்தினை இங்கு நன்ருக உற்றுக் கருதுதல் வேண்டும். தீமையை அழிப்பதும் நல்ல செயலே என்பதுதான் அது. ஆதலால், தீயோரைத் திருத்துதலாகிய நல்ல செயலைச் செய்தே அந் நல்ல செயலால் உண்டாகின்ற ஆக்கத்தைக் கொண்டு இயல்பாகவே நல்லவர்களாயிருக்கின்றவர்களுக்கு உதவிகள் பல செய்தல் உலகத்தில் தக்கோரிடமெல்லாம் நிகழ்கின்றன. இதனுல், இரு வேறிடங்களில் நிகழ்ந்த இரு வகைச் செயல்களும் நற்செயல்களேயாதல் துணிந்துகொள்ளப்படும்.

மேலும், தீயோர்களை அழிப்பது நற்செயலேயாயினும், அழித்தல் என்னுஞ் செயலால் நினைவு சற்றேனும் வன்மைகொள்ளவுங் கூடும். அதனுலேதான், அத்தகைய வழியில் வருகின்ற பொருளைப் பெரும்பாலும் தானும் பயன்படுத்தாமல், ஏனைப் பொதுமக்களுக்கும் வழங்காமல், கலைஞர், புலவர் முதலிய உயர்ந்த சான்ருேர்கட்கே உதவுதல் வழக்கமாயிருக்கின்றது. ஏனென்ருல், அவர்கள் இயல்பிலேயே அறிவாற்றலும் மெய்யுணர்வும் வாய்ந்த நல்லோர்களாயிருத்தலால், அப் பொருளால் அவர்களுக்கும், வழங்கியவர்களுக்கும் ஏதும் வன்மை நிகழாமற் போகின்றது

இக் கருத்துக்களெல்லாம் அமைய, நெட்டிமையார் என்னும் புலவர், முதுகுடுமி என்னும் மாபெரும் பாண்டி வேந்தனை நோக்கி, பழிப்பதுபோலப் புகழ்ந்து,

"குடுமி! பாணர் என்னும் இசைவல்லார் நின்னுல் வழங்கப்பட்ட பொற்ருமரைப் பூவைத் தம் நெற்றியில் சூட்டிக்கொள்ளவும், புலவர்கள் நின்னுல் தரப்பட்ட தேரில் ஏறுதற்கு ஆயத்தஞ் செய்யவும், பிறர் நாட்டை அவர்கட்குத் துன்பமுண்டாகும்படி கொள்ளைகொண்டு நினக்கு வேண்டியவர்களாகிய இவர்களிடத்தில் இங்ஙனம் இனிமை செய்கின்றனையே; அறந்தானு இது?" என்று வினவுவதுபோல இச் செய்யுளை இயற்றியிருக்கின்ருர்.

முதுகுடுமி, எவ்விடத்தும் நற்செயல்களையே செய்கின்றான் என்பதன்றோ புலவர் கருத்து. குடுமியின் வீரத்தையும் கொடையையும் இங்ஙனம் அவர் பாராட்டியிருக்கின்றார்

குறிப்புரை: பாணர் - இசைப்பாட்டுப் பாடுவோர். அவர்கட்குப் பழைய அரசர்கள் தாமரை மலரைப்போலப் பொன்னாற் செய்து அணிவிப்பது வழக்கம். அந் நிகழ்ச்சியே இங்குத் 'தாமரை மலையவும்' என்பதனாற் குறிப்பிடப்பட்டது. மலையவும்-சூடவும். புலவர்கட்கு யானைகளும் தேர்களும் வழங்குவது மரபு. புலவரிற் சிலர் யானைமேல் ஏறவும் சிலர் தேரின்மேல் ஏறவும் ஆயத்தஞ் செய்கின்றனர் என்பது இரண்டாவது வரியின் கருத்து. பூ - பட்டம்; நுதல் - இங்கே, தலை; பட்டத்தை யணிந்த மத்தகத்தையுடைய என்பது கருத்து. புனை தேர் - அணி செய்யப்பட்ட தேரினை. யானையொடு தேர் பண்ணவும் - யானைகளையும் தேர்களையும் ஏறுவதற்குப் புலவர்கள் ஆயத்தம் பண்ணவும் என்றபடி. இங்ஙனம் பாணர்கள் சூடவும் புலவர்கள் ஆயத்தம் பண்ணவும் அவர்களுக்கு அவற்றை வழங்கி இனிய செய்கின்றனை என்று உரைத்துக்கொள்ளவேண்டும். அறனோ மற்று இது - அறனோ இது; மற்று, அசை. விறல் மாண் - வெற்றி மாட்சிமைப்பட்ட. இன்னா ஆக - துன்பங்கள் உண்டாக. பிறர் - பகைவர்களின். மண் - நாட்டை. கொண்டு - கொள்ளைகொண்டு. இனிய - இனிய கொடைச் செயல்களை. செய்தி - செய்கின்றனை. ஆர்வலர் முகத்து - நினக்கு அன்பர்களிடத்து. 'குடுமி! பிறர் மண் கொண்டு, பாணர் தாமரை மலையவும், புலவர் தேர் பண்ணவும், நின் ஆர்வலர்முகத்து இனிய செய்தி. அறனோ இது' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். (சு)

## குடிகளின் ஒற்றுமை

[அரசன் ஆட்சியைப் பொறுத்தே குடிமக்களுக்கு அன்பு பெருகும். அரசன் தன் குடிமக்களைக் காக்கும் வகையில் பெரு வீரனுச் செயல்கள் செய்யும்போது அவனுக்கு ஏதாவது ஒரு துன்பம் நேர்ந்துவிடுமானால், அவனிடம் அன்புள்ள குடிமக்கள் உண்ணவும் மனங் கொள்ளார். அப்படி அவர்கள் உள்ளம் அரசனோடு பிணிப்புற்றிருக்கும் என்ப.]

கொய்அடகு வாடத் தருவிற குணங்க
மயிலஞ் சாயல் மாஅ யோளொடு

பசித்தன் றம்ம பெருந்தகை யூரே,
மனையுறை குரீஇக் கறையணற் சேவல்
பாணர் நரம்பின் சுகிரொடு வயமான்
குரற்செய் பீலியின் இழைத்த குடம்பைப்
பெருஞ்செய் நெல்லின் அரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்
யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

—புறநானூறு, ௩௧௮.

அரசனுக்கு ஒரு துன்பம் வந்தால்; ஊர் முழுதும் உண்ணுமல் பசியோடு இருக்குமாம். அரசனுக்கும் குடிமக்களுக்கும் இவ்வாறன்றோ ஒற்றுமை இருக்கவேண்டும்! கறி சமைப்பதற்குப் பறித்த கீரை அப்படியே கிடந்து வாடும்; வெளியிலிருந்து கொண்டுவந்த விறகு அடுக்களைக்குச் செல்லாமல் அப்படியே முற்றத்திற் கிடந்து உலர்ந்து முறியும். மயில்போன்ற மென்மையும் அழகு நிறமுமுடைய இல்லக்கிழத்தியரும் வேந்தனுக்கு வந்த இன்னலை நினைந்து, உண்ண மனங்கொள்ளார். இப்படி ஊரே பசித்துக் கிடக்குமாம். என்ன வியப்பு!

ஆனல், ஊரில் வளத்துக்கு ஒன்றுங் குறைவில்லை. அவ்வப்போதும் புது வருவாய் உடையதுதான். வேந்தன் துயரை உணரும் குடிமக்கள் தாம் வருத்தத்தாற் பட்டினி. மற்று, மனையில் உறையும் குருவிகள், பாணர்களின் வகிர்ந்த யாழ் நரம்புகளைப்போலவும் சிங்கத்தின் பிணைப்புற்ற பிடரிமயிரைப் போலவும் தாம் இழைத்த கூட்டினுள்ளே அகன்ற கழனிகளின் நெல்லரிசியைக் கவலையின்றிக் கொறித்துத் தின்றுகொண்டு தம் பெண் குருவிகளுடன் மகிழ்வோடு வதியும். அத்தகைய புதிய வரும்படி மிக்க ஊர்தான்.

இருந்தாலும் தம் உயிரன்ன அரசனுக்கு ஒரு துன்பம் என்றல், அன்பிற் சிறந்த குடிமக்கள் மனம் எவ்வாறு உண்டுடுத்து மகிழ முடியும்! அன்பு இங்ஙனமன்றோ உள்

ஞர அமையும்படி குடிமக்களும் அரசனும் இணங்கி விளங்குதல் வேண்டும்!

**நுற்ப்புரை:** கொய் - பறித்த. அடகு - கீரை. தரு - கொண்டுவந்த. உணங்க - உலர. சாயல் - மென்மை. மாயோள் - அழகு நிறமாகிய மாமை நிறமுடைய மனைவி. பசித்தன்று - பசித்தது. அம்ம, வியப்புக் கருத்தில் வந்த இடைச்சொல். பெருந்தகை - பெருந்தகையோனான அரசனது. குரீஇ - குருவி யாகிய; குருவியாகிய சேவல் என்றபடி. சேவல் - இங்கே குருவி யின் ஆண். கறை அணல் - கழுத்தில் கறுப்பு நிறமாகிய கறையை யுடைய. நரம்பின் சுகிரொடு - பிரிவுபட்ட நரம்பையும். வய மான் - சிங்கத்தின். குரல் செய் பீலியின் - கொத்தாய்ப் பிணைந்த பிடரி மயிராகிய தோகையையும் போல. நரம்பையும் பீலியை யும்போல இழைத்த குடம்பை என்பது. குடம்பை - கூட்டில். செய் - கழனியில் விளைந்த. நெல்லின் அரிசி - நெல்லோடு அரிசியை. கழனியில் விளைந்த நெல்லும் வீட்டில் உள்ள அரிசி யும் என்றபடி. ஆர்ந்து - நிரம்ப உண்டு. புன் புறம் 'பேடை யொடு - சாம்பலைப் போன்ற முதுகினையுடைய பெட்டைக் குருவி யோடு. புன் - புற்கு என்னும் நிறம்; இங்கே அது சாம்பல் நிறத்தை உணர்த்தும். வதியும் - உறைகின்ற. யாணர்த்தாகும் வேந்து - அத்தகைய புது வருவாயினையுடையவனான தம் வேந் தன். விழுமுறின் - விழுமம் உறின்; ஒரு துன்பம் உற்றால். 'வேந்து விழுமுறின் அப் பெருந்தகை ஊர் பசித்தது; இஃ தென்ன வியப்பு' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். ஒரு வீரனான அரசனின் ஆண்மைச் சிறப்பை விரித்துரைக்கும் வகை யில், அவன் ஊரையும், மனையையும், இயல்பையும் இங்ஙனம் விளக்கும் வகையும்ஒன்று. இவ்வாறு விளக்கி அவ் வீரனைப் புகழும் முறையை 'வல்லாண் முல்லை' என்று புறத்திணை இலக் கண ஆசிரியர்கள் கூறுவர். (எ)

### நாட்டின் நலம்

[நாட்டின் நலம் நல்லோர்களாலேதான் அமைகின்றது. மக்கள் அதனை அறிந்தொழுகவேண்டும். நல்லோரை இழந்த நாடு துன்பத்தில் உழலும். கிடைத்தற்கரிய நல்லோர்களான பிசி ராந்தையார் கோப்பெருஞ்சோழன் முதலியோரை ஒரு காலத் தில் இந் நாடு இழந்தது மிகவும் இரங்கற்பாலது.]

நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே,
எனைப்பெருஞ் சிறப்பினோடு ஈங்கிது துணிதல்;

அதனினும் மருட்கை யுடைத்தே, பிறன்நாட்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி [டுத்
இசைமரபாக நட்புக்கந் தாக
இனையதோர் காலை ஈங்கு வருதல்;
வருவன் என்ற கோனது பெருமையும்,
அதுபழு தின்றி வந்தவன் அறிவும் [றே;
வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்
அதனால், தன்கோல் இயங்காத் தேயத்து உறை
[யும்
சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்றிசை
அன்னோனை இழந்த இவ் வுலகம்
என்னாவதுகொல்? அளியது தானே.

—புறநானூறு, ௨௧௭.

கோப்பெருஞ் சோழன் தன் மக்கள் செய்த பொருந்தாச் செயலினால் மானந்தாங்காது வடக்கிருந்து உயிர் துறந்தான். சோழனுக்கு உயிர் நண்பர் பாண்டிநாட்டில் பிசிர் என்னும் ஊரிலுள்ள 'பிசிராந்தையார்' என்பவர். இருவரும் ஒருவரையொருவர் நேரிற் காணாமலே உணர்ச்சியொத்து உயிர் நண்பராயிருந்தனர். சோழன், தான் உயிர்விடும்போது, பிசிராந்தையாரும் இங்கு வந்து உயிர் விடுவர் என்று கூறியிருந்தான். அவன் கூறியபடியே பிசிராந்தையார் வந்தார். அப்போது சோழனுக்கு மற்றொரு நண்பரான பொத்தியார் என்பவர் வியப்புமீதூர்ந்து பாடிய செய்யுள் இது. அவர் வியந்து கூறிய பொருள் வருமாறு :

'கருதுங்காலை, கோப்பெருஞ்சோழன் எவ்வளவோ பெரிய சிறப்புக்களோடு கூடியிருந்தும் அச் சிறப்புக்களைத் துறந்து இங்கே புறங்காட்டில் வந்து உயிர்விடத் துணிதல், வியப்பினையுடைத்து.

அதனினும் வியப்பினையுடைத்து, வேற்றரசனது நாட்டில் விளக்கம் அமைந்த சான்றோனாகிய பிசிராந்தையார், புகழே சிறப்பாக நட்பே பற்றுக்கோடாகப் போற்றி இத்தகையதொரு துன்பமான நேரத்தில் இங்கே தாமும் உயிர்விடும்பொருட்டு வருதல்.

பிசிராந்தை கட்டாயம் வருவன் என்ற கோப்பெருஞ் சோழனது மெய்யுணர்வுப் பெருமையும், அச்சொல் பழுதாகாதபடி அப்படியே வந்துவிட்ட பிசிராந்தையின் மெய்யுணர்வும் வியக்குந்தோறும் வியக்குந்தோறும் வியப்புகையிகந்து செல்கின்றது.

ஆதலால், தன் ஆட்சி இயங்காத பாண்டிநாட்டில் வாழும் சான்றோனை பிசிராந்தையாரின் உள்ளம் தன்னிடம் பொருந்தப்பெற்ற பழைமையாகிய புகழையுடைய அத்தகைய கோப்பெருஞ் சோழனை இழந்த இந்த நாடு இனி எத்தகைய துன்பத்தை அடையுமோ, இது இரங்கத்தக்கது !'

இச் செய்யுட் பொருள் எவ்வளவு வியப்பும் உருக்கமும் வாய்ந்ததாயிருக்கின்றது ! பிசிராந்தையாரைச் சான்றோன் என்றே பொத்தியார் வாய் குளிரக் கூறுகின்றார். அத்தகைய மேலோரது நெஞ்சத்தைக் கோப்பெருஞ் சோழன் தனக்கு உரிமையாகப் பெற்றதை அவனுக்கு ஒரு பெருமையாக எடுத்து மொழிகின்றார். அத்தகைய பெருமையையுடைய சோழனை இழந்த நாடு இனி என்னாகும் என்று இரங்குகின்றார். இதனால், பிசிராந்தையாரின் நிலை மிகவும் பெரியதென்று தெரிகின்றது. அப்படிப்பட்ட பெரியோரும், அவருள்ளத்தையுந் தன்பால் ஈர்த்துக்கொண்ட நல்லோனை சோழனும் நீங்கியதனால், நாடு பெரிதும் இழப்புடையதாயிற்று. நல்லோரால் நாடு நலம் பெறுதலை அறிந்தோர், அவர் இல்லாது மறைதற்கு இரங்காதிரார். அவ்வாறு இரங்கிய அறிஞரே பொத்தியார். அவ்வளவு அருமை அறிந்தவரானதனாலேதான் அவரும் அவர்களோடு பின்பு வடக்கிருந்து உயிர் துறப்பா

ராஞர். நேயவுணர்வுதான் எவ்வளவு பிரிவாற்ருததா யிருக்கின்றது !

குறிப்புரை : மருட்கை - வியப்பு. 'துணிதல் மருட்கை யுடைத்தே' என்று கூறிக்கொள்ள வேண்டும். எனை - எவ்வளவோ. சிறப்பினேடு - சிறப்புக்களோடு கூடியிருந்தும். இது - இங்ஙனம் பற்றுவிட்டு உயிர் துறத்தலை. பிறன் - அயலரசனுகிய பாண்டியனது. தோற்றம் - விளக்கம். போற்றி - கருத்தாகப் பாதுகாத்து ; புகழையும் நட்பையும் போற்றி என்பது. மரபாக - மேம்பட்ட தன்மையாக. கந்தாக - பற்றுக்கோடாக. காலை - காலத்தில். கோனது - அரசனது. தன் கோல் - தன் ஆட்சி. உறப் பெற்ற - தன்னிடத்தில் உறப்பெற்ற. தொன்று இசை - பழைமையாகிய புகழினையுடைய. அன்னேனை - அத்தகைய பெருமையுடைய கோப்பெருஞ் சோழனை. அளியது தான் - தான் அளியது ; இஃது இரங்கத்தக்கது. (அ)

### காலத்தில் திருமணம்

[பெற்ருேரும் மற்ருேரும் கருதவேண்டிய முதன்மையுடையது இது. வீரம், தன்மானம் முதலியன தேவையே. எனினும், காதலர்க்குள் காலத்தில் திருமணம் நிகழ்தற்கு எவையுந் தடையிருத்தல் ஆகாது. அதனல், காதலர்க்கே யன்றி ஊர்க்கும் இடையூறுகள் உண்டு.]

நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே ; தந்தையும்
நெடிய அல்லது பணிந்துமொழி யலனே ;
இஃதிவர் படிவ மாயின், வையெயிற்று
அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்கா யினள்தான் பிறந்த ஊர்க்கே.

—புறநானூறு, ந௪௯.

மங்கையர்க்குக் காலத்தில் மணம் நிகழ்ந்துவிடல் வேண்டும். அதற்குப் பெற்ருேரும் மற்ருேரும் தடையா யிருத்தல் ஆகாது.

அரசர்குடியில், ஒருவருக்கொருவர் சில நேரத்தில் பகை காரணமாகத் திருமணம் நிகழ்வதற்குத் தடையா யிருப்பர். ஓர் அரசிளைஞன் தக்க வீரனுயிருப்பான். பெண்ணின் உள்ளங் கவர்ந்தவனுகவும் இருப்பான். பகை காரணமாகப் பெண்ணின் தந்தை தடையாயிருத்தலும் உண்டு. இங்ஙனம் பலவகையான காரணங்களால் மகட் கொடை மறுத்தல் நேரலாம். நின் மகளைத் தருக என்னும் அரசனோடு பெண்ணின் தந்தை இங்ஙனம் மாறு பட்டு நிற்றலை 'மகட்பாற் காஞ்சி' என்று முன்னோர் வழங்கினர்.

ஒருவருக்கொருவர் மாறுபட்டு நிற்கும் இவர்கள் குழறுபடையில், பெண்ணின் மணம் காலத்தில் நிகழாமல் தடைப்படுவதும், அதனுல் இளைஞர் பலர்க்கும் நெஞ்சு ஊசலாடுவதுந்தான் கண்ட பயன். பெண்ணோ தக்க பெண்மை நலம் வாய்ந்து, கண்டாரை வருத்துந் தெய்வம் போன்று விளங்குகின்றனள். ஒரு பெரிய மரத்தில் சிறு தீப் பொறி பட்டால் மரம் என்ன ஆவது? தான் பிறந்த ஊர்க்கு இங்ஙனம் அவள் அணங்காயிருக்கிறுள்.

மதுரை மருதனிளநாகனர் நாட்டில் இங்ஙனம் நிகழும் நிலைகண்டு இரங்குகின்றுர். சீர்திருத்தம் விரும்பி அவர் கூறிய செய்யுளே இது :

'கூர்மை பொருந்திய வேலைக்கொண்டு தன் நெற்றி யில் அரும்பும் வியர்வையைத் துடைத்தபடியாய், மகள் விரும்பும் அரசிளைஞன், கடுஞ்சொல் கூறுகின்றனன்; பெண்ணின் தந்தையும் அதற்கு நிமிர்ந்த மொழியல்லது பணிந்து மொழி கூறுகின்றிலன்; இத்தகைய மாறுபாடே இவர் கொள்கையா யிருக்கின்றது. அதனுல், கூர்மை பொருந்திய பல்லும் வரி ஓடிய மதர்த்த குளிர்ந்த கண் ணும் உடைய பெண்ணோ, மரத்திற் பட்ட சிறு தீப் போலத் தான் பிறந்த ஊர்க்கு வருத்துந் தெய்வமாயினள். என்ன செய்வது' என்பது அவர் இரக்கவுரை.

இதனால், பெண்ணின் மேன்மையும், பெற்றோரின் தன்மானமும், அரசிளைஞனின் வீரமும் புலப்படுமேனும், முடிபும் பயனும் நல்லவாய் முடிய வேண்டுமன்றோ? எவை எவ்வாறாயினும், மகட்குக் காலத்தில் திருமணம் நிகழ்தல் யாவரானும் விரும்பத்தக்கது.

குறிப்புரை : நுதி - நுனி; கூரிய நுனி. வியர் - வியர்வை. கடிய - கடுஞ் சொற்களை. கூறும் வேந்து - அரசிளைஞன் கூறுவான். நெடிய - நிமிர்ந்த மொழிகளை. இஃது - இத்தகைய முரண். படிவம் ஆயின் - கொள்கை ஆதலின். வை - கூர்மை. எயிற்று - பற்களையுடைய. அரி - கண்ணின் வரிகள். மதர் - மதர்த்த; களிப்பாற் செழிப்பான. மழை - குளிர்ந்த. அரிவை - பெண். அம்மா என்பது இந்த இடத்தில் வியப்பில் வந்த இடைச்சொல். மரம் - இங்கே, உலர்ந்த மரம். சிறு தீ - தீப் பொறி. அணங்கு - வருத்துந் தெய்வமகள். சில நேரங்களில் தன் மகளின் இன்ப வாழ்க்கைக்குப் பொருந்தாத அரசர்கள் மணம் விரும்பும்போது, முறைப்படி தந்தை மறுத்துரைத்தலும் 'மகட்பாற் காஞ்சி' என்னுந் துறைக்கு ஒரு காரணமாகும். (க)

## புலவர் செல்வாக்கு

[கபிலர், நமது காலத்தில் மிக்க செல்வராய் விளங்கினர்; பல ஊர்களுக்கு உரிமையாளராய்த் திகழ்ந்தார். நாடு முழுதும் அவருக்குச் செல்வாக்கிருந்தது. முடியுடை மன்னர், குறுநில மன்னர், வள்ளல்கள் முதலியோர் பலரும் அவர்க்குப் பழக்கமானவர். பண்டைக்காலத்திற் செல்வம் நிறைந்த புலவர்கட்கு அவர் எடுத்துக்காட்டு.]

நன்மரந் துவன்றிய நாடுபல தரீஇப் [பூண்
பொன்னவிர் புனைசெயல் இலங்கும் பெரும்
ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்
இட்ட வெள்வேல், முத்தைத் தம்மென,
முன்திணை முதல்வர் போல நின்று
தீஞ்சுனை நிலைஇய திருமா மருங்கின்
கோடுபல விரிந்த நாடுகாண் நெடுவரைச்
சூடா நறவின் நாண்மகிழ் இருக்கை

அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய
மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்
உவலை கூராக் கவலையில் நெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்
கபிலன் பெற்ற ஊரினும் பலவே.

—பதிற்றுப்பத்து, அரு.

பண்டைக் காலத்திற் புலவர்களிற் பலர் பெருஞ் செல்வராய் விளங்கினர். பல ஊர்களுக்குத் தலைவர்களாகவும் திகழ்ந்தனர். பரம்பரைச் செல்வமும் அரசும் படைத்து நாடாட்சி செய்து விளங்கியவரிற் புலவராய்க் கல்வி யறிவு நிரம்பியவரைப்பற்றி இங்கே கூறவில்லை. புலவரில், எளிய வாழ்விற் பிறந்து தமது புலமைப்பேற்றால் உண்டான பெருமதிப்பினாற் பெருஞ்செல்வம் ஈட்டி விளங்கியவர்களையே இங்கு நினைவுகூரவேண்டி யிருக்கின்றது.

கபிலர் என்னும் புலவர்பெருமான் அந்தணர்; அவர் காலத்தில் அவர் நிரம்பிய செல்வம் படைத்துத் திகழ்ந்தார். அவர்க்குப் பல ஊர்கள் உரிமையாயிருந்தன. ஆனல், அவர் ஒரு முனிவரைப்போல வாழ்ந்தார். கபிலர் பெற்ற ஊர்களைப்பற்றி இச் செய்யுளில் ஒரு வியப்பான குறிப்பு வருகின்றது.

சேரநாட்டில் முன்பு இளஞ்சேரலிரும்பொறை என்று ஒரு சேரவேந்தன் இருந்தான். அவனுக்கு முன் விளங்கியவன் செல்வக் கடுங்கோவாழியாதன் என்பவன். கபிலர் அம் முன்னோன் திறமையைப் பாராட்டிக் கூறி, அவன் ஒரு மலைமீது ஏறி நாலாபக்கமும் பார்த்து அப் பார்வைக்கு உட்பட்ட ஊர்கள் முழுவதையும் பரிசிலாகக் கொடுக்கப்பெற்றவர். செல்வக் கடுங்கோவாழி யாதன் தன் முன்னோரைப்போல அறமாக ஆட்சி செய்தவன். இதனலேதான் கபிலர் அவனைப் பாராட்ட நேர்ந்தது. இப்படிக் கபிலர் பல ஊர்களுக்கு உரிமையுடையவர்.

இளஞ்சேரலிரும்பொறைக்கும் சோழமன்னனுக்கும் பகை மூண்டது. சேரவேந்தன், தன் படைஞரை அழைத்துச் சோழனுடைய ஊர்களைக் கையகப்படுத்துவதோடு அம் மன்னனையும் எம் முன்னே கொண்டு வாருங்கள் என்றான். போர் நடந்தது. சோழன் படை தோற்றது.

பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர், இளஞ்சேரலிரும்பொறையின் வெற்றித்திறம் பற்றிப் பின்னொருகாற் பாராட்டியபோது, பின்வருமாறு கூறினார்: 'சோழன் படையாளர் களத்தில் தோற்று ஓடியபோது அவர்கள் அங்கே போட்டுவிட்ட வேல்கள், தன் முன்னோர்போல நின்று அறவோனாகி விளங்கிய செல்வக் கடுங்கோவாழியாதனது கொள்கையைப் பாடிய கபிலர் அன்று பெற்ற ஊர்களினும் பலவாயிருந்தன' என்பது.

கபிலர் எவ்வளவு பெருஞ்செல்வராக இருந்திருக்க வேண்டுமென்று இதிலிருந்து தெரிகின்றதன்றோ!

**குறிப்புரை:** துவன்றிய - செறிந்த. தரீஇ - தருவித்து; கையகப்படுத்திக்கொண்டு. முத்தைத் தம் என - சோழனையும் எமக்கு முன்னே கொண்டு வருக என்று படையாளரை ஏவ. சென்னியர் பெருமான் இட்ட வெள்வேல் - சோழமன்னனின் படையாளர் அப்போது களத்தில் தோற்றுப் போட்டுவிட்ட வெள்ளிய வேற்படைகள். கபிலன் பெற்ற ஊரினும் பல - கபிலர் பரிசிலாகப் பெற்ற ஊர்களைவிடப் பலவாயிருந்தன என்றபடி. 'பொன் அவிர் புனை செயல் இலங்கும் பெரும் பூண் ஒன்னாப் பூட்கை' என்பது சென்னியர் பெருமானுக்கு அடைமொழி. 'பொன்னால் செய்யப்பட்டு ஒளிர்தலையுடைய ஒப்பனைச் செயல் விளங்கும் பெருமையான அணிகலன்களையும், பிறர்க்குப் பொருந்தாத சிறந்த மேற்கோள்களையும் உடைய' என்பது அதன் பொருள். 'நாடு பல தரீஇ முத்தைத் தம் என சென்னியர் பெருமான் இட்ட வேல், கபிலன் பெற்ற ஊரினும் பல' என்று தொடர்ந்து உரைத்துக்கொள்ளவேண்டும். முத்தை - முந்தை; முன்னால் என்றபடி. 'முன் திணை முதல்வர் போல' என்பது முதல் 'மறம்புரி கொள்கை' என்பது வரையில் செல்வக் கடுங்கோ வாழியாதனது சிறப்புக் கூறப்படுகின்றது. 'வயங்கு செந்நாவின்' என்பது முதல் 'கபிலன்' என்பது வரையில் கபிலர் பெருமை

உரைக்கப்படுகின்றது. 'செல்வக் கடுங்கோவாழியாதனது அறம் புரிந்து வயங்கிய மறம்புரி கொள்கையை வயங்கு செந்நாவின் நெஞ்சின் பாடிய நல்லிசைக் கபிலன்' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். முன் திணை முதல்வர் - முன்னே விளங்கிய குல முதல்வர்; திணை யென்றது குலத்தை. நின்று - கடைப்பிடித்து நின்று; செல்வக்கடுங்கோவாழியாதன் கடைப்பிடித்து நின்று. நிலைஇய - நிலைபெற்ற. திரு மா மருங்கின் - திரு நிறைந்த பெருமையோங்கிய பக்கங்களையுடைய. கோடு - சிகரங்கள். வரை - மலையின்; மலையின் நாண்மகி ழிருக்கை என்றபடி. சூடா நறவு - மது; மதுக் களிப்பினையுடைய. நாண் மகிழ் இருக்கை - நாளோலக்க நிலையில். அறம் - அற முறையான ஆட்சியை. புரிந்து - விரும்பி. வயங்கிய - விளங்கிய. மறம் புரி கொள்கை - வீரம் விரும்பிய கொள்கையை. அறத்தோடு பொருந்தியவீரத்தை. 'முதல்வர்போல நின்று செல்வக் கடுங்கோ வாழியாதன் நாடுகொண் நெடுவரையின் நாண்மகிழிருக்கையில் அறம் புரிந்து வயங்கிய மறம்புரி கொள்கையைப் பாடிய கபிலன்' என்றபடி. செந் நாவின் - நடு வழாத நாவினாலும். உவலை கூரா - இழிந்த தன்மை மிகாத. நெஞ்சின் - நெஞ்சினாலும். நனவின் - மெய்ம்மையால். நல் இசை - மிக்க புகழையுடைய. (௧0)

# 2. இலக்கியம்

## விரைந்த போர்

[பகைவனோடு தொடுத்த போர் ஒரு நொடி நேரத்தில் முடிந்து விட்டது. அதன் விரைவை எவ்வாறு எடுத்துக் கூறுவது. சாத்தந்தையார் அதற்கு ஓர் உவமை கண்டுபிடித்தார்.]

சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற்று உற்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக் [றெனப்
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ;
ஊர்கொள வந்த பொருநனொடு
ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே.

—புறநானூறு, அஉ.

ஒரு வியப்பான உவமை இச் செய்யுளில் வருகின்றது. ஒரு புலைமகன்; மெல்லிய தோல்களை இட்டு 'அரசு கட்டில்' 'மெத்தை இருக்கை' முதலியன தைப்பதும் அவன் தொழில். ஊரில் திருவிழா முதலியவற்றிற்குப் பறை கொட்டுதல் முதலிய முறைகளும் அவனுக்கு உண்டு.

ஒரு முறை மன்னனது அரசுகட்டில் தைக்கும் வேலை அவனுக்குக் கிடைத்தது. அந்த வேலை முற்றுப்பெறும் நாள் வந்தது. அன்றைக்கென்றபோது, ஊரிலுந் திரு விழா நேர்ந்துவிட்டது. அன்று மாலையிற் பறை கொட்டி விழாவுக்கு உதவும் முறை அவனுடையது. அரசன் வேலையாதலால், அரசுகட்டில் தைத்தலை அன்று நிறுத்துவ தற்கும் இல்லை. பறந்து பறந்து தையல் வேலையைச் செய் கின்றான். ஞாயிறு மறையும் நேரமும் அணுகுகின்றது. அந் நேரத்தில், வானத்தில் மேகந் தோன்றி மழை பெய்ய வுந் தலைப்படுகின்றது. அரசுகட்டில் வேலை பெரும்பாலும் முடிந்துவிட்டதென்றே சொல்லலாம். சிறிதே குறை. அந் நிலையில், தற்செயலாக அவன் மனைவி கருவுயிர்க்கும் நிலையில் இருக்கின்றனள் என்று செய்தியும் வந்ததென் றால், அப் புலைமகன் கையில் இருக்குந் தையல் ஊசி எவ்வளவு விரைவாகப் பறந்து தொழில் புரியும் ?

அதனினும் விரைவாக இருந்தது, 'தன் ஊரைக் கொள்ள வந்த வீரனோடு சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளி செய்த போர் !

சாத்தந்தையார் என்னும் புலவர் கண்டு பிடித்த உவமை எப்படியிருக்கின்றது !

குறிப்புரை: சாறு - விழா. தலைக்கொண்டென - தொடங் கியதாக. பெண் - மனைவி. ஈற்று - ஈனுதலை; மகவு ஈனுதலை; பிள்ளை பெறுதலை. உற்றென - பொருந்தினளாக. பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று - மழை தோன்றிய, ஞாயிறு மறைந்த மாலைக் காலத்தில். கட்டில் - அரசு கட்டில். நிணக்கும் - தைக்கின்ற. போழ் - வார். தூண்டும் - செலுத்துகின்ற. விரைந்தன்று - விரைந்தது. மாதோ, மாது ஓ; அசை. பொருநனொடு - வீர

ளுேடு செய்த. ஆர் புனே தெரியல் - ஆத்தி மலரால் தொடுக்கப் பட்ட மாலையையுடைய. நெடுந்தகை போர் - பெருந்தகை யாகிய சோழனது போர். 'போர் ஊசியினும் விரைந்தது' என்று முடித்துக்கொள்ளவேண்டும். (கக)

## அன்பும் வீரமும்

[இலக்கியச் சுவைக்கு அன்பும் வீரமும் இன்றியமையாதன. நண்பர் இருவரும் தம்முள் அன்பும் வீரமும் பொங்கித் ததும்ப நடந்துகொள்ளுஞ் சிறப்பு இலக்கியத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும். பொருந்திய பொருட்சுவையோடு இவை இதன் கண் வருகின்றன.]

எமக்கே கலங்கல் தருமே, தானே
தேறல் உண்ணும் மன்னே ; நன்றும்
இன்னுன் மன்ற வேந்தே ; இனியே
நேரார் ஆர்எயில் முற்றி
வாய்மடித்து உரறிநீ முந்துஎன் னுனே.

—புறநானூறு, உகூஅ.

'பந்திக்கு முந்தி படைக்குப் பிந்தி' என்று இக்காலத் தில் ஒரு பழமொழி வழங்குகின்றது. ஆனால், உண்மை யில் அது பழைய மொழியாகத் தோன்றவில்லை. ஏனென் ருல், அரிய பழம் பாட்டாகிய இப் புறநானூற்றுச் செய்யு ளில் அதற்கு நேர்மாறுகிய வீரவுணர்ச்சியே காணப்படு கின்றது. நண்பர் இருவருள், இருவரும் பந்திக்குப் பிந்திப் படைக்கு முந்தப் பார்க்கின்றனர். சில ஆண்டுகட்குள் தமிழ்நாடு எவ்வளவு நேர் முரணுக வேறுபட்டு விட்டது!

இச் செய்யுள் பழிப்பதுபோலப் புகழும் பொருட் சுவையாகிய அன்புச் சுவையில் ததும்பித் துளும்புகின்றது. அன்பும் வீரமும் இதன்கண் வெற்றி தோல்வியின்றித் தம் முள் எதிர்ந்து நிற்கின்றன. இலக்கியம் என்பது, இவ் விரு பெருஞ் சுவைகளேயே நிலைக்களனுகக்கொண்டு எழில் பெறுகின்றது. இச் செய்யுள் அதற்குத் தக்க எடுத்துக் காட்டாகும். இதன் பொருள் :

"வேந்தன் முன்னெல்லாம் எமக்குக் கலங்கலாகிய மதுவைக் கொடுத்துத் தான் தெளிந்த மதுவினை உண்ணுவான்; யாம் முதலில் உண்ணவேண்டும் என்னும் அன்பினாலேதான் இங்ஙனம் பந்திக்குப் பிந்துவானாயினன்; அக்காலம் கழிந்தது. அவ்வளவு இனியவனான அவன் இப்பொழுது மிகவும் இன்னாதவனாய்விட்டான் என்பது நன்றாய்த் தெரிந்துவிட்டது. ஏனென்றால், இப்போதெல்லாம், 'நீவிர் பகைவர்கள் மதிலை முற்றுகையிட்டுக் கறுவி முழங்கிக்கொண்டு படைக்கு முந்துக' என்று கூறான்; தானே முந்துவன்" என்பது.

உணவென்றால் தம்மை முந்தச்செய்து படையென்றால் தான் முந்தும் அரசனது பேரன்பின் செயலை ஆவியார் என்னும் ஆசிரியர் அன்பினால் இவ்வாறு பாராட்டிக் கூறினர். வீரமும் அன்பும் இழைந்து சுவைபெறும் இயல்பு இதன்கண் என்ன அழகாக நிழலாடுகின்றது!

குறிப்புரை: தேறல் - தெளிந்த மது; காலத் தாழ்வினால் தெளிந்துபோன மது. மன் - கழிவுப்பொருளில் வந்தது. நன்றும் - மிகவும். மன்ற - தெளிவுப்பொருளில் வந்தது. இனி - இப்போது. 'இனி வேந்து நன்றும் இன்னான் மன்ற' என்று மாற்றிக்கொள்ளவேண்டும். நேரார் - பகைவரது; ஆர் எயில் - காவலின் அருமைப்பாடுடைய மதிலை. முற்றி - சூழ்ந்து. வாய் மடித்து உரறுதல், கறுவி எதிர்த்தலைக் காட்டிற்று. உரறி - முழங்கிக்கொண்டு. என்னான் - என்று சொல்லான்; என்று சொல்லாதவனாய்த் தான் முந்துவான் என்பது. (கஉ)

## வீரம் பேசல்

[பகைவர்களுக்கு விட்டுக்கொடாமல் பேசுதல் ஒரு திறமையாகும்; காரிய வெற்றிக்கும் அது உதவும். தூதுவர்களுக்கு இந்தத் திறமை நன்றாக அமைந்திருக்கவேண்டும். ஔவையார் அவ்வகையில் நிரம்பத் திறமை வாய்ந்தவர்.]

களம்புகல் ஓம்புமின் தெவ்விர்! போர்எதிர்ந்து
எம்முளும் உளன்ஒரு பொருநன் வைகல்

எண்தேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த கால்அன் னோனே.

—புறநானூறு, அஎ.

ஔவைப் பிராட்டியார் ஒரு வியப்பான புலவர். அவர் உணர்ச்சிகளெல்லாம் மிகவும் அழுத்தமானவை. அந் நலம் அவர் பாடல்களிலெல்லாம் நன்றாகக் காணப் படுகின்றன. அவர் இச் செய்யுளில் ஒரு வியக்கத்தக்க உவமையைக் கூறியிருக்கின்றார்.

அதியமான் நெடுமான் அஞ்சியின் வீரத்தை ஔவை யார் எடுத்துக்காட்ட விரும்பினார். அவர் கூறியது இது :

'பகைவர்களே! நீங்கள் போர்க்களத்துக்கு வருதலைக் காத்துக்கொள்ளுங்கள்; கவனிக்காமல் வந்துவிட வேண்டாம். போரில் பின்வாங்காமல் எங்களிடையிலும் ஒரு வீரன் உளன். உறுதியாகவும் மிகு விரைவாகவும் எதிர்த்துப் போர் செய்யும் ஆற்றலில் அவன் உவமையில் லாதவனாயிருக்கின்றான். அவனுக்கு உவமை சொல்லப் போனால், நாமே வலிந்துதான் ஏதேனும் சொல்ல வேண்டும். வேண்டுமானால் அவன் விரைவுக்கும் உறுதிக் கும் இப்படி ஓர் உவமை சொல்லலாம். நாள்தோறும் எட்டுத் தேர் செய்யவல்ல பெருந் திறமைசாலியான தச்சன், ஒரு மாதம் முழுமையும் தன் முழு அளவும் முயன்று ஒரு தேர்ச் சக்கரம் மட்டும் செய்து முடித்தா னென்றால், விரைவின்பொருட்டும் உறுதியின்பொருட்டும் அது, எவ்வளவு வேலைப்பாடுடையதாய் அமைந்திருக்கும். அந்தச் சக்கரத்தோடு கூடிய தேர் எவ்வளவு விரைவாக வுந் திண்மையாகவுந் தொழில் புரியும். அத்தகைய சக்கரத்துக்கு நிகரானவன் அவன் என்று ஒருவாறு சொல்லலாம்!'

பிறரை இறக்கியும் எள்ளியும் பாடுதலில் ஔவையார் துணிவு எப்படி ?

குறிப்புரை: களம் - போர்க்களம். ஓம்புமின் - போற்றுமின்; நீக்குமின் என்பது கருத்து. தெவ்விர் - பகைவீரே! போர் எதிர்ந்து - போரில் மாறுபட்டு; நும்மோடு மாறுபட்டு எதிர்க்கும் உள்ளத்தோடு என்பது கருத்து. எண் தேர் - எட்டுத் தேர். திங்கள் வலித்த - ஒரு திங்கள் முழுதும் முயன்று செய்த. கால் அன்னோன் - சக்கரத்தைப் போன்றவன். 'கால் அன்னோன் உளன் ஒரு பொருநன்' என்பது. (கரு)

## நலங்கிள்ளியின் படையாற்றல்

[வியப்பான உவமையோடும், ஆற்றலான கருத்தோடும் நலங்கிள்ளியின் படையாற்றலை ஆலத்தூர் கிழார் இச் செய்யுளில் விளக்கியிருக்கின்றார். ஆற்றல் சான்ற பெருமன்னர்கள் எத்தனையோ பலர் இத் தமிழகத்தில் விளங்கி யிருக்கின்றனர். அவர்கள் வீரமும் திறமையும் பெருவியப்பினை விளைவிக்கின்றன.]

தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ [நுகர
வேந்துபீ டழித்த ஏந்துவேல் தானையொடு
ஆற்றல் என்பதன் தோற்றம் கேள்இனி!
கள்ளி போகிய களரியம் பறந்தலை
முள்ளுடை வியன்காட் டதுவே; நன்றும்
சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல் [என
இன்னிசைப் பறையொடு வென்றி நுவலத்
தூக்கணங் குரீஇத் தூங்குகூ டேய்ப்ப
ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி
ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத் தோன்றினும் நோகோ யானே.

—புறநானூறு, உ௨௫.

சோழன் நலங்கிள்ளி என்பவன், தமிழ்நாட்டில் மிக்க ஆற்றல் வாய்ந்த மன்னனாய் விளங்கியிருக்கின்றான். ஆசிரியர்கள் அவனைப்பற்றிப் பாடியிருப்பவை மிக்க விம்மிதந் தருகின்றன. அவனைப் பாடிய புலவர்களுள், ஆலத்தூர் கிழார் என்பவரும் ஒருவர். சோழன் நலங்கிள்ளி மாய்ந்த பின், அவனை நன்றியறிவோடு பாடிய செய்யுள் இது.

"நலங்கிள்ளியின் படையோடு கூடிய ஆற்றல், இன்று புறங்காட்டின்கண்ணதாயிற்று. முன்பெல்லாம் நலங்கிள்ளி விளங்கியிருந்தபோது, ஏனை அரசர்களிடத்தில் உள்ள சங்குகள், கிள்ளி எங்கே கேட்டு விடுவனோ என முழங்குதற்கு அஞ்சித் தூக்கணங் குருவியின் கூடுகள் தொங்குதல்போல ஒரு பக்கத்தில் தொங்கவிடப்பட்டிருந்தன. ஆனால், இப்போதோ, அவ் வரசர்களின் அரண்மனை வாயிலில் பள்ளியெழுச்சிக் காலத்தில் அவை முரசொலியோடு உடன் முழங்கி வெற்றி நுவல்கின்றன. அதனைக் கேட்டும் யான் இறந்துபடாது வாளா வருந்தும் நிலையிலேயே உள்ளேன்"

இங்ஙனம் அவர், நலங்கிள்ளியின் பேராற்றலைப் புலப்படுத்துகின்றார். இதுமட்டுமன்று: அம் மன்னனது பெரும் படையைப்பற்றி அவர் விளக்கிக் கூறும் முறை ஒன்று மிக்க வியப்பினைத் தருகின்றது.

அம் மன்னன் படை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லவேண்டுமானால், பனை நுங்கு உண்டாகுங் காலத்திலிருந்து பின்பு அது பழுத்து அருகில் வேறோரிடத்தில் விதையாகிக் கிழங்கு தோன்றுங் காலம் வரையில் எவ்வளவு காலம் பிடிக்குமோ அவ்வளவு காலம் ஆகுமாம். அவ்வளவு மிகுதியான படை என்று ஆசிரியர் இவ் வியப்பான உவமையினாற் புலப்படுத்துகின்றார். படை போய்க்கொண்டே இருக்கும்போது ஓரிடத்தில் பனஞ்சாலை இருப்பதாக வைத்துக்கொள்வோம். படையின் முற்பகுதி அங்கே வந்தபோது பனை நுங்கு கிடைக்கக் கூடிய காலம். தூசிப் படை என்னும் அம் முன் படை

பனை நுங்கினை உறிஞ்சிச் சென்றது. பின்பும், படை தொடர்ச்சியாக அவ் வழியே நடந்துகொண்டிருந்தது. படையின் இடைப்பகுதி அங்கே வந்தபோது, நுங்கு உதவிய இளங் காய்கள் முற்றிப் பழுத்திருந்தன. அப் பனம் பழங்களைத் தின்று கொட்டைகளை அருகில் வீசி விட்டு இடைப் பகுதிப் படை சென்றது. படையின் வரிசை,மேலும் அப்பக்கம்தொடர்ந்துபோய்க்கொண்டே யிருந்தது. பின்பு, படையின் கடைசி பகுதி அப் பனஞ் சாலையண்டை வந்தது. அப்போது, இடைப்பகுதிப் படை முன்பு தின்று போட்டுவிட்டுச் சென்ற கொட்டை கள் நிலத்தில் முளைத்துக் கிழங்குவிட்டிருந்தன. சில கொட்டைகள் வாய் விரிந்து உள்ளே தீஞ்சோறு உடை யனவாயிருந்தன. இறுதியாக வந்த படை அத் தீஞ் சோறுகிய குருத்தோடு கிழங்குகளையுஞ் சுட்டுத் தின்று சென்றது. அவ்வளவு பெரிய நீளமாய் விளங்கியது நலங் கிள்ளியின் படை என்கின்றார் ஆசிரியர். உவமை எப்படி யிருக்கின்றது!

புறங்காடுதான் உலகத்தில் எத்தனை பெருந் திறல் மன்னர்களை விழுங்கி வருகின்றது!

குறிப்புரை: தலையோர் - முதலிற் செல்லும் தலைப் படை யோர். நுங்கின் தீஞ் சேறு - நுங்காகிய இனிய குழைவை. மிசைய - உண்ண. இடையோர் - இடைப்பகுதிப் படையினர். பைங் கனி - செவ்வி யமைந்த பழத்தை. மாந்த - உண்ண. கடையோர் - படையின் இறுதிப் பகுதியினர். விடு வாய்ப் பிசி ரொடு - கொட்டையின் விட்ட வாயினுள் உள்ள குருத்தாகிய சோற்றோடு. நில மலர் வையத்து - நிலம் அகன்ற உலகத்தில். வல முறை வளைஇ வேந்து பீடு அழித்த ஏந்து வேல் தானை யோடு ஆற்றல் என்பதன் தோற்றம் - வலப் பக்க முறையாக வளைத்துக்கொண்டு பகை மன்னர்களின் பெருமையை ஒழித்த உயர்ந்த வேற்கருவிகளையுடைய படைகளோடு கூடிய ஆற்றல் என்பதன் விளைவை. கேள் இனி - நெஞ்சே இப்போது கருதிப் பார். கள்ளி போகிய களரி அம் பறந்தலை முள் உடை வியன் காட்டது - அது, கள்ளி மரங்கள் ஓங்கிய களர்நிலமாகிய பாழ் இடத்தில் முட்களையுடைய அகன்ற சுடுகாட்டினிடத்ததாயிற்று;

அத்தகைய பெரும் படையின் பேராற்றல் சுடுகாட்டின்கண் மறைந்தொழிந்தது என்பது கருத்து. நள்ளி மாய்ந்து மறைந்ததை இங்ஙனம் ஆசிரியர் கூறினர். சேட் சென்னி என்பது நலங்கிள்ளிக்கே வேறொரு பெயர். கேட்குவன்கொல் - கேட்டு விடுவனே. குரீஇ - குருவியினது. தூங்கு கூடு ஏய்ப்ப - தொங்குங் கூட்டினை ஒப்ப. ஒரு சிறை கொளீஇய - ஒரு பக்கத்தில் தொங்கவிடப்பட்ட. திரி வாய் வலம் புரி - முறுக்குண்ட வாயினையுடைய வலம்புரிச் சங்கு. ஞாலம் காவலர் - உலகம் காக்கும் ஏனை யரசர்களின். கடைத் தலை - வாயிலில். காலை - பள்ளியெழுச்சிக் காலத்தில். இன் இசைப் பறையொடு வென்றி நுவல - இனிய ஓசையையுடைய முரசுடன் வெற்றி கூறும் பொருட்டு. தோன்றினும் - இப்போது முழங்கினாலும்; யான் நோகு - யான் இறந்து படாமல் வாளா வருந்திக்கொண்டிருக்கின்றேன். 'இப்போது, வலம்புரி இன்னிசைப் பறையொடு வென்றி நுவலத் தோன்றினும் யான் நோவேன்' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். (கச)

## காடு வாழ்த்து

[கவிகளுக்கு எதனியல்பையும் அழகாக எடுத்துப் பாட்டிசைக்கத் தெரியும். அவர்கள் கைப்பட்டனவெல்லாம் பெருமையுறுகின்றன; நிலைபெறுகின்றன. எல்லார் அழிவையுந் தான் கண்டு தனக்கு அழிவு காண்போரைக் காணாத முதுகாடும் புலவர்களாற் பின்னும் நிலைபெறுதல் இச் செய்யுளில் வருகின்றது.]

களரி பரந்து கள்ளி போகிப்
பகலுங் கூவுங் கூகையொடு பிறழ்பல்
ஈம விளக்கிற் பேஎய் மகளிரொடு
அஞ்சுவந் தன்றுஇம் மஞ்சுபடு முதுகாடு;
நெஞ்சமர் காதலர் அழுத கண்ணீர்
என்புபடு சுடலை வெண்ணீறு அவிப்ப
எல்லார் புறனுந் தான்கண்டு உலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே.

—புறநானூறு, நஙசு.

கவிகளுக்குப் பாட்டிசைக்க அழகிய பொருள்களே வேண்டுமென்று தேவையில்லை. அழகற்ற பொருள்களும் கவிகளின் கருத்திற் படிய நேருமானல், அவை ஒரு புதிய கவர்ச்சியுடையனவாய் மக்கள் உள்ளத்தை ஈர்க்கும்.

பண்டைக் காலத்தில், 'காடு வாழ்த்து' என்னும் ஒரு வாழ்த்து முறை உண்டு. சுடலையை வாழ்த்துதலே அது. இச் செய்யுளில் அவ் வாழ்த்து வருகின்றது. சுடலை விரும்பத்தகாத காடுதான்; ஆயினும், ஆசிரியர் ஓர் அழகிய கருத்தினை அதனியல்பாக எடுத்துக் காட்டும்போது அது விரும்பத்தக்கதான பெருமை யடைந்து மாட்சிமைப் படுகின்றது.

சுடலையானது, காடு பரந்து கள்ளி வளர்ந்து பகற் காலத்திலுங் கூவுங் கோட்டானோடு, ஈம அழலின் விளக்கத்தில் இடு பிணங்களைத் தின்னும் பேய்மகளிரையும் உடையதாய்ப் புகை மேகம் படியும் முதுகாடாய் அஞ்சத் தக்கதாகத்தான் இருக்கின்றது. ஆனல் அதனிடத்தில் ஓர் அரிய பெருமை நிலைபெற்றிருக்கின்றது. மக்கள் தொகுதிக்கெல்லாம் தானே இறுதியில் இடமாயிருக்கின்றது. எல்லாருடைய அழிவையுந் தான் காண்கின்றது; தனது அழிவைக் காண்போரை அது கண்டறியாது. இதனல் அது அழியாத 'முதுகாடு' எனவும் பெயரெடுத்திருக்கின்றது.

இங்ஙனம் செய்யுள் அதன் பெருமையினை எடுத்துக் காட்டுகின்றது. கவிகள் எந் நிலையினும் இனிமை யுருவே!

குறிப்புரை : களரி - காடு. கள்ளி - கள்ளிச் செடி. போகி- வளர்ந்து முற்றி. பிறழ் பல் - வரிசை மாறுபட்ட பற்களை யுடைய. ஈம விளக்கு என்பது பிணஞ்சுடுந் தழலின் விளக்கம். அந்த விளக்கத்தைத் தம் செயலுக்குப் பயன்படுத்திக்கொள்ளும் பேய் மகளிர் என்றபடி. 'பிறழ் பல் பேய் மகளிர்' என்று கூட்டிக்கொள்ளவேண்டும். அஞ்சு வந்தன்று - அஞ்சு வந்தது; அஞ்சுதல் வந்தது; அஞ்சத்தக்கதாயிருந்தது என்பது. மஞ்சு - மேகம்; இங்கே, புகையாகிய மேகம். 'முது காடு அஞ்சு வந்

தன்று' என்க. என்பு படு சுடலை வெண்ணீறு - எலும்புகள் காணப்பட்ட சுடுகாட்டில் பிணம் வெந்த சாம்பலை. புறன் கண்டு என்றது அழிவைக் கண்டு என்பதற்கு. மன்பதைக்கெல்லாம் - மக்கள் தொகுதிக்கெல்லாம். தானாய் - தானே இருப்பிடமாய்.

## இலக்கியம்

[மொழிச்சுவை மட்டும் இலக்கியமாகாது. பொருளணி மட்டும் இலக்கியமாகாது. இயற்றுவோர் ஆற்றல் மட்டும் இலக்கிய மாகாது. உண்மையான மெல்லிய இனிய நாகரிகச் செவ்வியே இலக்கியத்திற்குப் பேறுறல். சான்றோர்களின் சான்றாண்மையினாலேயே தமிழில் இலக்கியங்கள் எழுந்து அழியாது நிலைபெற்றுள்ளன.]

ஓரை ஆயத்து ஒண்தொடி மகளிர்
கேழல் உழுத இருஞ்சேறு கிளைப்பின்
யாமை ஈன்ற புலவுநாறு முட்டையைத்
தேன்நாறு ஆம்பல் கிழங்கொடு பெறூஉம்
இழுமென ஒலிக்கும் புனலம் புதவின்
பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ்
இல்லோர் சொன்மலை நல்லியக் கோடனை
உடையை வாழிஎற் புணர்ந்த பாலே!
பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்
ஓரூர் உண்மையின் இகந்தோர் போலக்
காணாது கழிந்த வைகல் காணா
வழிநாட்கு இரங்கும்என் நெஞ்சம்அவன்
கழிமென் சாயல் காண்டொறும் நினைந்தே.

—புறநானூறு, ௧௭௬.

தமிழ் நாட்டில் முன்பு இனிய நீரூற்றுக்கள் பல விளங்கியிருந்ததுண்டு. பாரிவேள் என்னும் புகழ்பெற்ற வள்ளலின் பறம்புமலையில் இனிய நீரூற்றுக்கள் இருந்திருக்கின்றன. அதன் நீர் மிக்க இன்சுவை உடையதென்று பண்டைத் தமிழ் நூல்களில் அங்கங்கும் வருகின்றன.

புறத்திணை நன்னாகனார் என்னும் புலவர் தமக்கு நண்பனான நல்லியக்கோடன் என்னும் குறுநில மன்னனின் மென்மையையும் இனிமையையும் நினைக்கும்போது, முற் கூறிய பறம்புமலையின் சுனைநீர் அவருக்கு நினைவு வரு கின்றது. இச் செய்யுளில் அதனை அவர் அழகாக இயைத்து மொழிந்திருக்கின்றார்.

பறம்புமலையின் சுனைநீர் ஓர் ஊரில் எளிதிற் கிடைப்ப தாக இருந்தால், அஃது இருக்கிறது என்னும் மகிழ்ச்சி யில் அதனைக் கவனியாமலும் இருந்துவிடுதல் போல நண் பன் நல்லியக்கோடனும் இனியனாய் எளிதின் இருக்கும் இயல்பினால் அவனோடு கலந்து பழகாத நாட்களும் சில நேர்ந்துவிடுகின்றன. அங்ஙனம் காணாது கழியும் நாட் களை நினைந்தால், பின் நாட்களிலும் அங்ஙனம் கழிய நேருமோ என்று நெஞ்சம் இரங்குகின்றது என்பது அவர் கருத்து.

பழகுதற்கினிய மக்கள் எவ்வளவு பேர் இங்ஙனம் தமிழ் நாட்டை அணிசெய்திருக்கின்றனர்! இல்லாவிட் டால், பாட்டுகள் இங்ஙனம் இலக்கியமாய் நிலைப்பதற்கு வழி ஏது! உயர்ந்த இலக்கியங்கள், நாட்டில் உயர்ந்தோர் நிலவியிருத்தலையன்றோ காட்டுகின்றன. நாட்டின் இப் பண்பட்ட செவ்வியினாலேதான் சிறந்த தமிழிலக்கியங்கள் நமது நாட்டில் உருவாய் எழுந்து நிலைபெற்றுள்ளன.

குறிப்புரை: இச் செய்யுளின் முதல் ஐந்தடிகள் நல்லியக் கோடனுடைய ஊராகிய 'மாவிலங்கை' என்பதன் மாட்சி கூறு கின்றன. 'மகளிர் சேற்றைக் கிளறினால் ஆம்பற் கிழங்கினை யாமையின் முட்டையோடு பெறுதற்குரிய நீர் வாய்க்காலை யுடை யது மாவிலங்கை' என்று அப் பகுதியிற் கருத்து வருகின்றது. ஓரை ஆயம் - விளையாட்டுக் குழுவில் உள்ள. தொடி - வளையலை யுடைய. கேழல் உழுத இரு சேறு - பன்றிகள் உழுத கரிய சேற்றை. கிளைப்பின் - கிளறினால். புலவு நாறு - புலால் நாற் றம் மணக்கும். தேன் நாறு - தேன் மணக்கும். பெறூஉம புதவின் என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். இழும் என ஒலிக் கும் புனல் அம் புதவின் - இழும் என்னும் ஒலியுடன் ஒலிக்கும்

நீர் ஒழுகும் வாய்க்கால் இடங்களையுடைய. அம், சாரியை, அதற்குப் பொருள் இல்லை. புதவு - நீர்க்கால் இடங்கள். சீறி யாழ் - சிறு யாழினையுடைய. இல்லோர் - வறியோர். புகழும் சொல் மலை - புகழ்மலை யாகிய. உடையை - உரிமையாக உடையை. வாழி - அதனால் ஒரு குறைவுமில்லை, நீ வாழ்வாயாக. என் புணர்ந்த பாலே - என்னைப் பொருந்திய விதியே. பால் - விதி. 'விதியே நீ நல்லியக்கோடனை உரிமையாக உடையை; வாழி!' என்று கூறியபடியாகும். பனி - குளிர்ந்த. உண்மையின் - எளிதிற் கிடைக்கும்படி இருத்தலால். இகந்தோர் போல- அதனைக் கவனியாமல் இருந்தோரைப்போல. இகத்தல் - இங்கே பொருள்செய்யா திருத்தல் என்னும் பொருட்டு. காணாது கழிந்த வைகல் - நல்லியக்கோடனைக் கண்டு அளவளாவாமல் கழிந்து போன நாட்களை நினைந்தால்; எளிதில் அவன் கிடைக்க இருத்தலால் இங்ஙனம் வாழ்க்கையிற் சில நாட்கள் கழியநேர்ந்தது என்றபடி. காணா வழிநாட்கு இரங்கும் - இப்போது கண்ணுக்குத் தெரியாத பின்னாட்களுக்கு இரக்கங்கொள்ளும்; அந் நாட்களிலும் இங்ஙனம் கழியுமோ என்னுங் கருத்தால் இரங்கும் என்றபடி. கழி மென் சாயல் - மிக மெல்லிய இனிமையை. காண்டொறும் - உள்ளத்தில் தெளியுந்தோறும். 'நினைந்து நெஞ்சம் இரங்கும்' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (கசு)

### உவமை நலம்,

[உவமைகளால் கருத்து, தெளிவும் இனிமையும் அடைகின்றது. ஒரே உவமை பொருளோடு பல வகையாலும் ஒன்றுபடுவது, ஒரு தனி யழகைப் பயக்கும். இச் செய்யுளில் அந் நலம் எதிர்ந்துள்ளது. உவமைக்குப் பொருளா, பொருளுக்கு உவமையா என்னும்படி அழகு மிக்க நிலையில் இங்கே அவை வந்திருக்கின்றன.]

தொல்லெழில் வரைத்தன்றி வயவுநோய் நலி
[தலின்
அல்லாந்தார் அலவுறஈன் றவள்கிடக்கைபோல்
பல்பயம் உதவிய பசுமைதீர் அகன்ஞாலம்
புல்லிய புனிறுதீர் இப் புதுநலம் ஏர்தர, [கொள
வளையவர் வண்டல்போல் வார்மணல் வடுக்

இளையவர் ஐம்பால்போல் எக்கர்போழ்ந் தறல்
[வார,
மாஈன்ற தளிர்மிசை மாயவள் திதலைபோல்
ஆயிதழ்ப் பன்மலர் ஐயகொங் குறைத்தர
மேதக இளவேனில் இறுத்தந்த பொழுது.

—கலித்தொகை, உசு ; க - சு.

இளவேனிற் காலத்தின் பயனும் இயல்பும் இச் செய்யுளில் சிறந்த உவமைகளுடன் விளக்கப்படுகின்றன.

மாதர்கள் மகவு ஈன்று அழகு குறைந்து பின்பு புது நலம் பெறுவதுபோல, உலகமானது விளைவு கொடுத்துத் தன் பசுமை குறைந்து பின்பு இளவேனிற் காலமாகிய புதிய அழகினைப் பெறுகின்றது. இது பயன் சொன்னபடி.

இனி இயல்பு கூறுவது: பெண்கள் விளையாடும் இடத்தைப்போல, மணலில் பூக்கள் உதிர்ந்து வடுவுண்டாக்குகின்றன. அவர்கள் வழுவழுப்பான பொன்மேனியில் கருங்கூந்தல் வீழ்ந்ததைதலைப்போல மணலிடங்களில் நீர் ஒழுகுகின்றது. நிறமான அவர்கள் உடம்பிலுள்ள தேமலைப்போல மாந்தளிர்களின்மேல் பல மலர்களின் மகரந்தப் பொடிகள் சிந்திக்கிடக்கின்றன.

இங்ஙனம் இளவேனிற் பொழுது வந்தது எனப்படுகின்றது. இளவேனிலின் அழகுக்கு மாதரின் பல்வேறு நிலைகளையே இச் செய்யுள் உவமையாகக் காட்டியிருப்பது அறிந்து இன்புறுதற்குரியது.

**குறிப்புரை :** 'வயவு நோய் தொல் எழில் வரைத்தன்றி நலிதலின் அல்லாந்தார் அலவுற ஈன்றவள் கிடக்கைபோல்' என்று கொண்டு, 'கருவுற்ற வேட்கைநோய் பழைய அழகைக் கெடுக்கு மளவன்றியும் மேலும் வருத்துதலால் அதன் பொருட்டு மனங் கலங்கிய சுற்றத்தார், பின்னும் மெய் நோக்காடு கருதி வருத்தமுறும்படி மகவு ஈன்ற தாயாகிய மாதின் நிலைபோல' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். அல்லாந்தார் - கலங்கிய சுற்றத்தார். அலவுற - வருந்த. கிடக்கை - நிலை. பல் பயம் -

பல விளைவுகளை. பசுமை தீர் - பசுமைத் தோற்றம் நீங்கிய. புல்லிய - தன்னைப் பொருந்திய. புனிறு - ஈன்றவுடன் உள்ள அழகு குறைந்த நிலை. ஒரீஇ - நீங்கி. புது நலம் - புதிய அழகு. ஏர் தர - எழவும். வளையவர் - வளையணிந்த இளமகளிர். வண்டல் - விளையாட்டிடத்தை. வார் மணல் - ஒழுகி யமைந்த மணலானது. வடுக் கொள - பூக்கள் உதிர்தலால் வடுக்களைக் கொள்ளவும். இளையவர் - இளமகளிர். ஐம்பால் - கூந்தலை. எக்கர் - பொன்னிறமான மணலை. போழ்ந்து - ஊடறுத்துக்கொண்டு. அறல் - நீர். வார - ஒழுகி வரவும். மா - மாமரம். மாயவள் - மாமை நிறம் பொருந்திய மாதின். திதலை - தேமலை. ஆய் - அழகிய. ஐய - அழகிய. கொங்கு உறைத்தர - மகரந்தம் உதிர்தலைச் செய்ய. மே தக - மேன்மை பொருந்த; பெருமை யுண்டாக. இறுத்தந்த - தங்கிய; இளவேனிற் பருவந் தங்கிய காலம் என்பது. (கஎ)

## கற்பனை

[கற்பனை என்பது சுவை பயக்குஞ் சொற்சித்திரம்; உண்மையை நன்றாக விளக்கிக் காட்டுவது; மற்றப்படி, அது பொய்யன்று. இத்தகைய கற்பனைகள் வாழ்க்கையை மகிழ்ச்சி வண்ணமாக்கும்.]

> வேனிறத் திங்க வயவரால் ஏறுண்டு
> கானிலங் கொள்ளாக் கலங்கிச் செவிசாய்த்து
> மாநிலங் கூறும் மறைகேட்ப போன்றவே,
> பாடார் இடிமுரசின் பாய்புனல் நீர்நாடன்
> கூடாரை அட்ட களத்து.

—களவழி நாற்பது, ௪௩.

சோழன் செங்கணனுக்கும் சேரமான் கணைக்காலிரும்பொறைக்கும் போர் நிகழ்ந்தது. சோழன் வென்றான். அப் போர்க் களத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பொய்கையார் என்னும் புலவர் மிக்க சுவை நலங்களுடன் 'களவழி நாற்பது' என்னும் நூலால் நாற்பது பாட்டுக்கள் பாடிச் சோழனை மகிழ்வித்தார். இச் செய்யுளில் ஒரு சுவையான செய்தி கூறப்படுகின்றது.

போர்க்களத்தில் வீரர்களால் தாக்குண்டு வேல் மார்பிற் பாய்ந்து யானைகள் செவி சாய்த்து நிலம் படிய வீழ்ந்து கிடக்கின்றன. இச் செய்தியை இப்படியே கூறுவதனுற் சுவை ஒன்றும் தோன்றவில்லை. புலவரல்லாதார் கூறுவதானுல் இப்படியே கூறுவர்; புலவர் கூறுவதானுல், கேட்பார்க்கு மகிழ்ச்சியுண்டாகும்படி சுவைப்படுத்திக் கூறுவர்.

சுவைப்படுத்திக் கூறுவதென்ருல் ஒன்றைப் பத்து மடங்காகப் பெருக்கியோ அல்லது திரித்தோ கூறுவதன்று. புலவரல்லாதார் ஒருகாற் பொய் கூறினுலும், புலவர்கள் சிறிதும் பொய்கூறவேமாட்டார்கள். உள்ளதை உள்ளவாறே கூறுவர்; ஆனுற் சுவையோடு கூறுவர். இவ்வாறு கூறுதலே 'கற்பனை' என்பது.

பொய்கையார் கூறுவது வருமாறு: 'சோழன் தன் பகைவரைக் கொன்ற போர்க்களத்தில், வீரரால் தாக்குண்டு வேல் மார்பில் அழுந்தக் கால் தளர்ந்து கலங்கிச் செவி சாய்த்து யானைகள் வீழ்ந்து கிடத்தல், நிலமகள் கூறும் மந்திர மொழிகளை அவை கூர்ந்து கேட்பதுபோலத் தோன்றிற்று.

செவி சாய்த்து வீழ்ந்து கிடக்குந் தோற்றத்தைப் புலவர் எவ்வளவு உண்மை வழுவாமல், ஆனுல் நன்கினிது விளங்கும்படி சுவைநலந் தோன்றக் கூறியிருக்கின்ருர்! இத்தகைய சிறந்த சொற்சித்திரங்கள், வாழ்க்கையில், தக்க கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் கட்டாயம் விளைவிக்குமல்லவா!

• குறிப்புரை: நிறத்து இங்க - மார்பில் அழுந்த. வயவரால் - வீரரால். எறுண்டு - தாக்குண்டு. எறுண்டு இங்க என்று இயைக்க. மறை - மந்திரம். போன்ற - போன்றன. யானைகள் என்னும் எழுவாய் வருவித்துக்கொள்ளப்படும். பாடு ஆர் - ஒலி நிறைந்த. முரசின் - முரசினையுடைய. கூடாரை - பகைவரை. அட்ட - கொன்ற. களத்து - போர்க்களத்தில். (கஅ)

# 3. கலை

## மற்போர்

[மற்போர், வேறு படைக்கலங்கள் இன்றிக் கைகால்களே கருவியாகச் செய்வது. இது வலிமை மிக்கவர்களாற் செய்யப்படுவது. துணைவலி இல்லாமல் தனித்துச் செய்யும் இதனாலும் வெற்றி தோல்விகள் கருதப்படும்.]

இன்கடுங் கள்ளின் ஆமூ ராங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பொதுங் கின்றே ; ஒருகால்
வருதார் தாங்கிப் பின்ஒதுங் கின்றே ;
நல்கினும் நல்கா னாயினும் வெல்போர்ப்
பொரல்அருந் தித்தன் காண்கதில் அம்ம
பசித்துப் பணைமுயலும் யானை போல
இருதலை ஒசிய எற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே.

—புறநானூறு, 80.

பண்டைக்காலத்தில் மற்போர் முறை சிறந்திருந்த வகையினை இச் செய்யுள் எடுத்துக்காட்டுகின்றது.

ஆமூர் என்னும் ஊரில் இருந்த 'மல்லன்' என்பவனுக்கும் 'போர்வைக்கோப் பெருநற்கிள்ளி' என்பவனுக்கும் மற்போர் நடந்தது. அதில், பெருநற்கிள்ளி வெற்றி பெற்றான். 'கிள்ளி போர் செய்து வென்ற நிலையை, அவனோடு பகைகொண்டிருந்த அவன் தந்தையாகிய 'தித்தன்' என்பவன், தன் உள்ளம் மகிழ்ந்தாலும் மகிழாவிட்டாலும், காண்பது நல்லது' என்னுங் கருத்தோடு இச் செய்யுள் இயற்றப்பட்டிருக்கின்றது.

கிள்ளி மற்போர் செய்து வென்ற முறை இது : 'வலிமை வாய்ந்த மல்லன் என்பவனது மிக்க வலிமையைப் பார்வை யளவினாலேயே கெடுத்து, ஒரு காலை அவன் மார்

பில் மண்டியாக மடித்து வைத்து மற்றொரு காலால் அம் மல்லன் செய்கின்ற எதிர்ப்புக்களை நீக்கி அவன் முது கினில் வளைத்து ஊன்றிக்கொண்டு, பசியெடுத்து மூங்கிலை வளைத்துத் தின்ன முயலும் யானையைப்போல, மல்ல னுடைய தலைப்புறமும் காற்புறமும் முறியும்படி இரண்டை யும் ஒன்றாக மோதி, அங்ஙனம் மோதுதலால் அக் களத் திற் புகுந்து செயலற்ற அம் மல்லனை இங்ஙனமெல் லாம் எளிதில் எதிர்த்துக் கொன்று வெற்றி பெற்றான் என்பது.

'சாத்தந்தையார்' என்னும் அவன் காலத்துப் புலவர் இதனை நேரிற் கண்டு வியந்து, நிகழ்ந்தவாறே படக்காட்சி போல ஓர் எழுத்தோவியமாய்ச் சித்திரித்திருக்குந் திறம் அறிந்து இன்புறுதற்குரியது.

குறிப்புரை: கடு கள்ளின் - உறைப்புடைய கள்ளினை யுடைய. ஆமூர் ஆங்கண் - ஆமூரிடத்து. மைந்து - வலிமை. மத வலி - மிக்க வலிமையை. முருக்கி - கெடுத்து. ஒதுங் கின்று - ஒதுக்கப்பட்டது; ஒதுக்கிவைக்கப்பட்டதாய் என்று முற்றெச்சமாகத் தொடர்ந்துகொள்ள வேண்டும். தார் - சூழ்ச்சி; எதிர்ப்புச் சூழ்ச்சிகளை. பின் - முதுகினில். நல்கினும் நல்கா னாயினும் - உள்ளம் மகிழினும் மகிழானாயினும். போர் அரு - பொருது வெல்லுதற்கரிய. காண்க - காண்பானாக. தில் - அப்படி அவன் பார்க்கவேண்டும் என்னும் விருப்பத்தை உணர்த்தி நின்ற இடைச்சொல். அம்ம என்றது, வியப்பிடைச்சொல். பணை - மூங்கிலை; மூங்கிலைத் தின்ன என்று உரைத்துக்கொள்ள வேண்டும். இரு தலை - இரு புறமும். ஒசிய - முறிய. எற்றி - மோதி. களம் - அக் களத்துள். கடந்து அடு நிலை - எதிர்த்துக் கொன்ற நிலையை. 'கடந்தடு நிலையைத் தித்தன் காண்க' என்று முடித்துக்கொள்ள வேண்டும். (கக)

### கேள்விப் பயன்

[நல்ல கேள்வியானாலும், அதன் பயன் கொள்வதற்கு நல்ல உள்ளச் செவ்வியும் வேண்டும். உயர்ந்த கருத்துக்கள் தக்க உள்ளங் களிலேதான் ஆழ்ந்து ஊறிப் பயன்படுகின்றன. திருந்திய யாக்கையுள் மருந்து ஊறிப் பயன்படுதலைப்போல, அது கொள்ளப்படும்.]

பொருந்தியான் தான்வேட்ட பொருள்வயின் [நினைந்தசொல்
திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்துபோல் மருந்தாகி மனன்உவப்பப்
பெரும்பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே.

—கலித்தொகை, கஎ: கஅ - உக.

சொல்வது நல்சொல்லானாலும், கேட்பவருள்ளமும் தகுதியுடையதாக இருந்தால்மட்டுமே அது நன்றாகப் பயன்படும். மருந்து நல்ல மருந்தாக இருந்தாலும், அது வலுவுள்ள நல்ல உடம்பினுள் பொருந்துமானால் நன்றாகப் பயன்படுமன்றோ ?

பொருள் முயற்சியின் பொருட்டுத் தலைவன் தன் தலைவியைப் பிரிய நினைந்தான். தோழிக்கு இது தெரிந்தது. பிரிவுக்காலத்தில் தலைவிக்கு ஆற்றாமையுணர்வு மிகுதிப்படும் என்று அவள் நினைத்துத் தலைவனிடஞ் சென்று சில அறவுரைகள் கூறினாள். அது பயன்பட்டது; அவன் தான் செல்லுதலை நிறுத்திக்கொண்டான். தோழி, தலைவியினிடம் வந்து அதனைச் சொல்கின்றாள் :

"அம்மா, நான் தலைவனிடம் சென்று, அவன் வேட்கை கொண்ட பொருள் முயற்சியில் அற முறைமையுங் கருத வேண்டுமென்று நான் நினைந்து சொன்ன சொல்லானது, திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய மருந்து போல் நல்ல சொல்மருந்தாகி அவன் மனம் மகிழ்ந்தமையால், பெரிய புகழையுடைய அத் தலைவன் தான் செல்லுதலை நீக்கிக்கொண்டனன்" என்றாள்.

சொன்னாலும், கேட்டுப் பயன் கொள்ளுதற்குரிய உள்ளச் செவ்வி தலைவனுக்கு இருப்பதறிந்து தலைவி மிக்க மகிழ்ச்சியடைந்தாள்; அதற்கு அவளைவிட மகிழ்ச்சியடைவோர் வேறு யார்?

துறிப்புரை : பொருந்தி யான் - நான் தலைவனைப் பொருந்தி. வேட்ட - விரும்பிய. பொருள்வயின் நினைந்த சொல் - அவன்

பொருள் முயற்சி வகையில் நான் நினைந்து சொன்ன சொல். மருந்தாகி - நல்ல சொன்மருந்தாகி. மனன் உவப்ப - அவன் மனம் உவத்தலால். பெயர் - புகழையுடைய. மீளி - தலைவன்; பெயர்ந்தனன் செலவு - செலவு பெயர்ந்தனன்; செல்லுதலை நீங்கினன். (௨0)

## நகரம்

[நகரங்கள், நாட்டில் எப்படி அமையவேண்டும் என்பதற்கான குறிப்புக்கள் இச் செய்யுளில் வருகின்றன. குடிகள் அன்பும் அருளும் உடையவர்களாய் நுண்ணுணர்வு விளக்கத்தோடு நாகரிகமாக வாழ்க்கை செய்வதற்கான அமைப்புக்களுடன் நகரங்கள் இன்னின்ன வகையாக விளங்கவேண்டும் என்பது இங்கே கருதப்பெறுகின்றது.]

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையும் சீரூர்; பூவின்
இதழகத் தனைய தெருவம்; இதழகத்து
அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண், பறவை யனையர் பரிசில் வாழ்நர்
பூவினுட் பிறந்தோன் நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப
ஏம இன்றுயில் எழுதல் அல்லதை
வாழிய வஞ்சியும் கோழியும் போலக்
கோழியின் எழாதெம் பேரூர் துயிலே.

—பரிபாடல் திரட்டு, எ.

ஊர் என்றால் எல்லாம் ஊராய் விடுமா? தமிழ் நாட்டில் சேரநாட்டு வஞ்சிமாநகரமும், சோழநாட்டு உறையூருங்கூடப் பாண்டிநாட்டு மதுரைமாநகரத்துக்கு நிகராக மாட்டா. பரிபாடல் என்னும் சங்க காலத்து நூலின் திரட்டில், மதுரையின் அருமையறிந்த ஆசிரியரின் கருத்து இங்ஙனம் வருகின்றது. ஆசிரியர் அதற்குக் காரணம் கூறுமனும் இல்லை.

வஞ்சி முதலிய ஊர்களில் கோழியின் கூவுதலாலே தான் மக்கள் தம் துயிலைவிட்டு எழுவார்களாம்; ஆனால், மதுரையிலோ, விடியற்காலையில் மறையொலிகள் விம்மி எழ அதனைக்கேட்டு மக்கள் துயில் நீங்கி எழுவார்களாம். காரணம் எப்படியிருக்கிறது? பொருள் இல்லாத கோழியின் கூவுதலெங்கே, அருட்பொருள் நிறைந்த அந்தணர் மறையொலி எங்கே! மதுரைக்கு என்ன குறைவு! அவர் கூறுங் காரணம் இதுமட்டுமன்று.

'மதுரைமாநகரம், ஒரு தாமரை மலரைப் போன்றது; அதுவும், திருமாலின் கொப்பூழிலிருந்து அலர்ந்த தாமரைப் பூவோடு ஒத்ததென்று கூறவேண்டும்; பூவின் இதழ்களே தெருக்கள். இதழ்களின் நடுவிலிருக்கும் பொகுட்டைப்போல, நடுவில் இறைவன் திருக்கோயில். பொகுட்டை மூடிக்கொண்டிருக்கும் பூந்தாதுக்களைப்போல ஊரிற் குடியிருக்கும் தண்டமிழ் மக்கள் இறைவன் திருக்கோயில் வழிபாட்டில் ஊக்கமுங் கருத்துமாயிருப்பர். அவ்வூர் மக்களிடம் வெளியிலிருந்து வரும் பரிசிலர் பூந்தாதுகளை நுகர்வதற்கு வெளியிலிருந்து வரும் வண்டுகளை ஒப்பர்' என்று மற்றுஞ் சில காரணங்களையும் அவர் கூறியிருக்கின்றார்.

ஊர் என்றால் இப்படியன்றோ கோயிலும், அதைச் சூழத் தெருக்களும், கோயிலுணர்வு மிக்க குடிகளும், அக் குடிகளை நாடும் பரிசிலரும், மறையொலிகளுமாக விளங்க வேண்டும்!

வண்டுகளைப் போலப் பரிசிலர் வந்துகொண்டிருப்பார்களென்றால், அவர்களுக்கு வேண்டுவன வழங்குவதற்கேற்ற பொருள் இன்ப முயற்சிகளும் அங்குள்ள குடிமக்களிடம் நிறைந்திருக்குமென்று துணிந்துகொள்ளவேண்டும். மதுரை இங்ஙனம் எல்லா நலங்களோடும் விளங்குவதாயின், அது, கேட்க எவ்வளவு மகிழ்ச்சி தருகின்றது!

குறிப்புரை: மாயோன் - திருமால். புரையும் சீர் ஊர் - புகழ் ஓங்கிய ஊராகிய மதுரை ஒக்கும்; புரையும் - ஒப்பாகும்.

பூவின் இதழ் அகத்து - பூவின் அகத்தனவான இதழை. அனைய தெருவம் - தெருக்கள் ஒப்பன. பொகுட்டு - தாமரையின் இளங் காய். தாதின் அனையர் - பூந் தாதுக்களை ஒப்பர். பரிசில் வாழ்நர்- பரிசிலால் வாழ்வோர். பூவினுட் பிறந்தோன் - திருமாலின் திருவுந்தித் தாமரையிற் பிறந்தோனான நான்முகனது. நான் மறைக் கேள்வி - நான்மறை மந்திரங்களை ; கேள்வி - மந்திரம். நவில் குரல் எடுப்ப - பயிலக் கூறுதலாகிய அந்தணரது குரலொலி ஒலித்தலால் ; எடுப்ப - ஒலி எழ அதனால் ; ஏம இன் துயில் - களிப்பினாலான இனிய துயிலினின்று. எழுதல் அல்லதை - மக்கள் எழுவதல்லாமல். வஞ்சியும் - வஞ்சிமாநகரும். கோழியும் - உறையூரும். கோழியின் - கோழியின் குரலால். எம் பேர் ஊர் - எமது மதுரையாகிய பெரிய ஊர். எழாது துயில் - துயில் எழாது. (உக)

## நீர் வாயில்

[நகரங்களை அடுத்து ஓடும் ஆறுகளிலிருந்து நீர் ஊருக்கு வரச் சுருங்கை வழிகள் நிலத்தின் கீழே முற்காலத்தில் அமைக்கப் பட்டிருந்தன. ஆற்றுநீர் அதன் வழியே நகரங்களின் உள்ளே வந்து அங்கங்கும் மதிற்சுவர்களில் அமைக்கப்பட்டிருந்த கற் குழாய்களின் வழியே ஒழுகும். யானைகளின் எடுத்த துதிக்கை போல் அக் குழாய்கள் தோன்றும்.]

கொடியியலார் கைபோற் குவிந்த முகை
அரவுடன் றவைபோல் விரிந்த குலை
குடைவிரிந் தவைபோலக் கோலு மலர்
சுனைகழிந்து தூங்குவன நீரின் மலர்
சினைவிரிந் துதிர்ந்தவீப் புதல்விரி போதொடும்
அருவி சொரிந்த திரையில் துரந்து
நெடுமால் சுருங்கை நடுவழிப் போந்து
கடுமா களிறணத்துக் கைவிடுநீர் போலும்
நெடுநீர் மலிபுனல் நீள்மாடக் கூடல்
கடிமதில் பெய்யும் பொழுது.

—பரிபாடல், உ0 : கஅ - க0எ.

வையை யாற்றைப் பற்றிச் சங்க நூல்களிற் சிறப்பான குறிப்புக்கள் வருகின்றன; 'பரிபாடல்' என்னும் நூலில் மிகுதியாக வருகின்றன. இச் செய்யுட் பகுதியும் அதனில் வருவதேயாம். மதுரையில் தமிழ் ஆசிரியர்கள் சிறந்து விளங்கினமையால், மதுரையை அடுத்துச் செல்லும் வையை யாறும் இவ்வளவு நிலையான புகழைப் பெற இடமுண்டாயிற்று. தமிழ்நாட்டில் நிலைத்த புகழ்பெற விரும்புவார், தமிழறிஞர்களின் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் இயைபுடையராய் இருக்கவேண்டுமென்று இதிலிருந்து தெரிகின்றது.

மதுரைமாநகரம் மதில் சூழ்ந்த பெருநகரம். மதிலில் நீர் ஒழுகும் வாயில்கள் உண்டு. மதுரைக்கு அருகில் வையை யாறு, நிலத்தினுள் அமைக்கப்பெற்றிருக்கும் சுருங்கை வழியாகச் சென்று அம் மதில் வாயில்களின் வழியாக ஒழுகுதற்கு வாய்ப்பிருந்தது.

வையை யாறோ பல வகையான மலர்களை வெள்ளத்தில் ஏற்று வரும். பெண்களின் கையைப்போற் குவிந்திருக்கும் காந்தள் முகைகளும், வெகுண்ட பாம்பின் படங்களைப்போல் விரிந்த பூங் கொத்துக்களும், விரிந்த குடைகளைப்போல் வளைந்து தோன்றும் பல மலர்களும், அருகிலுள்ள சுனைகளிலிருந்து நீங்கிக் கீழ்விழும் நீர்ப்பூக்களும், மரக்கிளைகள் தழைத்து உதிர்ந்த கோட்டுப்பூக்களும், செடிகளில் மலர்ந்து வீழ்ந்த மலர்களும் ஆற்றின் நீரில் அலைகளால் அலைத்துக்கொண்டு வரும். அம் மலர்களும் மதில் வழியாக ஒழுகும் நீரிற் கலந்து வருதலுண்டு.

இங்ஙனம் பெருந்தன்மை நிறைந்த வையை யாற்றின் புனலை நீள்மாடக் கூடலின் கடிமதில் சொரியும்போது பார்த்தால், அது, எவ்வளவு இன்பந் தரும். புலவர்கள் பார்த்தால் அந்தக் காட்சிச் சித்திரத்தைத் தமது இலக்கியத் திரையில் தீட்டி மகிழாமற் போவார்களோ? அவர்கள் மகிழ்ச்சி ஓர் அழகான உவமையோடு பொருந்திப் பிறக்குமன்றோ மிக்க இன்பத்தை விளைக்கும்.

மலரோடு நீர் சொரிதல் மங்கல நிகழ்ச்சியையும் வழி பாட்டு நிகழ்ச்சியையும் நினைவுகூர்விக்கின்றது. யானைகள் சில நேரங்களில் தமது துதிக்கையில் நீரை உறிஞ்சி, அக் கையை மேலே தூக்கி வளைத்து இறைவன் திருவுருவின் மேல் மலரோடு நீர் பொழிதலைப் பற்றியும், இங்கே நினைவு வருகின்றது. கூடலின் மதில் வாயில் மலரோடு நீரைப் பொழிதல், களிறு கைவிடும் நீர்போல் விளங்குகின்றது என்று இச் செய்யுட் பகுதியில் ஆசிரியர் கூறி மகிழ்ந்திருக் கின்றார். புலவர் கைப்பட்டனவெல்லாம் புகழ்க்குரி யவை.

குறிப்புரை : கொடி இயலார் - கொடிபோல அசையுந் தன்மையுடைய பெண்களின். முகை - அரும்புகள். அரவு உடன்றவை - உடன்ற அரவுகள் ; அதாவது, வெகுண்ட பாம்பு களின் படங்கள். கோலும் - வளைந்து தோன்றும். தூங்குவன - கீழ் வீழ்வனவான. உதிர்ந்த - உதிர்ந்த மலர்கள். புதல் - செடியின் திரள். போதொடும் - மலரோடும். அருவி சொரிந்த - மலையருவிகள் சொரிந்தவற்றை ; சொரிந்த மலர்களை என்றபடி. துரந்து - தள்ளிக்கொண்டு. நெடு மால் - நீண்ட பெரிய. கடு மா - மதச் செருக்கு மிக்க விலங்காகிய. அணத்துக் கை - மேலெடுத்த துதிக்கையால். போலும் - போலத் தோன்றும். நெடுநீர் மலி - பெருந்தன்மை மலிந்த. நீள் மாடக் கூடல் - நீண்ட மாளிகைகளையுடைய மதுரை நகரத்தின். கடி மதில் - காவலையுடைய மதிலின் வாயில்கள். பெய்யும் பொழுது - நீரைச் சொரியும்பொழுது ; குழாய் போல நீரைச் சொரியும்பொழுது என்றபடி. 'பெய்யும்பொழுது அது களிறு கைவிடு நீர்போலும்' என்று உரைத்துக்கொள்ளப்படும். (உஉ)

# 4. வாழ்க்கை

## குடிப்பொருள்

[தாம் தாம் தோன்றிய குடிக்குரிய தகுதியில் ஒவ்வொருவரும் ஒழுகுதல் வேண்டும். பிறர்க்கு இடங்கொடாமலும் இருக்க வேண்டும். இவற்றிற்கு முன், பிற பொருள் முயற்சிகளும் பகை யுணர்ச்சிகளும் கருதத்தக்கன அல்ல.]

இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்,
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே, நின்
[னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே;
ஒருவீர் தோற்பினும் தோற்பதுங் குடியே;
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அத
[னால்,
குடிப்பொருள் அன்றுநும் செய்தி; கொடித்
நும்மோர் அன்ன வேந்தர்க்கு [தேர்
மெய்ம்மலி உவகை செய்யும்இவ் விகலே.

—புறநானூறு, சரு.

பண்டைக்காலத்தில், புலவர்கள், உலகுக்குப் பயன் பட வாழ்ந்து விளங்கினர். அவ் வாழ்க்கைக் கேற்றபடி அவர்கள் தம் சொற்களையும் செயல்களையும் பிறர் மதிக்கும்படி வைத்துக் கொண்டனர். உண்மையே பேசுதலும், உண்மையாய் ஒழுகுதலும் அவர்கள் கடைப்பிடியாயிருந்தன. தம்மைப் பொருள் செய்யாதவரைத் தாமும் எக்காரணங் கொண்டும் பொருள் செய்யாதவராய் வீறு படைத்து வயங்கினர். உணர்வுக் கொழுந்துகள் என்னும்படி திகழ்ந்தனர். எந்நிலையிலும் பிறர்க்கு நலமே எண்ணி உதவுதலும், பிறர் செய்த நலங்களை எஞ்ஞான்றும் அன்பின் நினைந்து நெக்குருகி நன்றி மறவாது நடத்தலும் அவர்கள் உயிரொழுக்கங்களாய் மிளிர்ந்தன. இதனால், அவர்கள் தங் காலத்தில் எங்கும் நன்மதிப்பும் செல்வாக்கும் உடையவர்களாய் மேலோங்கி நின்றனர்.

அரசர்கள் ஒருவருக்கொருவர் போர்செய்துகொள்ளும் நேரம் அவர்கள் உணர்வு மிகவும் முறுக்கேறிய நேரமாகும். அந் நேரத்திலும், புலவர்கள் சென்று அவர்கள் உள்ளத்தைத் திருத்திப் போர் நிறுத்தஞ் செய்து உலகுக்கு

நலம் விளைக்கவல்ல பேராற்றல் மிக்கவர்களாய் இருந்தன ரென்றால், இன்னும், அவர்கள் செல்வாக்குக்கு வேறு கூறு வானேன்! அதற்கோர் அழகிய எடுத்துக்காட்டும் இச் சிறந்த பாடலின்கண் வருகின்றது.

சோழன் நலங்கிள்ளி என்னுஞ் சோழமன்னன் தன் குலத்தைச் சேர்ந்த நெடுங்கிள்ளி என்பவனிடம் பகை கொண்டு, அவனுக்குரிய உறையூரை முற்றுகையிட்டான். கோவூர் கிழார் என்னும் புலவர், நலங்கிள்ளி நெடுங்கிள்ளி என்னும் இவ்வொரு குலத்து வேந்தர்கள் தம்முட் போர் செய்துகொள்வது நன்றன்று என்று திருவுள்ளங்கொண்டு அங்குச் சென்று அவ் விருவரையும் நோக்கிப் பின்வரு மாறு கூறுகின்றார் :

"அரசரீர், நும்முட் பகைவனென்போன் பனந் தோட்டு மாலைபணியுஞ் சேரனல்லன்; அல்லது, வேப்ப மாலை புனையும் பாண்டியனுமல்லன்; பகைத்துப் பொருது கொள்ளும் நும் இருவர் கண்ணியும் சோழர்குடிக் குரிய ஆத்தி மாலைகளே யல்லவா? நும்முள் ஒருவர் தோற்பி னும் தோற்பது நுமது குடியே. நீவிர் இருவீரும் வெற்றி பெறுவதென்பதும் இயற்கையன்று. ஆதலால், நும்து போர்ச்செயல், நுமது குடிக்குத் தக்கதொன்றன்று. மேலும், இப் பகைச் செயலானது, கொடிகளாற் பொலிந்த தேர்களையுடைய நும்மைப்போன்ற சேர பாண்டிய வேந் தர்களுக்கு உடம்பு பூரிக்கும் உவகையைக் கொடுத்து விடும்."

ஆசிரியர் வாய்மொழி எப்படி இருக்கின்றது? கறு விப் போர் புரியும் நேரத்தில் ஒருவர் நேரிற்சென்று இங்ங னம் இடித்துரைக்க வேண்டுமானால், அதற்கு எவ்வளவு பழக்கமும் துணிவும் வேண்டும்! கோவூர் கிழார் என் னும் பெரியார் இங்ஙனம் எத்தனையோ சோதனைக் காலங் களில் அரசர்க்கு நடுநின்று அறமும் அறிவும் உரைத்து நாட்டுக்கு நலம் பல விளைத்திருக்கின்றார். சந்து செய்து பகை நீக்குதல் ஒரு பெரிய உதவியாகுமன்றோ! அறம்

வழாமை, கடைப்பிடி, அச்சமின்மை, சொல்வன்மை, உணர்வாற்றல், கடமையுணர்வு, நேரத்தறிவு முதலிய சான்றாண்மைப் பண்புகள் இல்லாவிட்டால், இத்தகைய செயற்கருஞ் செயல்களை எவர் செய்ய இயலும்? இவ் வுள்ளவொளிகள் நிரம்பிய வாய்மொழிக ளானமையா லன்றோ, இன்றும் இச் செய்யுள்போல்வன உயிர்ப்பாற்ற லோடு நம்முள் நிலைபெற்றிருக்கின்றன. புலவரெனின், இங்ஙனமன்றோ வீறுபெற்று விளங்குதல் வேண்டும்! பண் டைக்காலத்துப் புலவர்களின் செவ்வுள்ளத்தோடு பிற் காலத்து நிலைகளை ஒப்பவைத்து நோக்கும்போது, உள்ளம் 'பகீர்' என்கின்றது! கோவூர் கிழாரைப் போன்றவர்கள் அக்காலத்தில் ஒருவரிருவர் அல்லர்; பெரும்பாலோ ராவர்.

குறிப்புரை: இரு - பெரிய. தோடு - இதழ். மலைந் தோன் - சூடிய சேரன். கரு சினை - கரு நிறமான கொம்புகளை யுடைய. வேம்பின் - வேப்பமரத்தின். தெரியலோன் - மாலையை யணிந்த பாண்டியன்; வேப்ப மலர்களாலான மாலையோன் என் பது. நின்ன - நின்னுடைய. கண்ணியும் - தலைமாலையும். ஆர் - ஆத்தி; ஆத்தி மலர். மிடைந்தன்று - மிடைந்தது; செறியக் கட்டிய மாலையாயுள்ளது. பொருவோன் - போர் செய்வோன். வேறல் - வெல்லுதல். குடிப் பொருள் - குடிக்குத் தக்க பொருள்; பொருள் என்றது இங்கே தகுதியை. செய்தி - செய்கை; இப் போர்ச் செய்கை. நும்மோ ரன்ன கொடித்தேர் வேந்தர்க்கு என்று கூட்டுக. நும்மோ ரன்ன - நும்மைப்போன்ற. மெய் மலி - உடம்பு பூரிக்கும்படியான. இகல் - பகைச் செயல். (உரு)

## குடிப்பிறப்பும் குழந்தை யுணர்வும்

[குழந்தைகள் கள்ளங் கவடற்ற நெஞ்சமுள்ளவை. பற்றோ பகை மையோ அரும்பாத தெய்வத்தன்மை வாய்ந்தவை. தக்க குடிப்பிறப்பு அப் பளிங்குள்ளத்தில் தக்க நினைவுகளையே எழுப்பும். குழந்தைகள் பகைவராலும் இரக்கங் காட்டுதற் குரியவை.]

நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;

இவரே, புலன்உழு துண்மார் புன்கண் அஞ்சித்
தமதுபகுத் துண்ணும் தண்ணிழல் வாழ்நர்;
களிறுகண் டழூஉம் அழாஅல் மறந்த
புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ உடையர்;
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே.

—புறநானூறு, ௪௬.

மலையமான் மக்கள் என்போர் 'மலாடு' என்னும் நாட்டினைச் சேர்ந்தவர். இவர்கள் குழந்தைகளாயிருந்த போது, இவர்களுக்குக் குலப்பகைவனான சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், பகை எண்ணத்தால் இவர்களை யானையின்முன் இட்டுக் கொல்விக்கத் துணிந்தான். பிள்ளைகள் கொண்டுவரப்பட்டனர்.

இளம்பிள்ளைகள் அவ்வப்போதும் அழுதுகொண்டிருக்குமல்லவா? மன்றத்தில் யானையும் வந்தது. பிள்ளைகள் 'யானையைப் பார்த்து, தாம் அழுகின்ற அழுகையை மறந்து அதனை வேடிக்கை பார்த்தன. ஆனால், அந்த இடம், பரந்த வெளியிடமான மன்றமாயிருந்தமையால், அவை வெருக்கொண்டு மயங்கிப் புதியதோர் வருத்தத்தை யுடையனவாயிருந்தன. இன்னது நிகழப்போகின்ற தென்பதை அணுத்துணையும் அறியாத இத்தகைய பிள்ளைமை நெஞ்சத்தோடு கூடிய இளங் குழந்தைகளையே அக்கிள்ளிவளவன் முற்கூறியவாறு செய்ய முனைந்துவிட்டான். பகையுணர்வு எதனைத்தான் செய்யாது.

கோவூர்கிழார் என்னும் சான்றோர் இதனை அறிந்தார். அவர் இரக்கமே வடிவாம் பெரியார். அவர், தாம் பழகிய இடங்களிலெல்லாம் தணிவையே வளர்த்து, உலகத்தை அருளிரக்கமாகிய குளிர்நிழலில் விளங்கவைத்த அருட்புலவர். நேராய்க் கிள்ளிவளவன் இருந்த இடத்திற்குச் சென்றார். யானை பிளிறிக்கொண்டு நிற்றலையும், அதற்கு இடுகின்ற தறுவாயில் கள்ளங் கவடற்ற பிள்ளைமை

முகத்துடன் இளங் குழந்தைகள் ஒரு புதிய உணர்வுடன் அதனை வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்றலையுங் கண்டு திடுக்கிட்டுப் போனார். அவர் நெஞ்சம் பதைபதைத்தது. வளவனை நோக்கிப் பின்வருமாறு சொல்லுகின்றார்:

"மன்ன, நீயோ, பருந்தின் எறிதலுக்கு அஞ்சி உன்னிடம் அடைக்கலமாகப் புகுந்த புறாவின் துன்பம் அல்லாமலும், பிற உயிர்கள் உற்ற துன்பங்கள் பலவும் நீக்கிக் காத்தருளிய சோழன் மரபில்தோன்றிய பெருமையுடையவனாய் இருக்கின்றாய். இச் சிறுவரோ, அறிவினால் உலகியற்கைகளை உழுது புதுக் கருத்துக்களை விளைத்துக்கொடுத்து வாழ்க்கை நடத்தும் புலவர் பெருமக்களின் வறுமையின்னலை அஞ்சி அவர்களுக்குத் தமது செல்வத்தைப் பகுத்துக்கொடுத்து வாழ்க்கை நடத்தும் அருளெண்ணமாகிய தண்ணிழலையுடைய வள்ளல் மரபில் வாழ்வோராவர். மேலும், தாம் இயல்பாக அழுகின்ற அழுகையையும் யானையைக் கண்டு மறந்து, வேடிக்கை பார்க்கும் அத்தனை இளஞ் சிறுவராயிருக்கின்றனர். இம் மன்றத்தை மருண்டு நோக்கிப் புதியதோர் துன்பவுணர்வுடைய பச்சிளமைப் பாலராய்க் காண்கின்றனரே. இவ் வியல்புகளை நீ கேட்டனையாயின், நீ விரும்பியதைச் செய்."

கிள்ளிவளவன் செவி வழியாக இச் சொன்மருந்து அவன் நெஞ்சினுட் சென்று உறைத்தது.

'ஆறறிவினுங் குறைந்த எளிய புறா முதலியவற்றின் இன்னலைப் பொறுது தன் உயிரையே வழங்கிய அருளொழுகிய பெருங்குடியில் வந்தோன் ஒருவன், ஆறறிவுடைய மக்களின் உயிரை, அதுவும் அவ் வாறறிவு உயிர்களுள் நுண்ணறிவு மிக்க புலவர் பெருமக்களை ஆதரித்து வருந் தண்ணிழலையுடைய வள்ளல் குடியின் குழந்தைகளுயிரைத் தன்னலத்தின்பொருட்டு அதுவும் கண்கொண்டு காணலாகாத மிகக் கொடிய முறையிற் கொலைசெய்வித்து அழியாப் பழி யெய்தினான் என்னும் பொல்லாப் பெயர் தனக்கு ஆகாததுதான்' என்று அரசன் எண்ணினான்.

குழந்தைகளின் உயிர் திருவருட் செயலால் மீட்கப் பட்டன.

பகை யுணர்வால் முதலில் அரசன் கொடுஞ்செயலை எண்ணினனாயினும், பின்பு தெளிந்து அருள் நெஞ்சங் கூர்ந்து நடந்துகொண்ட பெருந்தன்மையைப் புலவரும் ஆண்டு நின்று இஃது என்னாகுமோ என்று எதிர்பார்த் திருந்த மக்களும் பெரிது பாராட்டினர்.

இருவர் மரபியற்கையும் பாலர் இயல்பும் நேரத்தறி வாகப் புலவர் எடுத்துக்காட்டி வெற்றிபெற்ற அருமை இச் செய்யுளில் நினைதொறும் இன்பந் தருவதாகும்.

**குறிப்புரை:** நீயே - நீதான். பிறவும் - ஆ முதலிய பிற வுயிர்களும் உற்ற. விடுத்தோன் - நீக்கிய சோழன். சோழர் குடியினர் பலர் செய்த செயல்களைப் பொதுவாகச் சோழன் என் னும் ஒருமைப் பெயர்மேல் ஏற்றி, 'விடுத்தோன்' என்று ஒருமை யிற் கூறினர். இப்படிக் கூறுதலைச் 'சாதி யொருமை' என்று ஆசிரியர்கள் கூறுவர். மருகன் - மரபினையுடையான்; மருகனை - மரபினையுடையாய். புலன் - அறிவினால். உழுது - முயன்று. உண்மார் - வாழ்க்கை நடத்துவாரது. புன்கண் - துன்பம்; இங்கே, வறுமைத் துன்பம். தமது - தம்முடைய பொருளை. தண் நிழல் - தண்ணிழற் குடியில். அழூஉம் அழாஅல் - பிள்ளை மையால் இயல்பாக அழுகின்ற அழுகை. 'அழூஉம் அழால் களிறு கண்டு மறந்த' என்று கூட்டவேண்டும். புன் தலை - இளந் தன்மையான தலையினையுடைய. விருந்தின் - புதிய. கேட்டனை யாயின் - இவ் வியல்புகளைக் கேட்டுப் பொருள்செய்கின்றாய் எனில். வேட்டது - அதற்குமேல் நின் நெஞ்சம் விரும்பியதனை. செய்ம்மே - செய்க. (உச)

## உள்ளம் அள்ளும் வாழ்க்கை

[சிறந்த ஞானிகளின் உள்ளம் அள்ளும்படி வாழ்வது ஒரு பெரும் பேறு. கவர்ச்சியான வாழ்க்கை அன்பினாலும் அருளினாலுமே உருவாக வேண்டும். பிறர்க்கென வாழும் இவ் வாழ்க்கையே நிலையானது. பொதியின்மலைத் தலைவனான ஆய் அண்டிரன் இங்ஙனம் வாழ்ந்து பேறு பெற்றான்.]

முன்உள்ளு வோனைப் பின்உள்ளி னேனே;
ஆழ்கென் உள்ளம்; போழ்கென் நாவே;
பாழூர்க் கிணற்றின் தூர்கஎன் செவியே;
நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி அயல
தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும்
வடதிசை யதுவே வான்தோய் இமயம்,
தென்திசை ஆஅய் குடிஇன் றாயின்,
பிறழ்வது மன்னோஇம் மலர்தலை உலகே.

—புறநானூறு, கஉ.

உலகத்தில் அரியதினும் அரிய செயல், தக்கோர் மதிக்க வாழ்க்கை நடத்துதலாகும். அறிவம், அன்பும், இரக்கமும் வாழ்க்கையில் பொங்கித் ததும்பினாலல்லது அந் நிலை எல்லார்க்கும் வாய்ப்பது அரிதாகும். இங்ஙனம் நற்குண நற்செயல்களால் ஓங்கி நிற்போர், பிறர்க்கென வாழ்வோரேயாவர்.

ஆய் அண்டிரன் என்னுங் கடையெழு வள்ளல்களில் ஒருவன் பண்டைக்காலத்தில் எவ்வளவு உள்ளங் கவர வாழ்க்கை நடத்தியிருக்கின்றான் என்பது இச் செய்யுளில் வருகின்றது. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் என்னும் அந்தண்புலவர் தம் உள்ளத்தைப் பறிகொடுத்து இவனைப் பாராட்டியிருக்கின்றார். மோசியார் எளிய புலவரல்லர்; பொதியில்மலைத் தலைவனான ஆயும் அத் தன்மையனே; தன்மானம் மிகப்பெரிதுடைய பெருஞ்சித்திரனார் என்னும் புலவர்பெருமானாலேயே "திருந்து மொழி மோசி பாடிய ஆயும்" என இவ்விருவரும் சிறப்பிக்கப்பட்டிருக்கின்றனர். ஆய் எவ்வளவோ அன்புருவினனாய் அருளுருவினனாய் விளங்கியிருந்தால் அல்லாமல் மோசியார் தம் திருந்து மொழிகளால் இவ்வளவு ஈடுபட்டுப் பாடியிருக்க மாட்டார். மேலும் ஆய் சிவனடித்தொண்டனுமாவன்.

புலவர் உள்ளத்தை அள்ளிச் செல்லுதற்கு இன்னும் என்னவேண்டும்? அன்பினால் விசைத்தெழுந்த மோசியார் சொற்கள் வருமாறு:

"நான் முதலிலேயே நினைக்கத்தக்கவனைப் பின்னால் நினைத்தேனே; அக் குற்றத்தால் என் உள்ளம் அமிழ்ந்து ஒழிக; அவனையன்றிப் பிறரைப் புகழ்ந்த என் நாவும் கருவிகளாற் பிளக்கப்படுக; பிறர் புகழ் கேட்ட என் செவியும் பாழூர்க் கிணறுபோல் தூர்ந்துபோக. வடக்கே இமயமலையும் தெற்கே ஆய் அண்டிரன் குடியும் இல்லையானால் இவ் வுலகமே நிலைபுரண்டு கெடும்" என்பது.

புலவர் உள்ளத்தை ஆய் எவ்வளவு கொள்ளைகொண்டிருக்கின்றான்; வாழ்வதென்றால் ஒருவன் இப்படியல்லவா வாழவேண்டும்!

குறிப்புரை: உள்ளுவோனை - நினைக்கத் தக்கவனை. 'ஆழ்க என் உள்ளம் போழ்க என் நா' என்று பிரித்துக்கொள்ள வேண்டும். போழ்க - பிளக்கப்படுக. கிணற்றின் - கிணற்றைப் போல. நரந்தை - ஒருவகைப் புல். கவரி - கவரிமான். சுனை - சுனை நீரை. அயல - அயலில் இருப்பனவாகிய. தகரத் தண் நிழல் - தகர மரங்களின் குளிர்ந்த நிழலில். பிணையொடு வதியும் - தன் பெண்மானோடு தங்கியிருக்கும். வட திசையது - வட திசையில் உள்ளதாகிய. இமயம் - இமய மலையும். ஆய் குடி - பொதியமலையில் உள்ள ஆயின் குடியும். பிறழ்வது - பிறழ்வதாகும்; பிறழ்ந்து கெடுவதாகும். இமயமலை தனது வளத்தாலும் பெருமையாலும் உலகுயிர்களைத் தாங்குவதுபோல ஆயின் குடியும் தாங்குகின்றதென்பது கருத்து. (உரு)

## புகழும் புண்ணியமும்

[இவ் வுலகில், மக்களுக்கு நிலைபெறுதற்குரியது புகழ்; அது நற்சொற்களாற் பரவி நிலைபெறும். இங்ஙனம் நிலைபெறுதற்குரிய புகழையும், அறத்திற்கு மாறுபடாத செயல்களைச் செய்தே பெறல் வேண்டும். அவ்வாறு செய்தால், மறுமைக்குப் புண்ணியமும் உண்டாகும். ஆகவே, இவ் விரண்டினையும் ஒருங்கே பெறுவதற்கு ஒரே எளிய இனிய பயன்பட்ட நல்வழி விருந்தோம்புதலேயாம். அட்டிற்சாலைகள் அதனையுடையதாய் வளம்பெற் றிருக்கவேண்டும்.]

புலிப்பொறிப் போர்க்கதவின்
திருத்துஞ்சும் திண்காப்பின்
புகழ்நிலைஇய மொழிவளர
அறம்நிலைஇய அகன்அட்டில்,
சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
யாறுபோலப் பரந்தொழுகி
ஏறுபொரச் சேறாகித்
தேரோடத் துகள்கெழுமி
நீருடிய களிறுபோல
வேறுபட்ட வினைஓவத்து
வெண்கோயில் மாசுஊட்டும்.

—பட்டினப்பாலை, ௪0 - ௫0.

பழைய காலத்தில், தமிழ்நாட்டு நகரங்களில் சமையற்சாலைகளின் நிலை எப்படியிருந்தது என்று அறிவதற்கு இச் செய்யுளில் வாயிலிருக்கின்றது. பலவகையான இலக்கியச் சுவைகளோடு இச் செய்யுள் இயற்றப்பட்டிருக்கின்றது. அங்ஙனஞ் சுவை பெருகக் கூறுதலால், அக்காலத்து அட்டிற்சாலைகளின் வளம் அறிந்துகொள்வதற்கு நிரம்ப இடனிருக்கின்றது.

அட்டிற்சாலையின் அமைப்புக்கு இரண்டு காரணங்கள் இங்கே கூறப்படுகின்றன. இம்மைக்குப் புகழ் நிலைபெற்ற நற்சொற்கள் வளரவேண்டும்; மறுமைக்குப் புண்ணியம் நிலைபெறவேண்டும். இங்ஙனம் புகழ் புண்ணியங்கள் உண்டாவதற்கு ஏற்ற நிலையிலேதான் அட்டிற்சாலைகள் நடத்தபெற்றன என்றால், அது மகிழ்ச்சிக்குரியதுதானே. விருந்தோம்பும் நோக்கங்கொண்டிருந்ததே அட்டிற்சாலைக்கு இவ்வளவு பெருமைகளூந் தந்தது.

இனி, வளம் இல்லாமல் இன்பமாக விருந்தோம்புதல் இயலாதன்றோ! ஆதலின், அட்டிற்சாலைகள் போதிய வளத்தோடு விளங்குதல் கட்டாயமாகும். இச் செய்யுட்

பகுதியில் அவற்றின் செழுமை நிலை, பின்வருமாறு சுவை தோன்ற உரைக்கப்படுகின்றது.

"அட்டிற்சாலை அகலமானது; காவலாய், வலிய மதில் சூழ்ந்தது; மதிற்சுவரில் திருமகளுருவம் எழுதியிருக்கும். அதன் வாயில், இரட்டைக் கதவுகளால் ஆனது. சோழ நாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள அக் கதவுகளில் சோழன் ஆட்சி யடையாளமாகப் புலியுருவம் பொறிக்கப் பட்டிருக்கும். பேரளவாக விருந்தோம்புகின்ற வகையினால், நிரம்பச் சோறு வடிக்க நேர்ந்து அதனால் ஒழுகிய கொழுங் கஞ்சிநீர் ஆறுபோலத் தெருவிற் பரந்து செல்லும். அக் கஞ்சிநீரைப் பருகுதற்கு எருதுகள் ஒன்றையொன்று தள்ளிக்கொண்டு வந்து தம்முட் சண்டையிட்டுக்கொள்ளுதலும் உண்டு. அதனால் அந் நீர் சேறாகி உலர்ந்துவிடும். பின்பு, தெருவில் தேர்கள் செல்லும்போது புழுதியுண்டாகி, அப் புழுதி மேலெழுந்து நாலாபக்கமும் பரந்து, வேறு வேறு வகையான தொழில் திறமைகளுடன் சித்திரங்கள் தீட்டப்பெற்ற வெண்ணிற மாளிகைகளிற் படிந்து அவற்றை அழுக்காக்கிவிடும். அப்போது அம் மாளிகையின் தோற்றம், புழுதியைப் பூசிக்கொண்ட யானைகளைப் போற் காணப்படும்!

பண்டைக்காலத்து அட்டிற்சாலைகளின் நிலை இப்படி! இது கேட்க, கருத, மிக்க மகிழ்ச்சி யளிக்கின்றது. அட்டிற் சாலைகளுக்கும் புகழ் புண்ணியங்களுக்கும் இயைபு இருக்கும் உண்மையை இச் செய்யுள் எடுத்துக்காட்டியதனால், இச் செய்யுட்பகுதி உலகுக்கு எவ்வளவோ உதவி செய்திருக்கின்றதென்றே கூறவேண்டும்!

குறிப்புரை: புலிப் பொறி - புலியாகிய அடையாளத்தையும். போர்க் கதவின் - தம்முள் வந்து பொருந்துதலையுடைய கதவினையுமுடைய. போர் - பொருந்துதல். இதனால் இரட்டைக் கதவு என்பது பெறப்பட்டது. திரு துஞ்சும் - திருமகள் தங்கும்; மதிற்சுவரில் திருமகள் உருவம் எழுதியிருப்பதனால் இங்ஙனங் கூறப்பட்டது. காப்பு - மதிலையுடைய; மதிலையுடைய அட்டில் என்றபடி. நிலைஇய - நிலைபெற்ற. மொழி - நற்சொல்.

அகன் அட்டில் - அகன்ற சோறடு சாலை; சமையற்கூடம். வாக்கிய - ஒழுக்கிய; வடித்து ஒழுக்கிய. யாறு - ஆறு. ஏறு - எருதுகள். பொர - சண்டையிடுதலால். துகள் - புழுதி. கெழுமி - படிந்து. ஆடிய - பூசிக்கொண்ட. வினை - தொழில் திறம் உடைய. ஓவத்து - சித்திரம் தீட்டப்பெற்ற; ஓவம் - ஓவியம்; சித்திரம். கோயில் - பெரிய மாளிகைகளை. மாசு ஊட்டும் - அழுக்கேறப் பண்ணும். (உசு)

## கொழுமையும் செழுமையும்

['கொழுமை' என்பது உள்ளக் கிளர்ச்சி. செழுமை என்பது பொருள் வளர்ச்சி. வாழ்க்கைக்கு இவ் விரண்டும் வேண்டும். அதற்கு, தடைகளும் பகைகளும் இல்லாதிருக்கவேண்டும். இவை, ஆட்சிச் சிறப்பினால் மக்களுக்கு நிலைபெறும். குடிகளும் ஊர்களும் இந் நலம் பெற்றிருத்தல் இன்றியமையாதது.]

அகல்நகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதல் மடநோக்கின்
நேரிழை மகளிர் உணங்குஉணாக் கவரும்
கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின்று உருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்
கொழும்பல்குடிச் செழும்பாக்கம்.

—பட்டினப்பாலை, உ0 - எ.

வீடுகள் என்றால், அவற்றிற் குழந்தைகள் இருந்து விளையாடிக் காட்சியளிக்கவேண்டும். அப்போதுதான், அந்த வீடுகளுக்குப் பெருமை. குழந்தைகளும், சிறாரும் சிறுமியருமாகத் தோன்றி உலவவேண்டும். இல்லத்துக்கு வேண்டிய சிறு சிறு பணிகளுக்கும் அவர்கள் உதவுவர். ஒளிபொருந்திய நெற்றியும், கள்ளமற்ற பார்வையும், பொருந்திய அணிகலங்களும் உடையவர்களாய்ச், சிறு பெண்கள், தம் வீட்டின் அகன்ற முற்றத்தில் இருந்து, வெயிலில் உலரும் உணவுப்பொருள்களுக்குக் காவல் காப்

பதும் உண்டன்றோ! அழகிய அணிகலங்களைத் தாங்கிய சிறு பையன்களும் அந்த நேரத்தில், மூன்று உருளைகளையுடைய குதிரை இல்லாச் சிறிய நடை வண்டியினை அந்த முற்றத்தில் உருட்டி விளையாடுதலும் உண்டு. இளம் பிள்ளைகளும் பெண்களும் இங்ஙனம் வீடுகளின் முற்றத்திலிருந்து விளையாடிக் காட்சியளிப்பது, மிக்க மகிழ்ச்சி தரும்.

குடும்பங்களென்றால், இங்ஙனமன்றோ மகிழ்ச்சி பூத்து விளங்கவேண்டும்! அத்தகைய குடும்பங்களிலல்லவா உள்ளக் கிளர்ச்சியாகிய கொழுமை மிகுந்திருக்கும்! பொருட்செழுமை வாய்ந்த ஊர்கள், இங்ஙனம் மனக் கொழுமையினையுடைய பல குடிகளோடு கூடியிருப்பது எவ்வளவு நல்லது! பாக்கங்களென்றால், இவ்வாறு பொருட்செழுமையும் மனக்கொழுமையும் பெற்று விளங்குதல் நன்று! காவிரிக்கரையில், பண்டு, காவிரிப்பூம் பட்டினத்தின் பாக்கம் இங்ஙனங் கொழும் பல்குடிச் செழும் பாக்கமாய் விளங்கியிருந்தது.

பாக்கங்களின் இக் கொழுமை செழுமைகளுக்கு நாட்டின் அரசியல் தகுதியுடையதாய் அமைந்திருக்கவேண்டும். அப்போதுதான் இம் மகிழ்ச்சி குடும்பங்களில் நிலைபெற்றிருக்கும். கலக்கத்துக்கு ஏதுவான பகை, யாதும் இல்லாமலிருக்கும். முயற்சிகள், விலங்குதலின்றி நிகழும். காவிரிப்பூம்பட்டினத்திற் கரிகால் வளவனது ஆட்சித் திறனால், குடிகள் பகையறியாது கொழுமையுற்றிருந்தனர்.

அவர்கள் குடும்பங்களில் தடை நிகழ்ச்சி என்பது ஏதேனுங் கூறவேண்டுமானால் ஒன்று சொல்லலாம். முற்றத்தில் உலரவைத்திருக்கும் நெல் முதலிய உணவுப் பொருள்களைக் கோழி முதலிய பறவைகள் உண்ண வரும் போது, அங்கே காவலிலிருக்கும் சிறு பெண்கள், தம் காதில் அணிந்திருக்கும் பொற்குழைகளை எடுத்து எறிந்து அவற்றை ஓட்டுவர். அப்போது சிறு பிள்ளைகள் உருட்டி வரும் நடை வண்டிச் சக்கரங்களை அப் பொற்குழைகள்

வழியிலே கிடந்து தடுக்கும். இங்ஙனம் தடுத்து விலக்கும் இச் சிறு தடையாகிய பகை யல்லது, வேறு கலங்கு பகை என்பது அங்கே யாதுமில்லை.

இச் செய்யுட்பகுதியை இவ்வளவு நயமாகக் கூறிய ஆசிரியர், மகளிருடைய குழைகளால் மைந்தர் வண்டிகள் தடையுற்றன என்று அந் நயத்தின் கொழுந்தாகவும் ஓர் அழகு தோன்றும்படி இதனை விளக்கியிருப்பது எவ்வளவு பொருட்கரு வாய்ந்ததாயிருக்கின்றது ! இளஞ் சிறுவர்களை இளம் பெண்களிடம் தடையுற்று நிற்கச் செய்து சிறுபகை உண்டாக்கும் இவ் வாசிரியர்பெருமகனார் கடியலூர் உருத்திரங்கண்ணனாரை என்ன செய்யலாம் ? சோழன் கரிகால் வளவனைப்போல் அவருக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசா அளிப்பது !

குறிப்புரை : அகல் நகர் - அகன்ற மாளிகைகளின். வியல் - அகலமான. நுதல் - நெற்றியையும். நோக்கு - பார்வையையும். மகளிர் - சிறுமியர். உணங்கு உணா - உலரும் உணவுப்பொருள்களை. பின்னாற் கோழியைக் கூறினமையால் இங்கே உணா என்றது, நெல் முதலிய தானியங்களை என்று கொள்ளலாம். கோழி - கோழியை. கொடு கால் - வளைந்த சுரையினையுடைய. கனம் குழை - கனமான காதணியானது. பொன் கால் - நகையணிந்த கால்களையுடைய. புரவி இன்று - குதிரை யில்லாமல். விலங்கு பகை - தடையாகிய பகை. கலங்கு - மனங் கலங்குதற்கு ஏதுவான. கொழு - கொழுமை ; மனக்கிளர்ச்சி. பாக்கம் - ஊர்.

## கோவலர் குடி

[கோவலர் வாழ்க்கை இயற்கை யின்பம் உள்ளது; இசை யுணர்வு உடையது. கோவலர் குடிக்கு அவர் இல்லத்து ஆய மகளிரின் ஊக்கமும் உழைப்பும் முதன்மையாய் வளர்ச்சி தருகின்றன. ஆனினங்களையும், ஆன் பயன்களையுமே செல்வமாகக் கருதி உழைத்து வாழ்தலும், அதுகொண்டு உலகுக்கு உதவுதலுமான அவர்தம் குடியியல் மிக்க இனிமை வாய்ந்தது.]

நள்ளிருள் விடியல் புள்ளெழப் போகி
புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி

ஆம்பி வால்முகை யன்ன கூம்புமுகிழ்
உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து
புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட் டிரீஇ
நாள்மோர் மாறும் நன்மா மேனிச்
சிறுகுழை துயல்வரும் காதின் பணைத்தோள்
குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்
அளைவிலை யுணவின் கிளையுடன் அருத்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்
எருமை நல்லான் கருநாகு பெறூஉம்
மடிவாய்க் கோவலர் குடி.

—பெரும்பாணாற்றுப்படை, கருரு - ககூசு.

தமிழ்நாட்டுக் கோவலர்குடியின் இயல்பு எப்படியிருக்கும் என்று அறிய விரும்பினால், அதற்கு இச் செய்யுட்பகுதியை நோக்குதல் நன்று. இதன்கண் அவ்வியல்பு பிழிந்து உரைக்கப்பட்டிருக்கின்றது.

கோவலர் என்பார் முல்லைநிலத்துக் குடிகள். இயற்கைக் காட்சிகளினிடையே இன்பமாய் உயிர்வாழ்வோர். இன்பம் உள்ள இடத்தில் இசையும் உண்டன்றோ? அதனால், கோவலர் தம் வாய் இதழ் மடித்துச் சீழ்க்கை இசைத்துக்கொண்டு இசையுணர்வு பெருக்கும் இயல்புடையவர்கள்.

அவர்கள் குடியில், மாதர்களின் சுறுசுறுப்பும், பழக்கமும், பண்பும், திறமையும் அறிந்து இன்புறத்தக்கவை. ஆயர்களின் குடும்ப வளர்ச்சிக்குப் பெரும்பாலும் ஆயமகளிரே காரணமென்று சொல்லலாம்; சிறந்த குடித்தனப் பாங்கு உடையவர்கள். இச் செய்யுட்பகுதியில், 'மடிவாய்க் கோவலர் குடி' என்னும் ஒரு வரிக்கு, ஏனை முன் வரிகளெல்லாம் ஆய மகளிரின் இயல்புகளையே விளக்கிக் கொண்டு அடைமொழித் தொடர்களாக வந்திருக்கும் அமைப்பிலிருந்தும் இவ்வுண்மை உணரப்படும்.

ஆயமகளிர் விடியற்காலம் எழுந்திருக்கும் பழக்கம் உடையவர்கள். தயிர் கடைந்து மோரும் நெய்யும் எடுத்துக்கொண்டு பிற இடங்கட்குச் சென்று விலைக்கு வழங்கி உலகுக்கு உதவியாயிருப்பவர்கள். மோர் விலையைக் கொண்டு சுற்றங்களைப் பாதுகாத்துக்கொள்வர். நெய் விலையைப் பணமாக வாங்காமல், மேலுமேலும் தம் தொழிலால் உலகுக்கு உதவிவரும்பொருட்டு, ஆனினங்களாகவே வாங்கிக்கொள்வர். இங்ஙனம் ஆனினங்களையும் ஆன் பயன்களையுமே செல்வமாகக் கருதி, உள்ளக் கிளர்ச்சியும் சுறுசுறுப்பும் உடையவர்களாய், ஆயமகளிர் கண்ணுங் கருத்துமாய்த் தமது குடியை உயர்த்தி, அம்முகத்தால் உலகுக்குப் பெரிதும் பயன்படுவோராவார்.

குறிப்புரை : இருள் விடியல் - இருள் புலருங் காலத்தில். புள் எழ - பறவைகள் எழுந்தொலிக்க. போகி - தயிர் கடையுந் தொழிலிற் சென்று. புலிக் குரல் - புலியின் குரலைப்போல் முழக்கமுடைய. மத்தம் - மத்து. வாங்கி - முன்னும் பின்னுங் கயிற்றை வலித்து. ஆம்பி வால் முகை - குடைக்காளான் என்னும் பூண்டின் வெண்ணிற மொக்கு. கூம்பு முகிழ் உறை - குவிந்த குமிழியாகிய பிரையினால். முகிழ் என்றார், அது மேலே புடைத்து நிற்பதனால். அமை - அமைந்த; தோய்ந்த என்னும் பொருட்டு. நுரை தெரிந்து - வெண்ணெய் கண்டெடுத்து. புகர் - புள்ளி; இங்கே துளி புள்ளி எனப்பட்டது. புகர் வாய்க் குழிசி - மோர்த்துளிகள் தெறித்துத் தோன்றும் வாய் அமைந்த மோர்ப் பானையை. பூ சுமட்டு இரீஇ - அழகிய சும்மாட்டின் மேல் இருத்திக்கொண்டு. நாள் - காலை நேரத்தில். மாறும் - விலைக்கு மாறுகின்ற. 'மாறும் ஆய்மகள்' என்று சேர்த்துக் கொள்ளவேண்டும். இடையில் வருவன ஆய்மகளுக்கு அடைமொழிகள். மா - மாமை நிறமான. துயல்வரும் - அசைகின்ற. காதின் - காதுகளையும். பணை - மூங்கிலைப்போன்ற. குறு நெறிக் கொண்ட - சிறு சிறு நெளிவுகளைக் கொண்ட; நெறி - இங்கே, நெளிவு. மேனியும் காதும் தோளும் கூந்தலும் உடைய ஆய் மகள் என்றபடி. அளை விலை உணவின் - மோர் விலையினால் உண்டாகும் உணவுப்பொருள்கள் கொண்டு. கிளை உடன் அருத்தி - சுற்றம் முழுமையும் உண்பித்து. உடன் - முழுதும்; எல்லாரையும் என்றபடி. விலைக்கு நெய் அட்டி அதற்குப் பசும்பொன்

கொள்ளாளாய் என்று கொள்க. அட்டி - வார்த்து. எருமையும் நல் ஆனும் கரு நாகும் பெறும் குடி என்க. கரு நாகு - கரிய எருமைக் கன்று. (உஅ)

## சான்றோர் இயல்பு

[புகழ் மொழிக்கும் சான்றோர் நாணுவர்; அங்ஙனமானால், பழிக்கு அவர்கள் எவ்வளவு அஞ்சுவர். சிறிதாயினும், குற்றம் நிகழாதவர் மக்களில் இல்லை. அவ் வியல்பறிந்து, இல்லற மகளிர் தம் தலைவரை மேலுமேலுஞ் சான்றோராக்கிக் கொண்டு காத்து வரவேண்டும்.]

'நெடிய திரண்ட தோள்வளை நெகிழ்த்த
கொடிய னாகிய குன்றுகெழு நாடன்
வருவதோர் காலை இன்முகந் திரியாது
கடவுட் கற்பின் அவன்எதிர் பேணி
மடவை மன்ற நீ'எனக் கடவுபு
துனியல் வாழி தோழி; சான்றோர்
புகழு முன்னர் நாணுப;
பழியாங்கு ஒல்பவோ காணுங் காலை.

—குறுந்தொகை, உருஉ.

தலைவன் எங்கோ வெளியிற் பிரிந்து சென்று பின் இல்லத்திற்கு வந்தான். தலைவி சிறிதும் புலவியின்றி அவனை எதிர்கொண்டு வரவேற்று அளவளாவியிருந்தாள். இதைப்பற்றித் தலைவியின் கருத்தைச் சிறிது கிளறிப் பார்க்கவேண்டுமென்று தோழிக்குத் தோன்றியது.

இடையறவு பார்த்துத் தோழி தலைவியை அணுகினாள். அணுகி, "அம்மே! உன்னைத்தான்; இருந்தாலும் இவ்வளவு எளியையாகவா நடந்துகொள்வது. நீ மிகவும் பேதையாயினை" என்றாள்.

தலைவி: என்ன தோழீ! நான் என்ன அப்படி நடந்துகொண்டேன்.

தோழி : தலைவர் வெளியிற் பிரிந்திருந்தபோது எவ்வளவு ஆற்றாது வருந்தினாய்; உன்னுடைய நீண்ட திரண்ட கைகளிலுள்ள வளையல்களும் அவ் வருத்தத்தால் நெகிழ்ந்தனவே; அப்போது ஆறுதல் சொல்லமட்டுந் தோழி வேண்டும்.

த : அப்புறம் இகழ்ந்துவிட்டேன்போலும்!

தோ : அதன்று; அவ்வளவு வளை நெகிழ்த்த கொடியராகிய அவர் திரும்பி வந்தால், அப்போது உனக்குக் கடவுட் கற்பு வந்துவிடுகிறதே என்கிறேன்.

த : உம்!

தோ : அப்போது இனிய முகம் வந்துவிடுகிறது. அவரைப் பார்த்தவுடனே உன் அறிவெல்லாம் மடம்பட்டுவிடுகிறது. அவரை எதிர்கொள்வதென்னவோ, வரவேற்பதென்னவோ, அளவளாவிப் போற்றுதல் என்னவோ, அமர்க்களந்தான்! ஏன், இப்படியும் வெளியிற் பிரிந்து பிரிந்து போவது முறையா என்று ஒரு வார்த்தைதான் கேட்டால் என்ன என்கிறேன்.

த : தோழி! அவர் வெளியிற் பிரிந்து சென்றாலும் நம்மேல் அவருக்கு அன்பு குறையவில்லை. அவர் கனிந்த அன்போடு திரும்பி வரும்போது, அந்த அன்பின்முன் நமது அறிவு மடம்பட்டுப்போகிறது; இருக்குமிடமே தெரியவில்லை. அவரோ சான்றோர்; மிக்க பெருந்தன்மையானவர். சான்றோர், தம்மைப் புகழ்வதற்குமுன்பும் நாணுவர். பழி காண்பதானால், அதனை அவர்கள் எவ்வாறு தாங்குவர்?

இதனைக் கேட்ட தோழிக்கு உள்ளுக்குள் மிக்க மகிழ்ச்சி. பிரிவுக்காலத்திலும், இந் நினைவே தோன்றி, தலைவிக்கு ஆறுதல் விளக்கவேண்டும் என்று நினைத்துக் கொள்கின்றனள்.



**குறிப்புரை:** கடவுட் கற்பு - தெய்வத்தன்மை வாய்ந்த கற்பு; அது, மழை வேண்டின் வருவிக்குங் கற்புப் போல்வது.

அவன் - அவனை. எதிர் பேணி - எதிர்கொண்டு போற்றி. 'பேணி மடவை' என்று பொருள் முடியும்; போற்றி மடவை யாயினும் என்பது பொருள். 'மன்ற' என்பது, திண்ணமாக என்னுங் கருத்தில் வந்தது. கடவுபு - வினவி. துனியல் தோழி - தோழி வருந்தாதே. 'வாழி' என்பதற்குப் பொரு ளில்லை; அசை. 'பழி காணுங்கால் யாங்கு ஒல்பவோ' என்று கூறிக்கொள்ளவேண்டும். யாங்கு ஒல்பவோ - எங்ஙனந் தாங்கு வார்களோ? (உக)

### அன்பாற் பழகுதல்

[தக்கோரிடம் அன்பினாற் பழகுதல் ஒரு சிறந்த பேறு. கலந்து பழகுதலினும் இனிய பொருள் உலகத்தில் வேறில்லை. மெய் யன்பு, மக்களை எத்தகைய பிணிப்புடைய இனத்திலிருந்தும் பிரித்து உரியார்பாற் சேர்த்துவிடும். இக் கருத்து அழகிய உவமையுடன் இச் செய்யுளில் வருகின்றது.]

அமர்க்கண் ஆமான் அஞ்செவிக் குழவி
கானவர் எடுப்ப வெரீஇ இனந்தீர்ந்து
கானம் நண்ணிய சிறுகுடிப் பட்டெனை
இளையர் ஓம்ப மரீஇயவண் நயந்து
மனையுறை வாழ்க்கை வல்லி யாங்கு,
மருவின் இனியவும் உளவோ?
செல்வாம் தோழி ஒல்வாங்கு நடந்தே.

—குறுந்தொகை, ௩௨௨.

''காட்டுப் பசுக்களும் அவற்றின் கன்றுகளும் காடு களில் இன்பமாய் உயிர்வாழும் இயல்பின. பசுக்கள், உள்ளங் கவரத்தக்க பார்வையையுடையன. கன்றுகள், அழகிய காதுகளுடையன. இங்ஙனம் மகிழ்ச்சியோடு உயிர்வாழ்கின்ற ஆக்களையும் கன்றுகளையும் காட்டிலுள்ள வேடுவர் கொம்பு ஊதுதல் முதலியவற்றால் அவற்றின் இருப்பிடத்திலிருந்து வெளிவரும்படி எழுப்புவர். அத னால் ஒரு கன்று மிகவும் அஞ்சித் தன் இனத்தினின்று பிரிந்து ஓடித் தொலைவில் அக் காட்டிற் பொருந்திய ஒரு சிற்றூரிற் புகுந்தது. அங்கே இருந்த இளமகளிர் அத

னைக் கண்டு விரும்பி அன்புடன் பாதுகாத்து வந்தனர். இதுவரையிற் காட்டிலிருந்த கன்று இப்போது ஊரில் அம் மகளிருடன் கலந்து பழகி அவ்விடத்தையே விரும்பி மனையில் வாழும் வாழ்க்கையில் வல்லமை பெற்றுவிட்டது'' என்று தோழிக்குத் தலைவி ஒரு கதை சொல்லி வந்தாள் :

தோழி : என்னம்மா ! இப்போது எதற்காக இந்தக் கதை ?

தலைவி : எதற்காக என்று கேட்கிறாய் ? எனக்காக என்றுதான் வைத்துக்கொண்டாற்போகிறது.

தோழி : ஓ, தலைவர் தாம் குறித்தபடி குறியிடத்திற்கு வரவில்லையே என்று நான் அவரைப் பழித்துக்கூறினால் அது, அம்மைக்குத் தாங்கவில்லைபோலிருக்கிறது !, அவர் வராவிட்டால் என்ன, அந்தக் கன்றைப்போல் நாமேதாம் நம் இனத்திலிருந்து பிரிந்து அவரிருக்குமிடஞ் சென்று அவ்விடமே இடமாய்ப் பழகிவிடலாமே என்பதற்குத் தானே இந்தக் கதை ! தலைவரை நான் ஒன்றுஞ் சொல்லக்கூடாது ; அவ்வளவு நோவாமல் தலைவரைக் காத்துவர வேண்டும் என்பதுதானே கருத்து ?

தலைவி : தோழீ, ஆம். அந்தக் கன்றைப்போல் நம்மால் இயன்றவரையில் நடந்து அவர் இருப்பிடம் செல்வோம். அன்புடையவர்களோடு கலந்து பழகுதலைவிட இனிய பொருள்களும் இவ்வுலகத்தில் உள்ளனவா ?

தலைவன், பக்கத்தில் அப்போது வந்திருந்தான். தலைவி சொன்ன இவ் வுள்ளன்பு ததும்பிய மொழிகள் அவன் செவியில் விழுந்தன. அவனுக்கு உள்ளம் எப்படியிருக்கும்? அத்தகைய தலைவியோடு கலந்து பழகுதலைக் காட்டிலும் இவ் வுலகத்தில் வேறு இனிய பொருள்களும் உளவோ என்றுதானே அவன் உள்ளமும் நினைக்கும் ! காதலாற் கனிந்த உள்ளங்களில் இன்பத்திற்கு என்ன குறை ?

குறிப்புரை: அமர்க் கண் - விருப்பம் பொருந்திய கண்களையுடைய. ஆ மான் - காட்டுப் பசுவினது. குழவி - கன்று. கானவர் - வேட்டுவர். எடுப்ப - எழுப்ப. வெரீஇ - அஞ்சி. தீர்ந்து - நீங்கிப் பிரிந்து. நண்ணிய - பொருந்திய. சிறு குடி - சிறிய ஊரில். பட்டென - அகப்பட்டதாக. இளையர் - இளைய மகளிர். மரீஇ - அம் மகளிரோடு கலந்து பழகி. அவண் நயந்து - அவ்விடத்தையே விரும்பி. வல்லியாங்கு - வன்மையுற்றாற் போல. மருவின் - கலந்து பழகுதலினும். ஒல்வாங்கு - இயன்ற அளவில். (௩0)

## மனை வாழ்க்கை

[இயற்கையின் வியப்புக்களுள், இதுவும் ஒன்று; அதிலும், மிக்க வியப்பிற்குரிய தொன்று என்று கூறுதல் வேண்டும். கணவனும் மனைவியும் ஒன்றாய் இருக்கவும், உடனாய்ச் செயல்புரியவும், வேறாய் விளையாட்டுக் கொள்ளவும் விரும்புவதென்றால் அது எத்தனை மறைபொருள் ஆற்றல் உடையதாயிருக்கின்றது! வாழ்க்கையின் நிலை அங்ஙனமிருந்தால், அதற்கு யார்தாம் என்ன செய்யலாம்!]

ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்
வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை
உள்ளினென் அல்லனோ யானே; உள்ளிய
வினைமுடித் தன்ன இனியோள்
மனைமாண் சுடரொடு படர்பொழு தெனவே.

—நற்றிணை, ௩.

ஆடவர்களுக்கு வெளியிற் சென்று பொருளீட்டுதல் ஒரு விளையாட்டு. மகளிர்களுக்கு இல்லில் இருந்து இல்லறம் நடத்துதல் ஒரு விளையாட்டு. இவர்களுக்கு அது சுமையாய்த் தெரியும். அவர்களுக்கு இது சுமையாய்த் தெரியும். ஆனால், இதில் ஒரு வியப்பு என்னவென்றால்,

இருவரும் ஒருவரை யொருவர் பிரியாமல் எப்போதும் உடன் இருக்கவேண்டும் என்னும் எண்ணங்கொண்டிருப்பதுதான். அதைவிட இன்னும் ஒரு வியப்பு, இருவர் காரியங்களும் ஒருவருக்கொருவர் துணையாக இருந்தே நடைபெற இருப்பது.

தலைவியின் ஆக்க நினைவு இல்லாமல், தலைவன் வெளியிற் சென்று தனது கருத்தை நிறைவேற்றிக்கொண்டு வந்துவிட முடியாது. தலைவன் ஒற்றுமையின்றித் தலைவி தானே விருந்தோம்புதல் முதலிய இல்லறங்களை நடத்துதலும் இயலாது. இவ்வளவு சன்னல் பின்னலாக இருக்கின்றன இருவர் நிலையும்.

இதனால், தலைவனுக்குத் தன் பொருளீட்டுங் காரியம் நிறைவேறியபோது உண்டாகும் மகிழ்ச்சியைப்போலவே தலைவி தோன்றுவாள். இங்ஙனமே தலைவிக்கும்; தன் இல்லறம் நிறைவேறுகின்றபோது உண்டாகும் இன்பத்தைப்போலவே தலைவன் தோன்றுவான். ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்ளும்போது அவர்களுக்கு இப்படி நினைவு தோன்றும். மனை வாழ்க்கைதான் என்ன வியப்பு!

முதலில் ஒரு முறை தலைவன் வெளியிற் சென்று பொருளீட்டி வந்தான். அப்போதே, சுரத்து நெறியில் அவன் சென்றபோது, அந்தி நேரத்தை நினைந்து, 'நம் அன்பிற்கினியாள், இந் நேரத்தில் வீட்டில் விளக்கை ஏற்றிவிட்டு அதனோடு பலவும் நினைந்து எவ்வாறு வருந்துகின்றாளோ' என்று வருந்தி நினைத்தான். நெஞ்சம் இப்போதும் பொருள் தொகுக்கும்பொருட்டு வெளியிற் செல்லவேண்டும் என்று நினைத்தது. அதற்கு அது விளையாட்டு. தலைவி, குழந்தைகளை ஈன்றுகொண்டு இல்லறம் நடத்தும் நிலையில், தலைவன் வெளியிற் பிரிந்து செல்வதனால் அவளுக்கு எவ்வளவு இடர் உண்டாகின்றதென்பது அவன் நெஞ்சத்துக்கு எங்கே தெரிகின்றது! வேப்பமரங்களின் கிளைகளில் பருந்து தன் குஞ்சுகளை ஈன்று வருந்திக்

கொண்டிருக்கும்போது, அம் மரங்களின் நிழலில் சிறுவர்கள் நெல்லிக்காய்கள் கொண்டு வட்டாடி விளையாடுதலைப் போலத்தான். ஆகவே, தலைவன், தனது நெஞ்சை நோக்கி, "நெஞ்சமே! முன்பே சுரத்து நெறியில் நான் என் இனியாட்கு வருத்தம் உண்டாக்கும் மாலைநேரத்தைப் பற்றி நினைக்கவில்லையா? அப்படியிருக்கும்போது மீண்டும் பொருள்வயிற் பிரிவைப்பற்றி ஏன் நினைக்கின்றாய்" என்றான். இந்த உணர்வு நிலையில் இச் செய்யுள் இயற்றப் பட்டிருக்கின்றது.

ஒருவரை யொருவர் பிரியவுங் கூடாது; ஒருவருக் கொருவர் துணைசெய்யவும் வேண்டும். இருவர் செயல்களும் ஒருங்கே இருந்து ஆவதுமல்ல; ஆனால், ஒருவரை யொருவர் கண்டால், செயல் நிறைவேறியதைப்போன்ற மகிழ்ச்சி! எப்படியிருக்கின்றது தலைவன் தலைவியரின் வாழ்க்கை. வேறு வேறான வாழ்க்கைக் கிளைகளில் இவர்கள் இங்ஙனம் ஒற்றுமையுள்ளங் கொண்டு வாழ்க்கை நடத்துதலே சிறப்பும் வியப்புமாகும். இருவரும் ஒன்றாயும் உடனாயும் வேறாயும் இருந்து செயல் நிகழ்த்துதலே வாழ்க்கை எனப்படும் என்றால், நிலைகள் பின்னை வேறு எவ்வாறிருக்கும்? இயற்கையின் வியப்பன்றோ இது!

குறிப்புரை: ஈன் பருந்து - குஞ்சு ஈன்ற பருந்து. உயவும் - அதன்பொருட்டு முயற்சிகள் கொள்ளும். வான் பொரு - வானத்தை அளாவிய. சினை - கிளைகளைப் பொருந்திய. பொரி அரை - பொரிந்த அடிமரத்தையுடைய. புள்ளி நீழல் - இடையிடையே புள்ளிகள் தோன்றும் நிழலில். கட்டளை அன்ன - பொன் உரைக்குங் கட்டளைக்கல்லில் தோன்றுங் கோடுகளைப் போல. வட்டு அரங்கு - சூதாட்டக்கோடுகள் பொருந்திய இடத்தை. இழைத்து - அமைத்துக்கொண்டு. நெல்லி - நெல்லிக் காய்களால், வில் ஏர் உழவர் - வில்லால் உழுது உண்ணும் வில் உழவர்களாகிய கள்வர்களுடைய; வில்லாற் கொலைசெய்து உண்ணும் ஆறலை கள்வர்கள் என்பது கருத்து. வெம் முனை சீறூர் - கொடிய இருப்பிடங்களையுடைய சிற்றூர்களையுடைய. சுரன் முதல் - சுரத்திடத்தில். வந்த உரன் மாய் மாலை - சேர்ந்த நமது மன வலிமையைக் கெடுக்கும் மாலைப்பொழுதினை. உள்

ளிய - கருதிய. மனை - மனையில். மாண் சுடரொடு - மாட்சிமைப்பட்ட விளக்கை ஏற்றி அதன் சார்பில். படர் பொழுது என - பலவும் நம்மைப்பற்றி அவள் நினைக்கும்பொழுது என்று. 'படர் பொழுது' என மாலையை 'உள்ளினேனல்லனே யான்' என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். (௩௧)

## நல் வாழ்க்கை

[மக்களுக்கு நல் வாழ்க்கை, இயற்கைக் காதலிலிருந்து அரும்பும் இல் வாழ்விலேயே இனிது அமைகின்றது. காதலர், அதனால், மேன்மேற் காதலராய் இனியராய் விளங்குகின்றனர். பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பது அவரிடம் இல்லை. காரணம், உயிர்நேயம் உடையராதலின். நல்வாழ்க்கையின் அடிப்படையாகிய இவ் வியல்பு இச் செய்யுளிற் காணப்படுகின்றது.]

முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்ன தாகக் கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன்றுணைப் பயிரும் குன்ற நாடன்,
'குடிநன் குடையன்; கூடுநர்ப் பிரியலன்;
கெடுநா மொழியலன்; அன்பினன்' எனநீ
வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்!
நல்லை காணிற் காதலந் தோழீ!
கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயவரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்,
புதுவது புனைந்த திறத்தினும்,
வதுவை நாளினும் இனியனால் எமக்கே.

—அகநானூறு, ௩௫௨.

திருமணம் நிகழ்ந்தபின் தலைவி, தன் கணவன் இல்லத்துக்குச் சென்றாள். தலைவனை அவள் கூடுதற்கு அநுகாரமும் பெருங் காரணமாயிருந்த தோழி, சிலநாள் கழிந்தபின், தலைவியைப் பார்த்து வரலாம் என்று புறப்பட்டாள். தலைவியின் மாளிகையை அடைந்து சில பகல் தங்கினாள். தலைவி அவளை அன்போடு நடத்தி அளவளாவி வந்தாள். ஒரு நாள், தலைவியை நோக்கி, "தலைவன் நிலை எப்படி?" என்று தோழி கேட்டாள். தலைவியின் வாயினாலுந் தெரிந்துகொள்ள ஆவலிருக்குமன்றோ! அதற்கு அவள் பின்வருமாறு சொல்லுகின்றாள் :

"கூத்தர்கள் விழா நிகழ்த்துகின்ற ஊரில், கூத்து ஆடும் விறலியர்களின் பின்னால் நிற்கும் மத்தளக்காரரைப் போல, அகன்ற மலைப்பாறைகளில் தோகையை விரித்து ஆடுகின்ற மயிலின் பின்னால் ஆண் குரங்கு, குடத்தைப் போன்ற பெரிய பலாப் பழங்களைக் கையில் எடுத்துக் கொண்டு தன் மந்தியை அழைக்கின்ற மலைகளையுடைய நாடராகிய நம் தலைவரை........"

என்று சொல்லிக்கொண்டே வந்து "என்ன தோழி, கேட்டுக்கொண்டு வருகிறாயா?" என்று தோழியைத் தலைவி சற்று விழிப்பாக்கினாள்.

"எல்லாம் கருத்துக்கூட அறிந்துகொண்டுதான் வருகிறேன்; நீங்கள் சொல்லுங்கள்" என்று அதற்குத் தோழி விடை சொன்னபின், தலைவி, மேலும் தொடர்ந்து சொல்லுகிறாள்.

"உயர்ந்த குடியிற் பிறந்தவர்; கூடினவரைப் பிரிய மாட்டார்; நாவினால் தீச் சொல் சொல்லார்; பேரன்பினர்" என்று நீ வல்லனவெல்லாங் கூறி இயன்ற அளவும் முயன்று முன்பு அவரை என்னுடன் பொருத்தி வைத்தனை. அன்பிற்சிறந்த தோழீ! உற்றுக் கருதுமிடத்து, நீ மிகவும் நற்செயலையே செய்திருக்கின்றனை."

தோழி : "அப்புறம்!"

தலைவி: "அதியமான் நெடுமான் அஞ்சியின் புகழை இசைப் பாட்டில் நிறுத்தும்பொருட்டுப் பாண்மகன் அளவு செய்து நிறுத்தும் பண்ணிலும், புதியதாக அமைக்கும் இன்னிசை உண்டன்றோ! அதனைவிடத் தலைவர் நாளும் எனக்கு இனியராயிருக்கின்றார்."

தோ: "அப்படியா!"

த: "திருமணஞ் செய்துகொண்ட நாளைவிட மேலு மேலும் இனியவராய் விளங்கி அன்புசெய்து வருகின்றார்."

தோழிக்கு இந்த மகிழ்ச்சியுரையைக் கேட்க, உள்ளம் எப்படி யிருக்கும்? அவள், மிகவுங் களிப்படைந்து, "தாயே, நீங்கள் 'ஆடும் மயிலின் பின்னால் முழவன் போலக் கடுவன் பலாப்பழம் ஏந்திநிற்கின்றது' என்று கூறும்போதே, 'நம் தலைவர் உங்கள் மகிழ்ச்சிக்குரிய அன்பின் செயல்களைச் செய்து வருகின்றார் என்று தெரிந்து கொண்டேன். நீங்கள் எப்போதும் இம் மகிழ்ச்சிப் பெருக்கிலேயே நிலைத்திருக்கவேண்டும்" என்று உள்ளங் கனிந்த மகிழ்வுரையினைக் கூறினாள்.

இயற்கைக் காதலால் அமைந்த இல்வாழ்வு இங்ஙன மன்றி, வேறெவ்வாறு இருக்க முடியும்?

**குறிப்புரை:** முடவு முதிர் - வளைவு நிரம்பிய. குடம் மருள் - குடத்தை ஒத்த. பழம் - பலாப் பழத்தை. பல் கிளைத் தலைவன் கல்லாக் கடுவன் - பல சுற்றங்களுக்குந் தலைவனான, மரமேறுந் தொழிலையன்றி வேறொன்றையுங் கல்லாத ஆண் குரங்கு. பாடு இமிழ் அருவிப் பாறை மருங்கின் - ஒலி முழங்குகின்ற அருவியினையுடைய பாறையின் பக்கத்தில். ஆடுமயில் முன்னதாக - ஆடுகின்ற மயில் எதிரே ஆடுவதாக. கோடியர் - கூத்தர்களின். விழவு கொள் - விழவினைக் கொண்ட. மூதூர் - பழைய ஊரில். விறலி - கூத்தாடுவோள். பின்றை - பின்னால். முழவன் - மத்தளக்காரன். அகப்பட - இரண்டு கைகளின் உட்பக்கமாய்ப் பொருந்த. தழீஇ - தழுவிக்கொண்டு. இன் துணை - தனது இனிய பெட்டையாகிய மந்தியை. பயிரும் - அழைக்கின்ற. குன்ற நாடன் - மலைநாடராகிய தலைவரை. கெடு நா -

திய சொற்கள். வாய்வதின் - நேர்ந்த அளவில்; நேர்ந்த அளவில்; முயன்று என்றபடி. புணர்த்தோய் - பொருத்தினேயே. காணின் - எண்ணுமிடத்து. காதலம் தோழீ - காதல் தோழீ; அம், சாரியை. நல்லை - நீ நல்லவளாயிருக்கின்றனை; நல்லதையே செய்தனை என்பது கருத்து. கடு பரிப் புரவி நெடு தேர் - விரைந்த நடையினையுடைய குதிரைகள் பூட்டிய உயர்ந்த தேரையுடைய. அஞ்சி - அதியமான் நெடுமான் அஞ்சியினது. இசை - புகழை. நிறுத்த - உலகில் நிலைநிறுத்தும்பொருட்டு. நய வரு பனுவல் - இனிமை யமைந்த செய்யுளில். தொல் இசை நிறீஇய - பழைமையான இசையிலக்கணங்களை நிறுத்திய. உரைசால் - புகழ் அமைந்த. எண்ணு முறை - அவற்றைத் தக்க அளவு முறையில். நிறுத்த - நிறுத்திய. பண்ணினுள்ளும் - இன்னிசையிலும். புதுவது புனைந்த திறத்தினும் - தானே தன் அறிவாற் புதிய வகையினை அமைத்த இசைக்கூறுபாட்டைப்பார்க்கிலும். வதுவை நாளினும் - திருமண நாளைப்பார்க்கிலும். எமக்கு இனியன் - எமக்கு இனியராயிருக்கின்றார். ஆல், அசை. (௩௨)

## திருந்திய வாழ்க்கை

[பலர்க்கும் ஆதரவாய் உதவியுந் துணையுமாய் இருப்பதற்கேற்ற நிலைத்த அமைப்பு அமையப்பெற்றது, 'திருந்திய வாழ்க்கை' எனப்படுகின்றது. அல்லாதது, 'திருந்தா வாழ்க்கை' எனப்படுகின்றது. வறுமையும் அறியாமையும் ஒழிந்து வளமும் அறிவும் அமையின் இந் நிலை அமையும். குடிமக்களின் திருந்தா வாழ்க்கைக்கு அரசனும் ஓரளவு காரணமாகின்றான்.]

பயங்கெழு மாமழை பெய்யாது மாறிக்
கயங்களி முளியுங் கோடை யாயினும்,
புழற்கால் ஆம்பல் அகலடை நீழற்
கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக ஏற்றை
நாகிள வளையொடு பகன்மணம் புகூஉம்
நீர்திகழ் கழனி நாடுகெழு பெருவிறல்!
வான்தோய் நீள்குடை வயமான் சென்னி!
சான்றோர் இருந்த அவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல

வல்லே களைமதி யத்தை ; உள்ளிய
விருந்துகண் டொளிக்குந் திருந்தா வாழ்க்கைப்
பொறிப்புணர் உடம்பின் தோன்றிஎன்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே.

—புறநானூறு, உ௬௬.

திருந்திய வாழ்க்கையாவது நிலைபெற்ற நல்வாழ்க்கை. அதற்கு இச் செய்யுளில் தெளிவான விளக்கம் வந்திருக்கின்றது. தம்மைக் கருதி வருகின்ற விருந்தினர்க்கு ஐம்பொறிகளையுடைய இவ் வுடம்பினால் தக்க தொண்டு செய்து அறிவின்பங் கொண்டு ஏற்றபடி விருந்தோம்பி மகிழும் நிலையையுடையதே திருந்திய வாழ்க்கை என்பது அவ் விளக்கத்தின் உள்ளுறை. அந் நிலை அமையாதது 'திருந்தா வாழ்க்கை' எனப்படுகின்றது. வாழ்க்கையை எவ்வளவு வடிகட்டி முன்னைத் தமிழ்ப் பெருமக்கள் அறிந்திருக்கின்றனர் என்பது இதனால் தெரிகின்றது. பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர், சோழன் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியை நோக்கித் தமது இத்தகைய திருந்தா வாழ்க்கையை விரைந்து நீக்குக எனக் கூறிப் பரிசில் கேட்கும் நிலையில் இச் செய்யுள் இயற்றப்பட்டிருக்கின்றது.

அங்ஙனங் கேட்குமிடத்தும் புலவர் ஓர் அழகிய உவமையை எடுத்துக்கூறியும், இளஞ்சேட் சென்னியின் நாட்டு வளத்தை விரித்துரைத்தும் அவனுக்கு நல்லெண்ணத்தையும் மிக்க கிளர்ச்சியையும் உண்டுபண்ணுகின்றார்.

உவமை வருமாறு : அறிவிற்சிறந்த பெரியோர்கள் ஒருங்கிருந்த பேரவையில் ஒருவன் சென்று 'எனக்குத் துணையாகுக' என்று அடைக்கலங் கேட்கும் ஆரவார வொலிபோல எனது 'வறுமையை நீக்குக' என்னும் எனது வேண்டுகோள் ஒலியும் நின்முன் நிகழ்கின்றது என்பது. சான்றோர் உடனே அவனுக்குத் துணையாகி அவன் துயர் நீக்குதல்போல எனது வறுமையையும் விரைந்து நீக்கு

வாய் என்பது அதன் பொருள். இவ்வுவமையைக் கேட்ட பின்பும் சோழ மன்னனுக்கு மனம் இரங்காமலிருக்கக் கூடுமோ? அங்ஙனம் இருந்தால், அவன் 'சான்றோன் அல்லன்' என்பதன்றோ பெறப்பட்டுவிடும்!

நாட்டு வளம் வருமாறு: இளஞ்சேட் சென்னியை விளிக்கும்போது, இத்தகைய வளம் பொருந்திய நாட்டை யுடையவனே என்னுமிடத்தில் இது வருகின்றது. 'மழை பெய்யாமல் நீர் நிலைகள் வண்டலாய் உலர்ந்து கோடை யானாலும் சோழமன்னன் நாட்டில் கழனிகள் மட்டும் நீர் திகழ்ந்தபடியே இருக்குமாம். காவிரியின் வளத்தால் இங்ஙனம் இருக்கலாம். மேலும், அக் கோடை நிலையி லும் ஆம்பல் தண்டுகள் வளமாக வளர்ந்து அகன்ற இலை களை விட்டு அவற்றின் கீழே சிற்றுயிர்களின் உயிர்வாழ்க் கைக்கு நிழல் பயந்து காக்குமாம். அவ்வாறு நீரும் நிழலுங் கிடைக்கும்போது சிற்றுயிர்களுக்கு என்ன குறை? களிப்பின் மிகுதியால் நத்தையின் ஆண், சங்குப் பூச்சி யின் பெண்ணோடு இனந் தெரியாமற்கூடக் கூடிப் பகல் நேரத்திலேயே மணங்கொள்ளுமாம். அத்தகைய செழுமை வாய்ந்த நாட்டினையும், பெருவெற்றியினையும், தண்ணிய ஆட்சியினையும், வலிய படையினையும் உடைய இளஞ்சேட் சென்னியே என்று விளித்துத்தான் பெருங்குன்றூர் கிழார் தமது கருத்தினை அறிவித்து வேண்டுகின்றார். மன்னன் மறுக்க முடியுமா? தனது நாட்டில் சிற்றுயிர் களும இவ்வளவு செழுமைக் களிப்பில் இருக்கும்போது, பேரறிவிற் சிறந்த புலவர்பிரான் திருந்தா வாழ்க்கையில் இருப்பது, தனக்கு எவ்வளவு குறைவு என்று அவனுக்குத் தோன்றுமன்றோ!

**குறிப்புரை:** பயம் - பயன். மா - பெரிய. கயம் - நீர் நிலைகள். களி - களியாய்; வண்டலாய். முளியும் - உலறுகின்ற. புழல் கால் - தொளை பொருந்திய தண்டினையுடைய. அடை - இலையின். கதிர்க் கோட்டு நந்தின் - கதிர் என்னும் பொற் கொல்லர்களின் கருவியைப்போன்ற இரு நுனிகளை முகத்தில் உடைய நத்தையின். எற்றை - ஆண். சுரிமுகம் - சுருங்கி ஒடுங்

கும் முகத்தையுடைய. எற்றை என்பதில் ஐ, சாரியை; அதற்குப் பொருள் இல்லை; உருபு அன்று. சொல், ஏறு என்பதுதான். நாகு இள வளையொடு - வளையின் இள நாகொடு. வளை - சங்கு. நாகு - பெட்டை. விறல் என்பதற்கு வெற்றியை உடையோனே என்று விளிப்பதுபோலப் பொருள்கொள்ளலாம். வான் தோய் - வானம் அளாவிய. வய மான் - வலிய குதிரையையும் உடைய. சென்னி - இளஞ்சேட் சென்னியே. உற்றோன் - உற்றோனது; உற்றோனது பூசல்போல என்றபடி. ஆசு ஆக என்னும் பூசல் - ஆதரவு ஆகுக என்னும் கூவுதலாகிய வேண்டுகோள் ஒலி; 'எனக்குத் துணையாகுக என்னும் வேண்டுதல் ஓசை' என்பது கருத்து. ஆசு - பற்றுக்கோடு; அதாவது, தாங்கும் ஆதரவு. வல்லே களை - விரைவாய் நீக்குவாய். மதி, அத்தை, அசைச் சொற்கள். உள்ளிய - நினைத்த. பொறி புணர் உடம்பில் - வாளா ஐம் பொறிகளோடு கூடிய உடம்பில். தோன்றி - வெறும் பாவைபோலத் தோன்றி. அறிவு - அவற்றைப் பயன்படுத்தும் அறிவு. நல்கூர்மை - வறுமையை. 'என் நல்கூர்மையை வல்லே களை' என்று முடித்துக்கொள்ளவேண்டும். (௩௩)

## காமமும் காதலும்

[மக்கட்கு இவ் விருவகை உணர்வும் இளமையில் முகிழ்ப்பன. காமம், அழியும் உடம்பைப்பற்றி நிகழும் அவா; காதல், அழியாத உயிருணர்வைப்பற்றி நிகழும் அன்பு. வாழ்க்கையிற் சிலநாள் கழிந்தபின் காமம் தொலைவுறும்; காதல் நிலையுறும்.]

ஓரூர் வாழினும் சேரி வாரார்;
சேரி வரினும் ஆர முயங்கார்;
ஏதி லாளர் சுடலை போலக்
காணக் கழிப மன்னே; நாணட்டு
நல்லறி விழந்த காமம்,
வில்உமிழ் கணையின் சென்றுசேட் படவே.

—குறுந்தொகை, உ௩௧.

ஆண் பெண் உள்ளத்திற் காமம், காதல் என்று இருவகைப்பட்ட உணர்வுகள் இயங்குகின்றன. காமம் என்பது ஆசை; முதன்மையாக உடலைப்பற்றி இயங்குவது.

நாணமும் நல்லறிவும் இழப்பதற்கு ஏதுவானது. காதல் என்பது அன்பு; முதன்மையாக உயிரைப்பற்றி இயங்குவது.

காமம் இளமையில் முறுகி நிற்கும்; உடல் தளர்ச்சியாகி அழகு மாறினால், காமமும் வரவரத் தளர்ந்து தொலைவாகும். காதல் அங்ஙனமன்று; எப்போதும் ஒன்றுபோல் உயிர் நட்பாக ஒளிரும் காதலர் தம்முட் பிரிய நேர்ந்தாலும், அவர் காதல் என்ஞான்றும் நிலையாயிருக்கும்.

தலைவன் ஒருவனும் தலைவி ஒருத்தியும் வாழ்க்கை தொடங்கிச் சில காலம் ஆயின. நிலையாமையையே நிலையாக உடைய உடல் தளர்ந்து அழகு மாறத் தொடங்கியது. அவர்தமக்குள், காமமும் இறுக்கந் தளர்வதாயிற்று. ஒரு நாள் தலைவியோடு அளவளாவியிருக்கத் தலைவன் விரும்பினான்; தோழி தலைவன் வருகையைத் தலைவிக்கு அறிவித்தாள். அதற்கு அவள் சொன்ன விடையே இச் செய்யுள். பொருள் பின்வருமாறு:

"தலைவர் நம்மோடு ஒரே ஊரில் இருக்க நேர்ந்தாலும் இப்போதெல்லாம் நாம் இருக்கும் தெருவில் வாரார்; வந்தாலும் மனம் நிறைவு கொள்ளத் தழுவார்; நமது நாணத்தை அழித்து நல்லறிவையும் இழப்பித்த தாழ்ந்த காமமானது வில்லிலிருந்து எறியப்பட்ட அம்புபோல் இனி நெடுந் தொலைவில் நீங்கி அழியும்படி நம்மை அயலாரது சுடலையைப்போல் நினைத்து வெறுப்புடையராய், கண்டுங் காணாது நீங்குவர்."

இனி, அன்பொழுக்கமேயன்றிக் காமவொழுக்கம் ஏது என்பது இதன் கருத்து. வரவரத் தகுதியான உள்ளம் வரவேண்டியது முறைதானே!

குறிப்புரை: சேரி - தெரு. ஆர - நிறைவுண்டாக. முயங்கார் - தழுவார். ஏதிலாளர் - அயலாரது. சுடலை - சுடுகாடு. சுடுகாடு என்றால், உடனே வெறுப்புண்டாவது இயல்பு; அதிலும் அயலாரது சுடுகாடு என்றால் எவ்வளவு அருவருத்து ஒதுங்

இச் செல்லும்படி நேரும்; காமத்தில் அப்படி ஓர் அருவருப்பு இப்போது தோன்றியிருக்கின்றதே என்பது கருத்து. காணு - காணுமல்; கண்டுங் காணுமல் என்றபடி. கழிப - நீங்குவர். மன், ஏ, அசைகள். அட்டு - அழித்து. இழந்த - இழப்பித்த. வில் உமிழ் - வில்லிலிருந்து எறியப்பட்ட. கணை - அம்பு. சேண் பட - தொலைவில் அழியும்படி. 'காமம் சேட்பட, சுடலைபோலக் காணுக் கழிப' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். (௩௪)

## திருமணம்

['திருமணம்' என்பது உள்ளத்தின் புணர்ப்பு; உடம்பின் புணர்ப் பன்று. உள்ளப் புணர்ப்பின் வழியே பின்பு உடம்பின் புணர்ப்பு நிகழும். உள்ளப் புணர்ப்போ ஆற்றல் கண்ட விடத்துத் தானே கவரப்பட்டு நிகழ்தற்குரியது. அந்த ஆற்ற லில் முகிழ்க்கும் வாழ்க்கையே, அழகும் மணமு முள்ளதா யிருக்கும்.]

ஒன்றிப் புகரினத்து ஆயமகற்கு ஒள்ளிழாய்
இன்றெவன் என்னை எமர்கொடுப்பது? அன்று [அவன்
மிக்குத்தன் மேற்சென்ற செங்காரிக் கோட்
புக்கக்காற் புக்கதென் நெஞ்சு. [டிடைப்

—கலித்தொகை, ௧0௫ : ௬௬ - ௯.

எல்லாருந்தாம் திருமணஞ் செய்துகொள்கின்றூர்கள்; வாழ்க்கையும் நடத்துகின்றூர்கள். 'திருமணம், உள்ளத் தின் புணர்ப்பு' என்று அறிகின்றபோதுதானே அதன் நுட்பமெல்லாம் விளங்குவதற்கு இடமுண்டு.

உடம்பை வேண்டுமானுல், மற்றவர்கள் வலிந்து சேர்த்துவைக்க முயலலாம். உள்ளம் யார் கைக்கு அடங்குவது? அது தானே விரும்பிச் சேர்ந்தாலன்றி வேறு வாயிலே இல்லையே. அவரவர் உள்ளம் அவரவர் கைக்கே அடங்கியதன்று. உள்ளங் கவருங் கள்வற்கே அது வயமாதற்குரியது.

உள்ளம் ஈர்ப்புண்டு சென்று சேரவேண்டும். அதற்கு, அதனை ஈர்க்கும் உள்ளம் தக்க ஆற்றலுடையதாயிருக்க

வேண்டும். ஆற்றல் காணப்படாத இடத்தில் எந்த உள்ள மும் ஏர்ப்புண்டு நில்லாது. உள்ளத்தின் புணர்ப்புக்கு இதுவே ஏது.

உலகத்தில் நடைபெறுந் திருமணங்கள் இங்ஙனம் ஆற்றல் கண்டு உள்ளங்கள் இயல்பில் புணர்ப்புறுதலால் நிகழ்கின்றனவா? அங்ஙனம் நிகழாதவிடத்து, அவை யெல்லாம் வெறும் உடம்புக் கூட்டங்களே யல்லாமல், வேறு யாவை? அவர்கள் வாழ்க்கை ஆற்றலால் முகிழாத வாழ்க்கைதானே! அப்படியிருக்கும்போது, அந்த வாழ்க் கையில் தோன்றுங் குழந்தைகளினிடம் ஏதேனும் பேராற் றல்களை எதிர்பார்க்க முடியுமா? அவை வெறும் சதைப் பிண்டங்கள் தாமே? மக்கள் வாழ்க்கை இங்ஙனம் வழி வழிக் கெட்டுப்போவது நன்றாகுமா?

ஆயரினத்தில் ஒரு நங்கை இருந்தாள். ஒரு நாள், அவ் வினத்தில் தோன்றிய இளைஞனொருவன், தன்மேல் எதிர்த்துவந்த சிவந்த கரிய எருதின் கொம்புகளினிடையே பாய்ந்து அதனை அடக்கினான். அந் நங்கையின் கண் ணுக்கு அந்த வீரத்தின் தோற்றம் ஒரு தெய்வ ஒளி யாய்த் தெரிந்தது அவள் உள்ளம், தானே அவ் விளை ஞன் திறத்தில் வீழ்ந்தது. அந் நங்கையை ஆட்கொள்ள எழுந்த வீரச்செயலே அதுவென்று துணியவேண்டி யிருக் கின்றது. இது மறைவில் நிகழ்ந்தது.

நாட்கள் சென்றன. நங்கையின் சுற்றத்தார், அவ ளுக்கு மணமகன் தேட விரும்பினர். எவ்வாறோ அவர்கள் நாட்டம், அந் நங்கையின் உள்ளங் கவர்ந்த இளைஞனிடமே வீழ்ந்தது. தோழி, இந்த மகிழ்ச்சியான செய்தியைத் தலைவிக்குச் சொன்னாள். அதற்கு அவள்,

"ஒள்ளிய இழைகளை யணிந்த தோழீ! புகர் நிறமுள்ள ஆனினங்களையுடைய அந்த ஆய மகனுக்கு, இன்று எம் மவரெல்லாரும் ஒன்று சேர்ந்து என்னைக் கொடுப்ப தென்பது என்ன? அன்றைக்கு அவன், தன்மேல் எதிர்த்துவந்த சிவந்த கரிய எருதின் கொம்பினிடைப்

புகுந்தபோதேதான் என் நெஞ்சு அவனிடம் புகுந்து விட்டதே !'' என்று மகிழ்வோடு கூறினாள்.

திருமணத்தின் உண்மை இயல்பை இச் செய்யுட் பகுதி எவ்வளவு தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது !

**குறிப்புரை:** ஒன்றி - ஒன்று சேர்ந்து. 'இன்று என்னை எமர் கொடுப்பது எவன்' என்று கொள்ளவேண்டும். எமர் - எம் சுற்றத்தார். எவன் - யாது? மிக்கு-மனஞ் செருக்கி எதிர்த்து. செங் காரி - சிவந்த கரிய எருதின். கோட்டிடை - கொம்புகளி னிடையே. புக்கக்கால் - புகுந்தபோதே. 'என் நெஞ்சு புக் கது' என்க. (ருடு)

# 5. கடமை

### பற்றற்ற பரிசில்

[பெறலரிய அணிகலன்களும் செல்வமும் பரிசிலாக் வந்து எதிரிற் குவிந்து கிடக்கின்றன. அரிசில்கிழார் அவற்றை ஆண்மை யோடு மறுத்துத் தாம் வேறு பற்றற்ற பரிசிலை வேண்டு கின்றார்.]

அன்ன வாகநின் அருங்கல வெறுக்கை ;
அவைபெறல் வேண்டேம்; அடுபோர்ப் பேக !
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட, என்னை நயந்து
பரிசில் நல்குவை யாயின், குரிசில் ! நீ
நல்கா மையின் நைவரச் சாஅய்
அருந்துயர் உழக்குந்நின் திருந்திழை அரிவை
கலிமயில் கலாவம் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய,
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே.

—புறநானூறு, கசசு.

வையாவிக்கோப் பெரும்பேகன் என்பவன் செந்தமிழ் நாட்டின் கடையெழு வள்ளல்களுள் ஒருவன். மலை நாட்டை யுடையவன். இவனுக்குக் 'கண்ணகி' என்னும் மனைவி ஒருத்தி இருந்தாள். ஏதோ காரணத்தால், அவளுக்கும் இவனுக்கும் வேறுபாடு உண்டாயிற்று. பிரிந்திருந்தான். பேகன், தன் காலத்தில் விளங்கிய கபிலர், அரிசில்கிழார் முதலிய சிறந்த புலவர்பெருமக்களுடன் நட்புச்செய்து பழகும் அருங்குணம் உடையவன்.

ஒரு நாள் அரிசில்கிழார் பேகனிடம் வந்தார். அவன் ஆட்சி செய்கின்ற மலைநாட்டின் இயற்கை வளத்தை நினைந்து, தமது சிறிய யாழினைச் செவ்வழிப் பண்ணில் அமைத்து, அதனைப் பாராட்டிப் பாடினார். வள்ளல் அவர் அன்புக்கு மகிழ்ந்து வழக்கம்போல அன்றும், பெறுதற்கரிய அணிகலன்களும் செல்வமும் பரிசில் வழங்கித் தனது பேரன்பைப் புலப்படுத்தினான். புலவர் அப்போது பேகனை நோக்கிப் பின்வருமாறு தமது கருத்தினை அறிவித்து அவனுக்கு ஒரு கட்டளையிட்டார்.

"நின் அருங்கலன்களும் செல்வமும் பரிசிலுக்கு அவ்வளவு எளியனவே ஆகுக; ஆயினும், கொல்லும் போர்த் தொழிலையுடைய பேக! யாம் இன்று அவை பெறுதலை வேண்டேம்; எமது சிறிய யாழினைச் செவ்வழிப் பண்ணில் அமைத்து நினது வலிய நிலமாகிய சிறந்த மலைநாட்டினை யாம் பாராட்டிப் பாட அதன்பொருட்டு எம்மை அன்பு செய்து பரிசில் நல்குவையானால், யாம் விரும்பியதொன்றை நீ தருதல் வேண்டும்" என்றார்.

வள்ளல்களில் ஒருவனான பேகன் உள்ளம் பரிசிலுக்குப் பின்வாங்குவதன்று. அக் குறிப்பறிந்த அரிசில் கிழார் பின்னும் அவனை நோக்கி,

"செம்மால்! நீ அருள் செய்யாமையினால், கண்டார் இரங்கும்படி மெலிந்து மிக்க துயரத்தால் வருந்துகின்ற நின் உரிமை மனைவியாகிய கண்ணகியின் புனிதமான உள்ளத்தை மகிழ்விக்கும்பொருட்டு உடனே நின் தேரைப்

பூட்டுக ; ஈதே நீ எமக்குத் தரவேண்டும் பரிசில் !'' என்று கூறிக் கட்டளையிட்டார்.

நிறைய அணிகலன்களும் செல்வமும் தாமே கைவருமானால் அவற்றை மறுப்பார் யார்? அரிசில்கிழார் தம் நலங் கருதாமல், பேகனும் அவன் உரிமை மனைவியும் மகிழ்வோடு ஒருமித்து வாழ்தலையே விரும்பியது எவ்வளவு பெருந்தன்மையா யிருக்கின்றது !

குறிப்புரை : அன்னவாக - பரிசிலுக்கு அவ்வளவு எளியனவேயாகுக. அருங் கல வெறுக்கை - அருங்கலன்களும் வெறுக்கையும். வெறுக்கை - செல்வம். சீறி யாழ் - சிறு யாழ். செவ்வழி என்பது முல்லை நிலத்துப் பண் ; மலைநாட்டை யடுத்த கானத்தில் இசைக்க நேர்ந்தமையால், 'செவ்வழி பண்ணி' என்றார். நயந்து - விரும்பி. நல்காமையின் அருள்புரியாமையால். நைவர - இரங்கும்படி. சாஅய் - மெலிந்து. திருந்து இழை அரிவை - திருந்திய அணிகலன்களையுடைய அரிவையாகிய நின் மனைவியினது. கலி மயில் கலாவம் கால் குவித்தன்ன ஒலிமென் கூந்தல் - தழைத்த மயிலின் தோகையை அதன் பிரிவுகள் குவித்தாற்போன்ற செழித்த மெல்லிய கூந்தலில். கலி - தழைத்த. கலாவம் - தோகை. கால் - தோகையின் பிரிவுகள். கண்ணகியின் தலைமயிர் சிக்கு வகிராமற் சேர்ந்து கிடந்தமையால், தோகையின் பிரிவுகள் குவித்தாற் போன்ற எனப்பட்டது. ஒலி - தழைத்த. கூந்தல் - கூந்தலில். கமழ் புகை கொளீஇ - மணங் கமழும் நறும்புகை ஊட்டி. கொளீஇ - கொள்ளும்படி செய்து ; அதாவது, ஊட்டி என்பது. தண் கமழ் கோதை புனைய - குளிர்ந்த மணங்கமழும் மலர்மாலையைச் சூட்டும் பொருட்டு. வண் பரி நெடு தேர் பூண்க நின் மா - விரைந்து செல்லுதற்குரிய வளமான பெரிய தேரை நின் குதிரைகள் பூண்பனவாக. பிரிந்து வருந்தும் நின் மனைவியாகிய கண்ணகியின் கூந்தலில் நறும் புகை ஊட்டி மாலை புனையும்பொருட்டு நின் குதிரைகள் தேரைப் பூண்க என்றது, 'கண்ணகியை மகிழ்வித்தற்கு நீ உடனே செல்க' என்னுங் கருத்துடையது. (௩௬)

## கடமை யுள்ளம்

[வீரக் குடியினர்க்குக் கடமை யுணர்வு சிறந்திருக்கின்றது. தாய் தன் மகனைப் போர்க்களத்திற் காண்பதையே பெரிதும்

விரும்புகின்றாள். தன் அருகிருத்தலை விரும்புவதில்லை. மகன் புலியைப்போல் இருக்கவேண்டுமென்பது அவள் கருத்து. அங்ஙனமானால், அவள் வயிறு புலி கிடந்து சென்ற குகையை ஒக்கும்.]

சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள னோஎன வினவுதி ; என்மகன்
யாண்டுள னாயினும் அறியேன் ; ஓரும்
புலிசேர்ந்து போகிய கல்அளை போல
ஈன்ற வயிறோ இதுவே ;
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.

—புறநானூறு, அசு.

ஒரு வீரத் தாய்க்கும் அவளுக்குப் பிறந்த மகனுக்கும் உள்ள தொடர்பும் கடமைகளும் பற்றற்ற நெஞ்சப் பாங்கும் இச் செய்யுளில் எடுத்து விளக்கப்பட்டிருக்கும் முறை மிக்க உருக்கந் தருவதாயிருக்கின்றது. 'காவற் பெண்டு' என்னும் அம்மையாரால் ஈது இயற்றப்பட்டது.

ஒருநாள் ஒரு மாது தன் வீட்டுக்கு வந்து, "அம்மே நின் மகன் எங்கே?" என்று கேட்ட கேள்விக்கு விடையாக இச் செய்யுள் அவ் வம்மையாரால் உரைக்கப்பட்டிருக்கின்றது. இதன் பொருள் :

"அம்மே! எனது சிறிய இல்லத்துக்கு வந்து, இதன் அழகிய தூணை ஒரு கையினாற் பற்றி நின்றுகொண்டு, 'நின் மகன் எங்கிருக்கின்றானோ' என்று இரங்கிக் கேட்கின்றனை ; என் மகன் எங்கிருக்கின்றானாயினும் யான் அறியேன். புலி வந்து சற்றுநேரம் படுத்துக்கொண்டிருந்து பின் வெளிப்பட்டுப் போன மலைக்குகை போல அவனைப் பெற்றெடுத்த வயிறோ இது. அவன் பெரும்பாலும் போர்க்களத்தின்கண் காணப்படுவான்" என்பது.

"என் மகன் புலியைப் போன்றவன் ; என் வயிறு புலி கிடந்த குகை போன்றது" என்று அம்மையார் எடுத்

துக்காட்டிய கருத்துத்தான் இங்கே மிக்க உருக்கந் தரு கின்றது. புலிக்கும் குகைக்கும் இடையே ஓர் உறவும் இல்லாமை போலப் போர்க் கடமையை நினைந்து பற்றற்ற முறையிற் பேசிய கருத்து இதனாற் பெறப்படுகின்றது. மகன் போர்க்களத்திலேயே காணப்படுவன் என்று அம்மை யார் உறுதி செய்ததும், புலி என்னும் உவமையால் தம் மகனது வீரத்தைப் புலப்படுத்தியதும், அவன் கடமை யுணர்வில் தமக்குங் கருத்திருக்கின்றமை தெளிவித்ததும், தம்மை வந்து வினவிய மாது, வினவியபோது நின்றிருந்த நிலையை ஓவியம் எழுதினாற்போல இதன்கண் சித்திரித் திருப்பதும் அறிந்து மகிழ்தற்குரியன.

வீரக் குடியினரின் பற்றற்ற கடமையுள்ளம் இவ் விடைமொழியினால் எவ்வளவு அழகாக விளங்கித் தெரி கின்றது!

குறிப்புரை: சிற்றில் என்றார் தாழ்மை புலப்படுத்துதற்கு. கல் தூண் என்றமையால் இல்லம் பெரிய இல்லமென்றே தோற்றுகின்றது. ஒரும், மாதோ என்பன அசை; பொரு ளில்லை. சேர்ந்து - வந்து கிடந்து. கல் - மலை. அளை - குகை. போர்க்களத்தான் - போர்க்களத்தில். (கூஎ)

## அறமும் வீரமும்

[அரசர்க்கு வெற்றி தருவது வெறும் படைக்கலன்கள் அல்ல; அறமும் வீரமுமேயாம். இவற்றை யுடையோர், பெரும் பாலும் போரை விரும்பார். அமைதியையே நாடித் தூது விடுவர். தூதரும் கண்ணஞ்சாது வெற்றிக்குரிய உண்மை களைத் தம் தலைவன் சிறப்புக்களுடன் நயனும் உறுதியுந் தோன்ற எடுத்துக்கூறுதல் கடமை.]

இவ்வே, பீலி அணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து
கடியுடை வியன்நக ரவ்வே; அவ்வே,
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொல்துறைக் குற்றில மாதோ என்றும்;

உண்டாயின் பதம் கொடுத்து
இல்லாயின் உடன்உண்ணும்
இல்லோ ரொக்கல் தலைவன்
அண்ணல்எங் கோமான் வைந்நுதி வேலே.

—புறநானூறு, கூ௫.

ஔவையாருக்கு இருந்த துணிவு பிறருக்கு அமைவது மிகவும் அருமை; மேலும், அவரவர் நிலையறிந்து, நேரத்தறிவாய், கோட்பாடு குலையாமல், நயனும் உறுதியுந் தோன்றப் பெருந்தன்மையாய்ப் பேசுதலும் ஒழுகுதலும் ஔவையார்க்கு மிகச் சிறப்பாய் அமைந்திருந்தன. அம்மையார் அருமைக்கு இச் செய்யுள் ஒன்றும் போதும்.

அதியமான் நெடுமானஞ்சிக்கு ஔவையாரிடம் மிக்க நம்பிக்கையும் மதிப்பும் உண்டு. இருவரும் நெருங்கிய நட்புடையோர். ஔவையாரின்றி அதியமானுக்குப் பொழுது போகாது; அவனையின்றி இவருக்கும் பொழுது போகாது.

அதியமானும் தக்கோன்; இல்லாவிட்டால் ஔவையார் அவனிடம் அவ்வளவு நெருங்கியிருக்கமாட்டார். ஆடவர்க்கே ஓர் எடுத்துக்காட்டாக, ஆண்மையும் அருளும் ஒருங்கு படைத்தவன். ஆண்மைக்கு அடையாளமான வென்றிச்சிறப்பும், அருளுக்கு அடையாளமான கொடைச்சிறப்பும் என இரண்டும் இச் செய்யுளில் வருகின்றன. இவ் விரண்டினாலும் முறையே அவன் அரசர்களிடமும் குடிகளிடமும் நன்மதிப்புப்பெற்று விளங்கினான். தக்க போர் வீரனாயினும், அவன் உள்ளம் அருள் வெள்ளத்துக்கே இலக்காய் இருந்தமையால், வீணில் போர் தொடுக்கமாட்டான். அமைதியை நிலவச் செய்வதற்குத் தானேயும் முந்துவான்.

காஞ்சிபுரத்தில் அக்காலத்தில் ஆட்சியுடன் இருந்த தொண்டைமான் இளந்திரையன் என்பவனுக்கும் அதிய

மானுக்கும் இடையே பகையுணர்ச்சி தலையெடுத்திருந்தது. அதியமான், வீணுகப் போருங் கலவரமும் உண்டாகாத படி அமைதிக்கே இடஞ்செய்து வந்தான். வீரத் திருவாளனை அதியனின் பெருந்தன்மைக்கு ஔவையார் மிகவும் அகமகிழ்ந்திருந்தார். கடைசியில், பேரறிவின் மூத்த வடிவான ஔவைப்பிராட்டியையே தொண்டைமானிடம் தூது அனுப்பி, அமைதியை நிலவச் செய்ய, அதியமான் முயன்ருன். ஔவையார், அன்பன் விருப்பத்திற்கிணங்கிக் காஞ்சி நோக்கினர்.

ஔவையார் நாடு முழுமையுஞ் செல்வாக்குடையவர்; தொண்டைமான் அரண்மனையை அண்மினர். பிராட்டியார் வருகையறிந்து, காணக்கண்பெற்றேம் என மகிழ்ந்து அம் மன்னன் உரிய சிறப்புக்களோடு அவரை வரவேற்று அன்பினல் நெஞ்சங் கரைந்து அளவளாவினன். ஔவையார், அதியன் அஞ்சியினிடமிருந்து தூதாக வந்திருக்கின்ருரென்று அவன் தெரிந்துகொண்டான்.

போர்க்குத் தான் ஆயத்தமாயிருக்குந் தகுதியையும் தன் ஆண்மையையும் அம்மையார்க்குப் புலப்படுத்த வேண்டுமென்று தொண்டைமான் உள்ளம் விம்மிதங் கொண்டது. விதுவிதுப்புங் கொண்டது. பின்பு, ஏற்ற நேரத்தில், அம்மையாரைத் தனது அகன்று விரிந்த படைக்கலச் சாலைக்குப் பார்வைக்காக அழைத்துச் சென்ருன். தொண்டைமான் கருத்தை அம்மையாரும் அறிந்து கொண்டார்.

படைக்கலக் கொட்டில் விரிவாய் இருந்தது. அதனுள் வில், வாள், வேல் முதலிய எத்தனையோ வகையான படைக்கலங்கள் கண்காட்சிச் சாலையில் நிறுத்தப்பட்டன போல் ஏராளமாக வைக்கப்பட்டிருந்தன. கருவிகளின் கைப் பிடிகள் திரண்டு வலியனவாய் அழகு செய்யப்பட்டிருந்தன. கருவிகளுக்கு மயிற்பீலி அணிந்து மாலை சூட்டி நெய்ப்பூச்சுப் பூசிப் புத்தம் புதுமையாய் ஒப்பனைசெய்து நிறுத்தப்பட்டிருந்தன.

தொண்டைமான் இளந்திரையன், பகைவன் அனுப்பிய தூதுவரோடிருந்து தனது படைக்கலக் கொட்டிலைப் பார்த்து வருதலில், உள்ளம் மேலுமேலும் பூரித்தவனாய்த் தன்னையே தான் மிகுதியாக உள்ளுக்குள் வியந்துகொண்டான். சொல்வன்மையிற் சிறந்த ஔவையார், நேரே தன் படைக்கலப் பெருமைகளைப் பார்த்தலின், தனது பேராண்மையைப்பற்றி அதியமானிடம் தகுதியாகப் புகழ்ந்து பேசி அவனை அஞ்சச் செய்து தனக்குப் பணிய வைத்தல் கூடும் என்று எண்ணினன்.

ஆனால், ஔவையார் முகத்தில் ஒன்றும் வியப்புக்குறி தோன்றவில்லை. அவர் எத்தனையோ வகையான படைக்கலங்களை நாடெங்கும் கண்டவர். அவருக்கு இந்தக் குறுநில மன்னனின் சிறிய படைக் கொட்டிலைக் காண்பதில் யாதும் வியப்புத் தோன்றவில்லை. மேலும், படைக்கலங்களின் ஆற்றல் எவ்வளவு தூரம் செல்லும் என்பதை அவர் நன்கறிந்தவர். தொண்டைமான் உள்ளத்திற் குன்று போல் அடுக்கடுக்காக எழுந்து பெருகும் அவா அலைகளை மட்டப்படுத்த இதுவே நேரம் என்று அறிந்தார். அருளும் அதனை ஆளும் ஆண்மையுமே வெற்றிக்கு வேர் என்று அவனுக்கு உணர்த்தத் திருவுளங் கொண்டார். அதியமான் நெடுமானஞ்சி அத்தகையவன் என்பதை அவன் படைக்கலங்கள் இருக்கும் நிலைமை, அவன் பலர்க்கும் உதவும் வளம் என்பவற்றின் வாயிலாகப் புலப்படுத்த எண்ணினர். அருள் நெஞ்சினனை அதியனைப் பழிப்பது போற் புகழ்தலும், பகை நெஞ்சினனை திரையனைப் புகழ்வதுபோல் இறக்குதலுமே இந்த நேரத்திற்கு ஏற்றதென்று துணிந்தார். தக்கதுணர்த்தும் அவரது திருவுள்ளத்திலிருந்து பின் வருந் துணிவுரைகள் எழுந்தன!

"ஆம்; இவை பீலி அணிந்து மாலை சூட்டிப் பிடி திருத்தி நெய் பூசிக் காவலோடு அகன்ற கொட்டிலில் காட்சியாகத்தான் வைக்கப்பட்டுள்ளன; ஏழை பங்காளனாய்ப் பலர்க்கும் உணவு வழங்கும் எம் கோமான் அதியனின் படைக்கலங்கள், பகைவரைக் குத்திப் பிடியும் நுனி

யும் முரிந்து கொல்லனது உலைக்கூடமாகிய சிறிய இடத்தில் ஒவ்வொரு நாளுஞ் சிதறிக்கிடக்கின்றன" என்பது.

"நின்னுடையன பார்க்க அழகாய்த்தான் இருக்கின்றன. ஆனால், பயன் என்ன? போரையே அறியாதனவாய் இருக்கின்றனவே" என்பது கருத்து. அதியன் பலர்க்கும் உதவுவோன் என்பதனால் அறமும், அவன் வேல் என்றும் பகைவரைக் குத்தி வருவன என்பதனால் வீரமும் பெறப்பட்டு அத்தகையோனே வெற்றிபெறுவன் எனப் புலப்பட வைத்தாராயிற்று.

கேட்ட தொண்டைமானின் முகத்தை ஒருவர் ஓவியமாக எழுதவேண்டுமானால், அவருக்கு எவ்வளவு திறமை இருக்கவேண்டும்!

குறிப்புரை: இவ்வே - இவையே; இப் படைக்கலன்களே. கண் திரள் நோன் காழ் - தனது உடலிடம் திரண்ட வலிய காம்பாகிய பிடி. கண் - இடம்; கைப்பிடிக் காம்பின் இடம். நெய் - நெய்ப்பூச்சு. கடி - காவல். வியன் நகர் - அகன்ற மாளிகையில். நகரவ்வே - நகரனவே; அரண்மனை யிடத்தனவே என்றபடி. அவ்வே - அவையே; கோடு - காம்பு; அதாவது, பிடி. நுதி - நுனி; கோடும் நுதியும். கொல் துறை - கொல்லனது வேலைத்துறை இடமாகிய. குற்றில - குறு இல; குறுகிய இடத்தன. இல் - இடம்; இல்ல - இடத்தன; இடத்திலுள்ளன. 'இல்ல' என்பது 'இல' என நின்றது. மாதோ, அசை. என்றும் - ஒவ்வொரு நாளும். உண்டாயின் - வளம் உண்டானால். பதம் - உணவு. இல்லாயின் - வளம் குறைந்தால். உடன் உண்ணும் - இருப்பதைப் பலரோடும் உடனிருந்து உண்ணும். இல்லோர் ஒக்கல் - வறுமையாளரின் சுற்றங்களுக்கு. வை நுதி வேல் - கூரிய நுனியையுடைய படைக்கலன்கள். வேல் - படைகள். 'வேலாகிய அவ்வே பகைவர்க் குத்தி' எனத் தொடர்ந்து கொள்க. (௩௮)

## மாதர் பெருங் கற்பு

[மாதர்க்கு மனைமாட்சியே மங்கலம். மனைமாட்சி என்பது, இல்லறக் கடமைகள். அவை பல உள்ளன. அவற்றில் உள்ளந் திளைத்திருக்கும் மகளிர்க்குப் பிற எவற்றிலுங் கருத்துச்

செல்லாது. தலைவனுடைய பிற செய்கைகளிலுங் கருத்து ஊன்றாது. மாதரின் பெருங்கற்புநெறி இது.]

இதுமற் றெவனோ தோழி துனியிடை
இன்னர் என்னும் இன்னாக் கிளவி;
இருமருப் பெருமை ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியின் அகலாது
பாஅல் பைம்பயிர் ஆரும் ஊரன்
திருமனைப் பலகடம் பூண்ட
பெருமுது பெண்டிரே மாகிய நமக்கே.

—குறுந்தொகை, கஅக.

திருமணம் புரிந்து கொண்டதும் தலைவனுக்குத் தலைவி உற்ற வாழ்க்கைத்துணையாய்விடுகின்றனள். இல்லறமென்னும் நல்லறத்தைச் செவ்வையாய் இயற்றிக் கணவனுக்குத் துணைபுரியவேண்டியிருக்கின்றது. அதற்கான கடமைகள் நிரம்ப உள்ளன. கருத்தூன்றிச் செய்கின்றவர்களுக்குக் கடமைகளை விருப்பமாய்ச் செய்ய நேர்ந்து அதுவே அமைதியும் இன்பமும் பயந்து ஓய்வென்னும் ஆறுதலைத் தருவதாகின்றது. அதனாற் பெண்டிர் அருட்பெருமையும் ஞான முதிர்ச்சியும் இயல்பாகவே உடையராகின்றனர்.

இத்தகைய பெருமுது பெண்டிராந் தன்மையில் விளங்கும் மனைமாட்சி மிக்க மகளிர்க்கு, வேறு வகைகளில் நினைவு செலுத்தவே நேரமிராது. மனமும் போகாது. இங்ஙனம் இல்லறக் கடமைகளிலேயே முழுநோக்கமாயிருக்கும் மகளிர்க்குத் தம் தலைவர்களுடைய பிற செய்திகளில் நினைவு ஊன்ற எங்கே நேரமிருக்கப்போகின்றது; விருப்பமுண்டாகப்போகின்றது. அங்ஙனமாயின், இல்லறத்திற்கு உறுதுணையாயிருக்கும் தலைவன்மேல் எவரேனுங் குறைகூறுவராயின், அதனை எங்ஙனம் அவர் ஏற்றுச் சிந்திக்கப் போகின்றனர்!

இல்லற மகளிரின் ஒரு வகையான இவ் வுயர்ந்த உணர்வு நிலையினை இச் செய்யுள் நன்கு எடுத்துக்காட்டுகின்றது.

தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி ஆற்றாமைப்படுதல் இருவகைப்படும்; ஒன்று, காதற்கேண்மையால் அவனைப் பிரிந்திருக்கமாட்டாமல் வருந்துதல்; இரண்டாவது, அவ் விளங்காலம் மாறி இல்லறத்தின் பெருமுது பெண்டிராய் விளங்குகின்றபோது, தலைவன் பிரிவினால் இல்லறக் கடமைகளைச் செவ்வையாய்ச் செய்ய முடியாமல் வருந்துதல்.

இரண்டாம் நிலையை எண்ணித் தலைவி யொருத்தி தலைவன் பிரிவுக்கு ஆற்றாது வருந்துதலைக் கண்ட தோழி தலைவனைக் குறைகூற, அதற்குத் தலைவி, "ஊரன் திருமனையில் பல இல்லறக் கடமைகளைப் பூண்ட பெருமுதுபெண்டிரேமாகிய நமக்குத் தலைவர் வந்த காலத்தில் ஊடல் கொண்டு அதனிடையே அவர் இத்தகைய குறையுடையவர் என்று சொல்லும் இனிதல்லாச் சொல் எதற்கு?" என்று கூறுவதாக இச் செய்யுள் வருகின்றது.

மனைமாட்சியின் மங்கல அழகிலேயே உள்ளம் திளைப்புண்டு பெருங்கற்பு நெறியில் விளங்குந் தமிழரசிகளின் அருட்குரலன்றோ இது!

**துறிப்புரை:** இது எவனோ - இது ஏனோ? இது எதற்கு என்றபடி. மற்று, அசை. 'இன்னாக் கிளவியாகிய இது ஏனோ' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். துனியிடை - புலவியினிடையே. இன்னர் - இத்தகையர்; இத்தகைய குறையுடையவர். இன்னாக் கிளவி - இனிதல்லாத சொல்; தீய சொல். இரு - பெரிய. மருப்பு - கொம்பு. எருமையாகிய காரான் என்க. ஆன் வகைகளிற் கருநிறமாயிருத்தலால், எருமைக்குக் 'காரான்' என்றும் ஒரு பெயர். ஈன்ற அணி - ஈன்ற அணிமை; அணிமை - அணிமைநிலை; அண்மையிற் கன்று ஈன்ற நிலைமையயுடைய என்பது பொருள். உழவன் - உழவனால். யாத்த - வயலில் ஓரிடத்திற் கட்டப்பட்ட. குழவியின் - தனது கன்றினிடமிருந்து. பால் பைம் பயிர் ஆரும் - பக்கத்திலுள்ள பசுமையான பயிர்களை மேய்கின்ற. ஊரன் - மருதநிலத்துத் தலைவ

னது. எருமை தன் கன்றினின்றும் பிரியாது பக்கத்தில் பயிரும் மேய்தல் போல, தலைவன் தன் தலைவியின் அன்பிற் குன்றாமல் அயலில் தன் முயற்சிகளையுஞ் செய்துகொள்வன் என்பது இதனால் உள்ளுறையாகப் பெறப்படும். கடம் - கடமைகளை; இல்லறக் கடமைகளை. பூண்ட - மேற்கொண்ட. 'நமக்கு இன்னைக் களவியாகிய இது எனோ' என்று சேர்த்துக்கொள்ள வேண்டும். (௩௧)

## கழுவாய் இல்லாத பிழை

[நன்றி மறத்தல் கழுவாய் இல்லாத பெரும் பிழை. கன்றுக்குப் பால் விடாமை, கருச் சிதைத்தல், கொலை முதலிய கொடிய தீவினைகளைவிடப் பின்னும் பெருங் கொடிய தீவினையாக அற நூல்கள் கூறுவது இதனையே. காரணம், உலகம் முழுதும் நன்றி மறத்தலால், உணர்வு நசித்துப்போகின்றது.]

ஆன்முலை யறுத்த அறன்இ லோர்க்கும்
மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ!

—புறநானூறு, ௩௪: ௧ - ௭.

உணர்வு வளர்ச்சிக்கு இன்றியமையாத நன்முறைகளையெல்லாம் மக்கள் பின்பற்றி யொழுகவேண்டும். அவற்றுள், தவிரத்தகாதது நன்றிமறவாமை யாகும். இந்த நன்முறையிலிருந்துதான் மற்றவையெல்லாம் கிளைத்துப் பெருகி மக்கட்கு உணர்வு முன்னேற்றம் உண்டாகவேண்டும். இதனால், நன்றி மறத்தலைவிடக் கொடிய தீவினை வேறொன்றுமில்லை என்று தமிழ் மக்கள் துணிந்தனர்.

ஆன்மடியிலிருந்து பெருகுகின்ற தீம்பாலாகிய பயனைக் கெடுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், அறவோர்க்குப் பிழை செய்தலும் எவ்வளவு கொடிய தீவினை

கள்! இத்தகைய தீவினைகளைச் செய்துவிட்டாலும், பின்னால் அவற்றைத் தீவினையென்று உணர்ந்து மனந் திருந்தும்போது அத் தீவினைகளின் பயனைக் குறைத்துக் கொள்ளுதற்குச் சிறிது சிறிது வாயிலுண்டு. ஆனால், நிலம் கீழ்மேலாகப் புரண்டு நிலைமாறினாலும், ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த தீவினை, தன் பயனைக் கொடுத்தலில் ஒரு சிறிதும் மாறாது. இங்ஙனம் அறநூல்கள் தீர்மானித்துள்ளன.

இக் கருத்துக்கள் இச் செய்யுட் பகுதியில் வருகின்றன. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் என்னும் ஆசிரியர் 'ஆயிழை கணவ!' என்று அழைத்து இக் கருத்துக்களைப் புலப்படுத்தி நலம் புரிந்திருக்கின்றார்!

அவர் செய்த செயல் கிள்ளிவளவனுக்குமட்டுமன்று. எல்லாருந் தெரிந்துகொள்ளவேண்டிய அரிய கருத்தன்றோ இது! உணர்வு பொங்குவதற்கு அடிப்படையாயுள்ள வாயிலை மக்கள் தமது வாழ்க்கையிற் கடைப்பிடிப்பது எவ்வளவு நல்லது!

**குறிப்புரை:** முலை - மடியின் பயனை; அறுத்த - கெடுத்த. அறன் இலோர்க்கும் - தீவினையாளர்க்கும். மாண் இழை - மாட்சிமைப்பட்ட அணிகலன்களையுடைய. மகளிர் - மகளிரது. குரவர் - குரவரை; இங்கே அறவோரை என்றபடி. தப்பிய - கொன்ற. வழுவாய் மருங்கில் - அவர் செய்த பிழையினைக் கருதும் வகையில். வழுவாய் - பிழை. மருங்கில் - வகையில்; அப் பிழைகளின் வகையில் என்று சுருக்கமாகக் கூறிக்கொள்ளலாம். கழுவாயும் - அவற்றின் பயனைப் போக்கிக்கொள்ளும் வழியும். என - எனவும். புடை பெயர்வதாயினும் - பக்கம் பெயர்வதானாலும். ஒருவன் - ஒருவனது. செய்தி - செய்த நன்றியை. கொன்றோர்க்கு - சிதைத்தோர்க்கு. உய்தி - அத் தீவினையிலிருந்து பிழைத்தல். அறம் - அறநூல். பாடிற்று - இசைத்தது; கூறிற்று. ஆய் இழை - ஆய்ந்த அணிகலன்களையுடையாளின்.

(௪0)

## பிறர்க்கென வாழ்தல்

['தோயன் மாறன்' என்னும் ஈர்ந்தூர் கிழான் பிறர்க்கென வாழ்தலேயே கொள்கையாக உடையவன். 'ஒருவனுக்கு உண்ண உணவில்லை என்றால், உலகத்தையே அழித்திடுவேன்' என்னும் மேற்கோளுடையவன். உற்ற தொண்டுகளுக்காகத் தனது உடம்பைப் படைக்கலங்களுக்கு விருந்திடும் வீரன்.]

நிரப்பாது கொடுக்குஞ் செல்வமும் இலனே ;
இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே ;
இறையுறு விழுமந் தாங்கி அமரகத்து [தீர்ந்து
இரும்புசுவைக் கொண்ட விழுப்புண் நோய்
மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் ; கொடை [எதிர்ந்து
ஈர்ந்தை யோனே ; பாண்பசிப் பகைஞன் ;
இன்மை தீர வேண்டின் எம்மொடு
நீயும் வம்மோ முதுவாய் இரவல !
யான்தன் இரக்குங் காலைத் தான்எம்
உண்ணா மருங்குல் காட்டித் தன்ஊர்க்
கருங்கைக் கொல்லனை இரக்கும்
திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே,

—புறநானூறு, க௮௦.

ஈர்ந்தூர் என்னும் ஊரில், பண்டைக்காலத்தில் தோயன்மாறன் என்னும் அன்பனொருவன் விளங்கினான். இல்லை என்று இரப்போர்க்கு அவர் வறுமை தீரும்படி கொடுக்கும் அவ்வளவு மிகுதியான செல்வமுடையவன் அல்லன் ; ஆனால், அடியோடு இல்லையென்று மறுக்கும் புன்மையுடையவனும் அல்லன்.

தன் கடமையைச் செய்வதில் மிக்க கருத்துடையவன். தன் அரசனுக்குப் போரில் உண்டாகும் இடுக்கண்

களைத் தான் தாங்கிக்கொள்வான். எதிரிகள் எறியும் படைக்கலங்கள் அவனுடம்பைச் சுவை பார்ப்பனபோல் புண் செய்யும். அங்ஙனம் இரும்பு சுவைக்கொண்ட விழுப் புண்ணினால் உண்டான நோய் சில நாட்களில் ஆறி உடம் பெங்கும் வடுக்கள் கலந்து தோன்றும். அந்தத் தோற்ற மானது, பிறர் நலப்படுவதற்காக மருந்தின்பொருட்டுப் பட்டைகள் சீவிக்கொள்ளப்பட்ட ஒரு மரத்தினுடைய வடுக்களின் தோற்றம்போல் காட்சி தரும். இங்ஙனம் வசை நீங்கி அழகு பெற்ற யாக்கையினை யுடையவன் அவன்.

அதுமட்டுமன்று; யாராவது பசி என்று சொல்லி அவனிடம் இரந்தால், பட்டினி கிடந்த அவரது வயிற்றைப் பார்த்து மனம் வருந்தி, அந் நிலையில் அவரை வைத் திருந்த உலகத்தை ஒழிக்கும்பொருட்டுக் கொல்லனை வேல் வடித்துக் கொடுக்கும்படி வேண்டுவனும்.

தோயன்மாறனுடைய பண்புகள்தாம் எவ்வளவு மேதக்கன! பிறர்க்கென வாழ்ந்த அச் சான்றோனுடைய உணர்ச்சிகளை நினைந்தால் உடம்பு சிலிர்ப்பெய்துகின்றது! அன்பும் வீரமும் இங்ஙனமல்லவா வீறிச் சிறத்தல் வேண்டும்!

**குறிப்புரை:** நிரப்பாது - வறுமையுண்டாகாமல். இறை - அரசனுக்கு. இரும்பு - இரும்பினாலான படைக்கலங்கள். மயங்கி - கலந்து. வடு இன்றி - வடு மொழிகள் இல்லாமல்; வடிந்த - தீர்ந்த அழகினைப் பெற்ற. கொடை எதிர்ந்து - கொடுத்தலை மேற்கொண்டு. ஈர்ந்தையோன் - ஈர்ந்தை என்னும் ஊரில் இருந்தவன். பாண் பசி - பாணர்களின் பசிக்கு. இன்மை - வறுமை. வம்மோ - வருவாய். முது வாய் இரவல - முதிய வாய்மையையுடைய இரவலனே. தன் - அவனை. மருங்குல் - இடுப்பை. கரு கை - வலிய கையையுடைய. திருந்து இலை - திருந்திய இலை வடிவினையுடைய. வடித்திசின் - வடிப்பாயாக. வடித்தி இசின் எனப் பிரித்து 'இசின்' என்பதை அசையாகக் கொள்ளவேண்டும். 'வடித்தி எனக் கொல்லனை இரக்கும்' என்பது தொடர். இரக்கும் - இரந்து கேட்பான்.　　(௫௪)

## நிலைத்த பழி

[கடமையில் தவறுவோர் நிலைத்த பழியை அடைகின்றனர். அதிலும், புலவர்பால் அக் கடமை தவறின், பழி இலக்கியத்திற் புகுந்து அழியாப் பழியாய் வடுவுறுகின்றது. பெருங்குன்றூர் கிழார்பால் தவறுசெய்து குடக்கோச் சேரலிரும்பொறை எய்திய வடு இச் செய்யுளில் வருகின்றது. இந் நிலை எவ்வளவு இரங்குதற்குரியது !]

மன்பதை காக்குநின் புரைமை நோக்காது
அன்புகண் மாறிய அறனில் காட்சியொடு
நும்ம னோருமற் றினைய ராயின்,
எம்ம னோர்இவண் பிறவலர் மாதோ ;
செயிர்தீர் கொள்கை எம்வெங் காதலி
உயிர்சிறி துடைய ளாயின் எம்வயின்
உள்ளா திருத்தலோ அரிதே ; அதனால்
அறனில் கூற்றம் திறனின்று துணியப்
பிறனா யினன்கொல்? இறீஇயர்என் உயிரென
நுவல்வுறு சிறுமையள் பலபுலந் துறையும்
இடுக்கண் மனையோள் தீரிய இந்நிலை
விடுத்தேன் வாழியர் குருசில்! உதுக்காண்
அவல நெஞ்சமொடு செல்வன்நிற் கறுத்தோர்
அருங்கடி முனையரண் போலப்
பெருங்கை யற்றஎன் புலம்புமுந் துறுத்தே.

—புறநானூறு, உ௧0.

கடமை யுணர்வுகளில், பிறர்க்கு ஆதரவாயிருப்பதற்காக மேற்கொள்ளும் கடமைச் செயல்கள் முதன்மையும் இன்றியமையாதனவுமாகும். உடையோர், இல்லாதவர்க்கு உதவுதலை ஒரு பெருங் கடமையாகக் கொள்ளாதவரையில் வாழ்க்கை, செப்பமான வாழ்க்கையாகக் கருதப்படமாட்டாது. இச் செய்யுளின் முதல் நான்கு வரிகளில்

அக் கருத்து நன்கு வலியுறுத்தப்பட்டிருக்கின்றது. 'செல்வம் முதலியன உடையோர் பிறர்க்கு உதவுதலை ஒரு கடமையாக மேற்கொள்ளாது அன்பு கண்மாறுவதானால், இல்லோர் இவ்வுலகில் பிறவாதிருத்தலே நன்று' என்னுங் கருத்தில் அப் பகுதி வருகின்றது. எவ்வளவு மனம் நொந்திருந்தால், பெருங்குன்றூர் கிழார் என்னும் ஆசிரியர் இங்ஙனங் கூறியிருப்பார்!

சேரமான் குடக்கோச்சேரல் இரும்பொறை என்னும் மன்னன், தனக்கு விரைவிற் பரிசில் அளிக்காது காலந் தாழ்த்ததனாலேதான் அவர் இவ்வாறு மனநொந்து கூறியிருக்கின்றார். அவரவர் கடமைகளை அவரவரும் உணர்ந்து செய்தாலன்றோ உலகம் நாகரிகச் செவ்வியில் மேன்மேலுங் கொழுந்தோடிப் பொலியும்! ஆசிரியர்களின் அருமையறியாமலும், அவர்களால் உலகுக்கு உண்டாகும் பயனுணராமலும் உலகம் வாளா அழிவுமுகங் காட்டிச் செல்வதனால் யாது பயன்? மேலும், அரசனுக்கு இக் கடமையுணர்வு மிகுதியாக இருக்கவேண்டும். அரசாட்சியின் உயர்வே அச் செயலிலேதான் அமைந்திருக்கின்றது. அவ் வுயர்வு நோக்காது அன்பு கண்மாறிய அறனில்லாத அறிவு, இருப்பதும் இல்லாததும் ஒன்றுதானே.

புலவர்களின் இல்லக்கிழத்தியர் பொறுமையணிகளென்றே கூறல் வேண்டும். அறிவின்பத்தின் பழக்க மிகுதியினாற் பொருளின்பத்திற் பற்றுவிடும் புனிதவதிகளென்றால், அவ் வுரை அவர்களுக்குத் தகும். அத்தகையோர் பலரால் இத் தமிழகம் சிறந்த புகழ்பெற்றுள்ளது. உயிர்க்குயிரான பெறலரிய பண்பமைந்த அம் மங்கை நல்லார்பாற் புலவர்கள் தக்க காதற்கேண்மை மிக்கவராகவே முன்னும் பின்னும் விளங்கியிருக்கின்றனர். அரசர்கள் பரிசில் அளியாது காலம் நீட்டித்தபோது, புலவர்கள் உள்ளம் உடனே தம் வாழ்க்கைத் துணைவியரின் உள்ள நிலையையே நினைந்து எண்ணியது. சில நேரங்களில் அம் மாதர், அறிவு சான்ற தங் கணவரைச் செவ்வையான

செழுமையில் தம்மால் வைத்திருக்க இயலவில்லையே என்று நினைந்து நினைந்து, தம் உயிரை விடுவித்துக்கொள்ளாத கூற்றுவனையும் அறவில்லாதவன் என வைதுகொள்வது முண்டு. 'தம் மனையாள் அத்தகைய நிலையில் சிறிது உயிர் பொறுத்துக்கொண்டிருப்பாள்; ஆதலின், நான் உன்னிடம் விடைகொண்டேன்' என்று இச் செய்யுளின் இடைப்பகுதி மிகவும் உருக்கமாக வருகின்றது.

இறுதி மூன்று வரிகளில் உதவாது கைவிடப்பட்ட இல்லோரின் இன்மை நிலைக்குப் பகையரசர்களின் அரண் உவமை கூறப்படுகின்றது. அத்தகைய அரசனது வன்கண்மைச் செயலே நாட்டிற் பகை பெருகுதற்கு இடம் என்னுங் குறிப்பு இதனால் உணர்ந்துகொள்ளப்படும். அப் பகை பின்னர்த் தணிவிக்கப் படுவதாயினும் பகை, பகை தானே!

குறிப்புரை : மன்பதை - உயிர்க் கூட்டத்தை. புரைமை - உயர்வு. கண் மாறிய - நீங்கிய; ஒரு சொல் நடையாய் வந்தது. காட்சியொடு - அறிவோடு. நும்மனோரும் - நும்மைப் போன்றோரும். மற்று, அசை. இனையராயின் - இங்ஙனம் அறனில்லாதவரானல். பிறவலர் - பிறவாதிருப்பாராக. மாது, ஓ, அசைச்சொற்கள். செயிர் தீர் கொள்கை - குற்றமற்ற கற்போடு. எம் வெம் - எம்மை விரும்பிய. எம் வயின் - எம் காரணமாக. உள்ளாதிருத்தலோ - நினையாதிருத்தலோ. திறன் இன்று துணிய - பொருத்தமாகிய வகையில் உயிர்களைக் கொள்ளத் துணிந்தமையால். பிறனாயினன்கொல் - இறந்து வேறாயினனோ. இங்ஙனங் கூறுவாள், தன் உயிரை அவன் இன்னுங் கவராமையால். இறீஇயர் - இறுக; இப்போதே இறுதி கொள்க. நுவல்வுறு - சொல்லிக்கொண்டிருக்கின்ற. மனையோள் தீரிய - மனையோள் இன்னலைத் தீர்க்கும்பொருட்டு. இந் நிலை - இப்பொழுதே. விடுத்தேன் - நின்னிடமிருந்து விடைகொண்டேன். குருசில் - தலைவனே. வாழியர் - வாழ்க; உதுக்காண் - இதனைப் பார். நின் கறுத்தோர் - நின்னைச் சினந்த பகையரசரது. அருகடி - அரிய காவலையுடைய. முனை - போர்முனையில் உள்ள. பெருங் கையற்ற - மிகவுஞ் செயலற்றுப்போன. புலம்பு - தனிமைப் பட்ட வறுமைத் துயரை. முந்துறுத்து - முன்னே போகவிட்டுக்கொண்டு முந்துறுத்துச் செல்வன் என்றபடி. (சஉ)

## பெண்டிர் கடமை

[குடும்பச் செயலில், ஆடவரும் பெண்டிரும் ஒருமுக நோக்கம் உடையவராய் இருத்தல் வேண்டும். கணவன் இல்லாத காலத்தில், அவன் கடமைகளையும் இல்லக்கிழத்தி இயன்ற வரையிற் செய்து குறை நிறைவேற்றுதல் வேண்டும். இருவர் செயலாலும் வழிவழி மரபினர் நலம் எய்துகின்றனர்.]

பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப
விண்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
கிழவன் சேட்புலம் படரின் இழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
பெண்டிருந் தம்பதங் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோன் ஆகலின் நன்றும்
முயங்க லான்றிசின் யானே; பொலந்தேர்
நன்னன் மருக னன்றியும் நீயும்
முயங்கற் கொத்தனை மன்னே; வயங்குமொழிப்
பாடுநர்க் கடைத்த கதவின் ஆடுமழை
அணங்குசால் அடுக்கம் பொழியும்நும்
மணங்கமழ் மால்வரை வரைந்தனர் எமரே.

—புறநானூறு, 151.

சில குடும்பங்களில் மாதர்கள் மிக்க திறமையும் அன்பும் உடையவர்களாய்க் குடிக்கு விளக்காகத் திகழ்கின்றார்கள். அவர்களால், குடும்பத்திற்கே வழிவழிப் பெரும் புகழும் உண்டாகின்றது. சான்றோர்களாற் பாடப்பெறும் பேறு பெற்று இலக்கியச் சிறப்பையும் அவர்கள் அடைகின்றனர்.

இல்லத்திற் கணவன் இல்லாத காலத்தில், அத்தகைய சிறப்பமைந்த துணைவி, கணவன் பணிகளையுந் தான் செய்து குறை நிரப்பிக் குடியை உயரச்செய்கின்றனள். 'இளங்கண்டீரக்கோ' என்னும் அரசனும் 'இளவிச்சிக்கோ' என்னும் அரசனும் ஒருகால் ஒன்றாக இருந்தபோது,

பெருந்தலைச்சாத்தனார் என்னும் புலவர்பிரான் அவர்களைச் சந்தித்தார். சந்தித்த மகிழ்ச்சியில், இளங் கண்டீரக்கோவை இயல்பாகவே அவர் கைகள் தழுவி இன்புற்றன. அருகிலிருந்த இளவிச்சிக்கோவைத் தழுவவில்லை. இது, இளவிச்சிக்கோவின் உள்ளத்தை உறுத்தியது. புலவரை நோக்கி 'ஏன் அவ்வாறு?' என்றுங் கேட்டான். புலவர் அதற்குக் கூறிய விடை வியக்கத் தக்கதாய் உள்ளது. அவ்விடை மொழியே இச் செய்யுள் :

"கண்டீரக்கோன் மரபினர், ஒருகால் தம் நாட்டின் மலைப்பக்கத்தில், தொலைவான இடத்திற்குச் சென்றுவிட்டாலும், அக் காலங்களில் வரும் பரிசிலர்க்கு, அவர் பெண்டிரும், கொடுத்தற்குரிய அடையாள அணிகலன்களை அணிந்துகொண்டு, தம் தகுதிக்கேற்ப மெல்லிய பெட்டை யானைகளைப் பரிசிலாக வழங்கி அறம் ஓம்புவர்; அத்தகைய புகழையுடைய கண்டீரக்கோனாதலால், அவனை யான் தழுவி உள்ளம் அமைந்தேன்; நீயும் புகழ் மிக்கவனான நன்னன் மரபிலுள்ளவனே; அன்றியும், நின்னளவில் நீ எம்போன்றவரால் தழுவுதற்குரியவனே; ஆயினும், நின் முன்னோருள் ஒருவன், புலவர்க்குப் பரிசில் அளிக்காது கதவடைத்த காரணத்தால் உங்கள் உயர்ந்த மலையை எம்போன்றார் பாடுதல் நீக்கினர்."

இங்ஙனம் பெருந்தலைச் சாத்தனார் காரணம் கூறினர். காரணம் எப்படியிருக்கின்றது? நல்லன செய்தாலும் தீயன செய்தாலும் அவை வழிவழியாகத் தம் மரபினரையுந் தொடர்ந்து புகழ்க்கும் இகழ்க்கும் இடஞ்செய்யுமென்பது இந் நிகழ்ச்சியினால் நன்கு புலப்படுகின்றது. இளங் கண்டீரக்கோவின் புகழை அவன் முன்னோர்தம் வாழ்க்கைத் துணைவியர் எவ்வளவு அழகாகக் காத்துப் பெருக்கியிருக்கின்றனர்! கணவன், இல்லத்தில் இல்லாத போது அவன் இல்லாததற்கு மகிழ்ந்து, அங்கு வருவார் போவார்க்கு அவன் இல்லையே 'என்று எளிதாக ஒரு காரணங் கூறிச் சோம்பிக் கிடக்கும் மாதர்க்கும், பெருந்தலைச் சாத்தனாரால் பெரிது பாராட்டப்பெற்று இன்றும் புகழ்

பெற நிற்கும் இம் மாதர்க்குந்தான் எவ்வளவு வேறுபாடு! பண்டைத் தமிழ்ப் பெண்டிரின் வீரமும் ஈகையும் பெரு நோக்கமும் குடித்தனப் பாங்கும் எவ்வளவு உள்ளங் கவர்வனவாய் ஓங்கியுள்ளன!

குறிப்புரை: பண்டும் பண்டும் - முன்னும் முன்னும். பாடுநர் - செய்யுளிசைக்கும் புலவர்கள். 'உவப்ப, இழையணிந்து பெண்டிருங் கொடுக்கும் புகழ்க் கண்டீரக்கோனாதலின்' என்று தொடர்ந்துகொள்ளவேண்டும். விண் தோய் சிமைய விறல் வரைக் கவாஅன் - வானமளாவிய உச்சியையுடைய சிறந்த மலையின் பக்கத்தில். கிழவன் - கணவன். சேண் புலம் படரின் - தொலைவான இடத்திற் சென்றுவிட்டால். இழை - அணிகலன்; கொடையாளிகள் தம் தகுதியைப் புலப்படுத்தி அணிந்துகொள்ளும் அடையாள அணிகலன். புன் தலை மட பிடி - இன்னும் உரம் ஏறாத தலையையுடைய மெல்லிய பெட்டை யானை. தம் பதம் - தம் தகுதிக்கேற்றதை. நன்றும் முயங்கல் ஆன்றிசின் யான் - பெரிதும் தழுவுதல் அமைந்தேன் யான். ஆன்றிசின் - ஆன்றேன்; அமைந்தேன்; இச் சொல்லில் வந்த 'இசின்' என்பது அசைச்சொல்; அதற்குப் பொருளில்லை. பொலம் தேர் - பொன்னாற் செய்யப்பட்ட தேரையுடைய. மருகன் - மரபினையுடையை. ஒத்தனை - பொருத்தமுடையை. மன், வாளா ஓசைக்காக வந்தது. வயங்கு மொழிப் பாடுநர்க்கு - விளங்கிய மொழியினையுடைய புலவர்க்கு. அடைத்த கதவின் - நின்னுடைய அடைத்த கதவு காரணமாக. ஆடும் மழை - இயங்கும் மேகமானது. அணங்குசால் அடுக்கம் பொழியும் - தெய்வம் அமைந்த மலைப்பக்கத்தில் மழை பொழிகின்ற. மால் வரை - உயர்ந்த மலையை. வரைந்தனர் - பாடுதல் நீக்கினர். எமர் - எம்மவர்; எம்போன்ற புலவர். 'எமர் வரைந்தனர்' என்று கொள்ளப்படும். ஆதலால், உன்னைத் தழுவவில்லை என்று பெருந்தலைச் சாத்தனார் கூறியதாக முடித்துக்கொள்ளவேண்டும். (சுஙு)

## உடையோர் கடன்

[இல்லோர்க்கு உதவுவது உடையோர் கடன்; அன்று, தகுதியாக உதவுவதே அவர் கடனாகும்; அவரிடம் தகுதியாகப் பெறுவதும் இல்லோர் உரிமையாகும் என்பது. இவை இச் செய்யுளில் விளக்கம் பெறுகின்றன. இல்லோரிற் சிறந்தார்க்கு அவ்வுரிமை இன்னும் மிகுதியாகின்றது.]

முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே;
விறற்சினந் தணிந்த விரைபரிப் புரவி
உறுவர் செல்சார் வாகிச், செறுவர்
தாள்உளம் தபுத்த வாள்மிகு தானை
வெள்வீ வேலிக் கோடைப் பொருந!
சிறியவும் பெரியவும் புழைகெட விலங்கிய
மான்கணம் தொலைச்சிய கடுவிசைக் கதநாய்
நோன்சிலை வேட்டுவ! நோய்இலை யாகுக;
ஆர்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்
கடல்வயிற் குழீஇய அண்ணலங் கொண்மூ
நீரின்று பெயரா வாங்குத், தேரொடு
ஒளிறுமருப் பேந்திய செம்மல்
களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே.

—புறநானூறு, உ0௫.

'இல்லோர் இரப்பது இயல்பு' என்றும், 'உடையோர் கொடுப்பது கடமை' என்றும் பெரியோர் கூறுவர். 'உடையோரிடம் தமக்கு வேண்டுவதைப் பெறுவதற்கு, இல்லோர் உரிமையுடையர்' என்பதும், 'இல்லோர்க்கு உதவாமலிருப்பது, உடையோர்க்குக் கடன் தீராமை போன்றது' என்பதும் இதனால் பெறப்படும்.

இனி, இச் செய்யுளால் மற்றும் ஓர் அழகிய கருத்துப் பெறப்படுகின்றது. இல்லோர் பல வகையினர்: மாட்டாமையால் இல்லாமையுடையர், முயற்சிசெய்யும் அறிவாற்றல் இல்லாமையால் இல்லாமையுடையர், நல்ல உடம்பும் நல்ல அறிவும் இருந்தும் ஊழ்வினையினால் இல்லாமையுடையர், தாம் வேறு துறையிற் கவனஞ் செலுத்துதலால் இல்லாமையுடையர், பெறுவதை அவ்வப்போதும் பலர்க்கும் உதவி ஞானவாழ்வு வாழ்தலால் இல்லாமையுடையர்

என்போர் அத்தகையோருட் சிலர். பண்டைக்காலத்துப் புலவருட் சிலர், இல்லாமை யுடையராய் இருந்ததற்குக் காரணம் அவருடைய கலை வாழ்வு, ஞான வாழ்வுகளே யாகும்.

இங்ஙனமெல்லாம் இல்லாமையர் பல வகையினராய் இருத்தலின், உதவுவோர் அவரவர் நிலையறிந்து அவரவர்க் கேற்ற மதிப்பில் விரும்பி, உரிய தகுதிகளிலன்றோ உதவு தல் வேண்டும்? கலை வல்லோரும் ஞானிகளுமான புலவர் களை வாளா இரப்போரைப்போற் கருதல்ாமா?

பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர், ஒருகால் கடிய நெடுவேட்டுவன் என்பவனிடம் பரிசில்பெறச் சென் றார். அவன் இவர் தகுதி கருதாது காலந் தாழ்த்தினான். புலவர், வாய்ச்சொல் பின்வருமாறு எழுந்தது: "நிறைந்த செல்வமுடைய மூவேந்தரேயானாலும், எம்மை விரும்பிப் போற்றுதலின்றித் தருதலை யாம் விரும்பேம். வீரனே! வேட்டுவனே! நீ துன்பமில்லாமல் இருந்தாற்போதும். கடலிற் படியும் மேகம் போதிய நீரின்றிப் பெயராது; எம்போன்றாரும், யானைப் பரிசிலைப்போன்ற தக்க பெரும் பரிசிலின்றித் திரும்பார்."

இதனால், உடையோரிடம் ஏதாவது ஒன்றைப் பெறு வதுமட்டுமே இல்லோர் உரிமை என்பதன்று; தத்தம் நிலைக்கு ஏற்றபடி தகுதியாகப் பெறுவதும் அவர் உரிமை யாகும் என்பது பெறப்படுகின்றது. இது, இச் செய்யு ளாற் போதரும் அழகிய கருத்தாகும்.

புலவர் கூறிய ஓர் உவமை இச் செய்யுளில் மனத்தைக் கவர்கின்றது. உலகிற்குப் புதிய மழையைப் பெய்து உதவுவதற்காக, மேகம் கடலிற் படிந்து போதிய நீரைக் கொள்ளுதலைத் தாம் வள்ளல்களிடம் பரிசில் பெறுவதற்கு உவமையாக ஆசிரியர் கூறியிருக்கின்றார். இதனால், மேகம் தான் கடலிற் பெற்ற நீரை உலகிற்குத் தெளிந்த நன்னீ ராகப் பெய்து உதவுவதையே நோக்கமாகக்கொண்டு

வானத்திற் செல்லுதலைப்போல் புலவர்களும் வள்ளல்களிடம் பெறும் பரிசிலை உலகிற்கு இன்னும் நல்ல நீர்மையில் உதவுதலையே நோக்கமாக உடையவராய் உலவி வாழ்வர்' என்னும் உண்மை பெறப்படும். புலவர்கள் வாழ்வு எத்தகைய அருமையான ஞான வாழ்வு! அத்தகையோர் தகுதி யறிந்தன்றோ செல்வர்கள் நடந்துகொள்ள வேண்டும்!

குறிப்புரை: முற்றிய - நிறைந்த. பெட்பு இன்று - போற்றுதலின்றி. 'விறற்சினம்......பொருந' என்பது, பொருந என்பதற்குச் சிறப்புரைகள். விறல் சினம் - வெற்றியால் உண்டான சினம். பரி - நடையினையுடைய. உறுவர் - அச்சத்தால் தனக்கு நண்பராகும் பகைவர். சார்வு ஆகி - புகலிடமாகி. செறுவர் - பகைவரது. தாள் உளம் தபுத்த - முயற்சியுடைய உள்ளத்தைக் கெடுத்த. வாள் மிகு தானை - வாட்போரை மிக்க படையையுடைய. வெள் வீ - வெண்ணிறமான முல்லைமலர்; இங்கே ஆகுபெயராய் முல்லைச்செடியை உணர்த்தியது. 'கோடை' என்பது கடிய நெடுவேட்டுவனது மலையின் பெயர். பொருந - வீரனே. 'புரவியையுடைய உறுவர்க்குச் சார்வாகி, செறுவர் உளந் தபுத்த தானையையுடைய பொருந' என்று சிறப்பித்தபடி. புழை கெட விலங்கிய - இடையே சந்து தோன்றாதபடி குறுக்கிட்டுக்கொண்டு நின்ற. கணம் - கூட்டத்தை. தொலைச்சிய - தொலைத்த. கத நாய் - சினமுடைய நாய்களையும். நோன் - வலிய. 'தொலைத்த நாயையும் சிலையையும் உடைய வேட்டுவ' என்பது. நோய் - துன்பம். ஆர் கலி யாணர் - நிறைந்த இடியோசையோடு கூடிய புது மழையை. யாணர் - புது வருவாய்; இங்கே புதுப்பெயலாகிய மழையைக் குறித்தது. தரீஇய - உலகிற்குத் தரும்பொருட்டு. கால் வீழ்த்து - கடலிற் கால் இறங்கி. கடல் வயின் - கடலிடத்தில். குழீஇய - திரண்ட. அண்ணல் அம் கொண்மூ - அண்ணல் கொண்மூ; தலைமையுடைய மேகமானது. அம், சாரியை; அதற்குப் பொருளில்லை. நீர் இன்று - போதிய நீரில்லாமல். பெயரா வாங்கு - பெயராமைப்போல. தேரொடு - தேரோடு கூடிய. ஒளிறு மருப்பு ஏந்திய - விளங்குங் கொம்பு உயர்ந்த. செம்மல் களிறு இன்று - தலைமையுடைய யானைப் பரிசிலின்றி. பரிசிலர் கடும்பு பெயரல - பரிசிலர் சுற்றங்கள் பெயரமாட்டா. (௪௪)

## வீர வாழ்வு

[உழைப்பும் மானமும் வீரவாழ்வின் இரு சிறப்பியல்புகள். வியர்வை சிந்த உழைத்தலும் அது மாட்டாதவிடத்துக் குருதி சிந்தப் பொருதலும் மக்களின் கடமைச் செயல்கள்; அக் கடமை கருதாத வாழ்வு கோழை வாழ்வு.]

ஞாட்பினுள் எஞ்சிய ஞாலஞ்சேர் யானைக்கீழ்ப்
போர்ப்பில் இடிமுரசி னூடுபோம் ஒண்குருதி
கார்ப்பெயல் பெய்தபின் செங்குளக் கோட்டுக்
[கீழ்
நீர்த்தூம்பு நீருமிழ்வ போன்ற; புனல்நாடன்
ஆர்த்தமர் அட்ட களத்து.

—களவழி நாற்பது, உ.

சோழன் ஆரவாரித்துப் போரிற் பகைவரைக் கொன்ற போர்க்களம்; படையில் மிஞ்சிநின்று பின்பு வீழ்ந்து நிலத்தைச் சேர்ந்த யானைகளின் கீழே போர் முரசுகள் கிழிந்து கிடக்கின்றன. இறந்த வீரர்களின் இரத்த வெள்ளம் அம் முரசுகளின் கிழிசல் வழியாக ஓடி வருகின்றது. கார்கால மழை பெய்தபின் செம்மண் குளத்தின் நீர்த்தூம்பு வழியாகச் செந்நிறமான நீர் வெள் ளம் வெளி வருவதைப்போல அது காணப்பட்டது.

வீரர் அவ்வளவு இரத்தம் சிந்தியுள்ளனர்; இதனால் இரத்தஞ் சிந்தியே உலகத்தில் அருஞ் செயல்கள் நடை பெறுகின்றன எனத் தோற்றும். அதனைப் பின் வருமாறு கொள்ளல் வேண்டும்.

வியர்வையால் இரத்தஞ் சிந்துதல் ஒன்று; அது, உழைப்பைக் காட்டும். உயிர் துறத்தலால் இரத்தஞ் சிந்துதல் மற்றொரு வகை; அது, கடமைக்காகத் தன்னல மிழத்தலைப் புலப்படுத்தும். மானத்தோடு உழைத்து நல் வழிகளில் முயன்று உயிர் வாழ்தல் வியர்வை சிந்துத லாகும்; அதற்கொரு குறை நேர்ந்தால், உயிரைப்

பொருள் செய்யாது எதிர்த்து மக்கள் தமது கடமையைச் செய்துபோதல் பேரிடுதலாகும்.

முற்காலத்தில் அத்தகைய மானிகள் ஏராளமாகத் திகழ்ந்திருந்தனரென்பதை இச் செய்யுளில் வருங் குருதி வெள்ளம் என்றென்றைக்கும் எடுத்துக்காட்டுமன்றோ!

குறிப்புரை: ஞாட்பின் உள் - படையினுள். போர்ப்பு இல் - மூடு இல்லாத; கிழிந்துடைந்த என்பது கருத்து. குருதி - இரத்தம். கோட்டுக்கீழ் - கரையின் அடியில். நீர்த் தூம்பு - நீர் செல்லும் வழி. போன்ற - போன்றது. ['களவழி நாற்பது' என்பதன் கருத்து, 'வேனிறத்திங்க' என்னும் மற்றொரு செய்யுளின் (களவழி. சச) விளக்கத்தில் வருதல் காண்க.] (சகூ)

### அறத்தின் உண்மை

[அறம் என்பது, கடமை; கடமைகளில் முதன்மைக்கடமை இன்னது, துணைக் கடமைகள் இன்னவை என்று தெளிவாகத் தெரிந்திருக்கவேண்டும்; தெரிந்து, நேரத்திற்கேற்ப ஒழுகுதல் வேண்டும்; இயற்கை நிகழ்ச்சிகள் இவ் வுண்மைக்கு அரண்.]

தேம்படு சிலம்பின் தெள்ளறல் தழீஇய
துறுகயல் அயல தூமணல் அடைகரை
அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்
கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகறல் ஓம்புமின் அறிவுடை யீரெனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய்யுற இருந்து மேவர நுவல
இன்னா தாகிய காலைப் பொருள்வயின்
பிரிதல் ஆடவர்க் கியல்பெனின்
அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே.

—நற்றிணை, உசரு.

கடமை என்பது அந்தந்த நேரத்தின் சிறப்பியல்பைப் பொறுத்துள்ளது. அறம் என்பதும் கடமை என்பதும்

ஒன்றே. கடமைகளுள் தலைசிறந்ததாகக் கருதப்படுவதும் ஒன்று உண்டு. அது, ஆதரவுக்குரியாரைக் கைவிடாமை. இக்கடமையை நிறைவேற்றவே ஏனையவும் நேரத்திற்கேற்ப மேற்கொள்ளப்படும். 'பொருள் தேடுதல்' என்பது அத் தகைய துணைக் கடமையல்லது தலைக்கடமையன்று. ஆண் மக்கள் என்போர், கடமையை நிறைவேற்றுதலாகிய இம் முயற்சிகட்குரியோர்.

சில நேரங்களில் மக்கள் தலைக் கடமை இன்னது துணைக்கடமை இன்னது என்பதை அறியாமலும், அறிந்து அதற்கேற்ப ஒழுகாமலும் வழுவித் தம் மனம் போன வாறே நடந்து உலகியலைக் கெடுத்துவிடுகின்றனர். இயற் கையை உற்று நோக்கினால் அவர்கட்குத் தகுந்த பாடம் கிடைக்கும். இச் செய்யுளில் ஓர் இயற்கை நிகழ்ச்சி வரு கின்றது.

மலைப் பாங்கான இடம்; அருவி கருங்கற்களி னிடையே தருவிக்கொண்டு ஒழுகுகின்றது. அயலில் மணல் அடுத்த கரை; கரைப்பக்கம் கிளை தழைத்துப் பிஞ்சுகள் விட்ட மாந்தோப்பு. இதனால், காலம் இள வேனில் என்று தெரிகின்றது. கருங்குயில்கள் ஆணும் பெண்ணுமாகச் சேர இருந்துகொண்டு கூவுகின்றன.

மக்களில் ஆடவர் சிலர் இந்த வேனிற்காலத்தில் தம் தலைவியரைப் பிரிந்து பொருள் தொகுக்கும்பொருட்டு வெளியிடங்கட்குச் செல்வதுண்டு. பிரிவைத் தாங்கக் கூடிய மகளிராயின் அவர் அவ்வாறு செல்வது பொருந் தும்; தம்மைப் புகலாக அடைந்திருக்கும் அம் மகளிர் அவ்வாறு தாங்கக்கூடாதவராயின், அவர் தாங்குங் கால மறிந்து பிரிதல் வேண்டும்; ஏனென்றால், அவர் ஆதரவுக் குரியோர்; அவரைக் கைவிடுதல் ஆண்மையியல்பாகாது. ஆடவரிற் சிலர் அவ் வியல்பறியாது பிரிந்து தம் தலைவி யர்க்கு மிக்க துன்பம் விளைத்தலும உண்டு. பொருளீட்டு தல் ஆடவர்க்கு இயல்பென்று அம் மகளிர்க்குக் காரணம் காட்டுவதிற் பயனில்லை; அதனினும், அண்டினோரைக்

கைவிடாமையே ஆடவர்க்குப் பேரியல்பும் பேரறமுமாகும். இத் தகுதியறியாத ஆடவர்க்கு, இணைபிரிதலில்லாமல் ஒருங்கிருந்து ஆரவாரிக்கும் குயில்கள் தக்க பாடம் கற்பிப்பனவா யிருக்கின்றன.

பிரிவிடை மெலிந்த தலைமகள், 'குயில்கள் கூவுவது இவ் வுண்மையையே அவர்கட்கு எடுத்துக்கூறுவதுபோல இருக்கின்றது' என்று சொல்லி, அத்தகைய ஆடவர்க்குத் தெளிவு உண்டாக்க முயல்கின்றாள். உண்மையிலேயே, அறத்தினும் பொருள் அரியதாகாதன்றோ!

**குறிப்புரை:** தேம் - தேன். சிலம்பின் - பக்கமலையிலே. அறல் - நீர். அலங்கு சினை பொதுளிய - அசைகின்ற கிளைகள் தழைத்த. நறு வடி மாத்துப் பொதும்பு - நல்ல மாம்பிஞ்சுகளையுடைய மாஞ்சோலையில். மாத்து - மாமரங்களையுடைய. பொதும்புதோறு - சோலைதோறும். அல்கும் - தங்கிய. இரு - கரிய. கவறு - சூதாடு கருவிகள். பெயர்த்தன்ன - பெயர்ந்து உருண்டொழிதல்போல. நில்லா - நிலையில்லாத. இட்டு - இடையிட்டுக்கொண்டு; அதாவது ஒரு காரணமாக முன்னிட்டுக்கொண்டு. அகறல் - தலைவியை நீங்குதலை. ஓம்புமின் - காத்துக்கொள்ளுங்கள். கையறத் துறப்போர்க்கு - தலைவி செயலறும்படி நீங்கும் ஆடவர்க்கு. கழறுவபோல - அறிவு கூறுவன போல. மெய் உற - தம் உடம்பு பொருந்த; ஆணும் பெண்ணும் தம் உடம்பு தழுவ என்றபடி. மே வர - விருப்பம் உண்டாக. நுவல - கூவ. குயில் இவ்வாறு நுவல என்று தொடர்ந்து கொள்க. இன்னாதாகிய காலை. பிரிந்தார்க்கு இயல்பாகவே துன்பந் தருவதாகிய இந்த இளவேனிற் காலத்தில். அறத்தினும் பொருள் அரிது மன்ற - அறத்தினும் பொருள் தெளிவாக அரியதுதான்; அரிதன்று என்பதற்கு, இவ்வாறு உடன்பட்டாற்போலத் தலைவி கூறினாள். அறம் என்றது, இங்கே, அண்டினோரைக் கைவிடாமையாகிய தலைமை அறம். (சகூ)

## 6. திருத்தம்

### தலைமையின் அருளிச்செயல்.

[ஆண்மையும் அதனால் தலைமையும் ஓங்க ஓங்க, உள்ளம் இயல்பாகவே கனிந்து வருகின்றது. சிறந்த தலைவர் என்பதற்கு,

அவரிடம் ஆண்மையோடு அருளும் துளும்பி நிற்றலே உயர்ந்த அடையாளமாகும். பண்டைக்காலத்துப் புலவர்கள் இக் கனியினை எங்கும் பரவச் செய்தலிற் கருத்தூன்றி மிக்க துணிவோடு தொண்டு செய்திருக்கின்றனர்.]

பதிபா ழாக வேறுபுலம் படர்ந்து [றெனவிருந்தின் வாழ்க்கையொடு பெருந்திரு அற்
அருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதற்
பெருங்களிற் றியானையொ டருங்கலந் தராஅர்
மெய்பனி கூரா அணங்கெனப் பராவலின்,
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறைகொண்டு பெயர்தி; வாழ்கநின் ஊழி!
உரவரும் மடவரும் அறிவுதெரிந் தெண்ணி
அறிந்தனை அருளா யாயின்,
யார்இவண் நெடுந்தகை வாழு மோரே?

—பதிற்றுப்பத்து, எக: கஅ - உஎ.

தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்னுஞ் சேரவேந்தனை அரிசில்கிழார் என்னும் வேளாண்புலவர் பாடி நன்னெறி அறிவுறுத்திய பாடல் இது. அரிசில்கிழார் இவ் வேந்தனிடம் அமைச்சராகவும் இருந்து விளங்கியிருக்கின்றார்.

பெருஞ்சேரல் இரும்பொறையின் ஆண்மை யியல்புகளைப் பாராட்டிக் கூறி, அவ்வாறு கூறி வரும்போதே முதலில் அவனுக்குப் பகைவர்களா யிருந்தவர்கள் பின்புபடுந் துன்பங்களை உருக்கம் உண்டாக எடுத்துக் காட்டி, அப் பகைவர்கள்மேல் அருளுள்ளங் கொள்ளும்படி அறிவுரை வழங்கும் அருமையான பாடலாக இது காட்சியளிக்கின்றது. பண்டைக்காலத்துப் புலவர் பெருமக்கள், உலகத்துக்கு நலம் பயக்குங் கருத்துக்களையே அருளோடு வெளிப்படுத்திச் செய்யுள்கள் செய்யும் செம்போக்கு உடையவர்கள். அவ்வகையில், அவர்கள் எதன்பொருட்டும் தினைத்தனையும் அஞ்சுவதில்லை. மெய்ம்மையை விளக்

கும் ஒழுக்கமொன்றே அவர்கள் கடைப்பிடியாய் இருந்தது. ஆயினும், அவரவர் தகுதிக்குக் குறைவில்லாமலும், தத்தம் கண்ணியத்திற்கும் ஊறில்லாமலும் இவ்வொழுகலாறு மிகவும் அருமை பெருமையோடு அக்காலங்களில் நடைபெற்று வந்திருக்கின்றது.

அரிசில்கிழார் இச் செய்யுளிற் பின்வருமாறு அரசனுக்குக் கூறுகின்றனர்.

"நெடுந்தகையே! நகரங்களெல்லாம் நின் படையெடுப்பினாற் பாழாகும்படி வேற்று நாடுகளின்மேற் கறுவிச் சென்று, நினக்குத் திறை கொடாதவரிடமெல்லாம் நீ திறை கொண்டு திரும்புகின்றனை. தமக்கு வாய்ப்பிருந்த காலத்தில் அவ் வேற்றுநாட்டார் தமக்குள்ள ஆற்றல் குறைவை நினைந்து நினக்குப் பணிந்து, யானைகளும் அருங் கலங்களுமாகிய திறைகளைத் தந்து, இயன்ற நலங்களோடாயினும் வாழ்ந்திருக்கலாம். அவரெல்லாம் அங்ஙனஞ் செய்யாமையால், இப்போது, தமக்கு நாடோறும் வருதற்குரிய புது வருவாயும், பழைய பெருந் திருவும் ஒருங்கே நினது படை யெடுப்பினால் அழிந்துபோயினவே என வருந்தி மெய் நடுக்கம் மிகுந்து நின்னை ஒரு 'வருத்திக் கொல்லுந் தெய்வம்' எனக் கருதி அஞ்சி, தமது உயிருக்கேனும் ஊறு நேராமைப்பொருட்டுத் தம்மிடம் எஞ்சியிருக்கும் பொருள் முழுதும் நினக்குப் பலியாகத் தந்து பரவுகின்றனர். பேய், தனக்குப் பலிகொடுப்பார் உயிரை வெளவாமல் அவர் தரும் பலியைக் கொண்டு திரும்பிவிடுதல்போல, நீயும் அப் பகைவர் உயிரைக் கவராமல் அவர் கொடுக்குந் திறைகளை வெளவிக்கொண்டு திரும்புகின்றனையாய் இருக்கின்றாய். ஊழியளவாகிய நின் ஆயுட்காலம் நெடிது நிலைபெறுவதாக! அறிவு உடையாரையும் அஃது இல்லாதாரையும், அவரவர் அறிவுநிலையை ஆராய்ந்து கருதி அவரவர்க்கு ஏற்றவாறு நடந்துகொள்ளுதலை அறிந்து நீயே உள்ளமிரங்கி அருள்புரியாவிட்டால், நினக்கு எதிராக இவ்வுலகத்தில் வாழ்கின்றவர்கள் யார் இருக்கின்றனர்?"

அரசனது தகுதிக்குக் குறைவில்லாமலும், தமது கண்ணியத்திற்கு ஊறில்லாமலும் உருகி உரைத்த அரிசில் கிழாரது இவ் விரங்கலுரையானது அவ் வரசனுள்ளத்தில் எவ்வளவு எளிதாகத் திருகியேறி அதனைக் கனிவித்திருக்கும். பெருஞ்சேரலிரும்பொறையின் பிற்கால வாழ்க்கை இதனால் எவ்வளவோ அருள் நலம் மிக்கதாய் விளங்கி, அவ் விளக்கத்தால் உலகமும் எவ்வளவோ நலம் பெற்றிருக்குமன்றோ! அரிசில்கிழாரைப்போன்ற பெரியோர்களின் தொடர்பு இவ்வுலகத்திற்கு எவ்வளவு இன்றியமையாதது! அழியும் பொருள்களை விழைந்து வாளா இச்சகம் பேசி உயிர் வாழ்ந்து மாயாமல், அரிசில்கிழார் எவ்வளவு கண்ணியமாய் அழியாமல் விளங்கித் திகழ்கின்றார்! அவரல்லரோ வாழும் புலவர்!

குறிப்புரை: பதி - நகரங்கள். பாழாக - பாழாகும்படி. புலம் - நாட்டில். படர்ந்து - படையெடுத்துக் கறுவிச் சென்று; 'படர்ந்து திறை கொண்டு பெயர்தி' என்று கூட்டிக்கொள்ள வேண்டும். விருந்தின் வாழ்க்கையொடு - நாடோறுந் தேடும் புதிய பொருளும்; புதிது புதிதாகத் தேடி முயன்றுகொண்டிருத்தலே வாழ்க்கையாதலின், அவ் வாழ்க்கை முயற்சியால் வருகின்ற புதுப்பொருளை விருந்தின் வாழ்க்கை' என்றார். விருந்து - புதுமை. பெருந்திரு - முன்பே தொகுத்து வைக்கப்பட்டுக் கிடந்த பெருந் திரளான நிதியும். அற்று என - அற்றது என்று கருதி வருந்தி. யானையொடு அரு கலம் தராஅர் - யானைகளோடு அரிய அணிகலன்களும் திறையாகத் தராதவர். அரு சமத்து அரு நிலை தாங்கிய புகர் நுதல் பெருங் களிற்று யானையொடு - கொடிய போரில் தாங்குதற்கரிய எதிர்ப்பு நிலைகளைத் தாங்கித் தமக்கு ஆக்கந் தேடிய புள்ளிகள் பொருந்திய நெற்றியையுடைய பெரிய ஆண் யானைகளையும், யானைகளைப் பற்றிக் கூறும்போது இங்ஙனம் விளக்கிக் கூறிக்கொண்டார். மெய் பனி கூரா - உடம்பு நடுக்கம் மிகுந்து; கூரா - கூர்ந்து; மிகுந்து. அணங்கு - வருத்துந் தெய்வம். பராவலின் - பரவலின்; பரவுதலால்; அதாவது, வழிபாடு செய்து போற்றுதலால். பெயரும் - திரும்பும். பாசம் போல - பேயைப்போல. பெயர்தி - திரும்புகின்றனை. இத்தகைய அஞ்சத்தக்க பகைச் செயலால் வாழ்நாள் குறையுமாதலால், அங்ஙனங் குறையாமைப்பொருட்டு 'வாழ்க' எனப்

புலவர் இந்த இடத்தில் அன்புடன் ஓர் வாழ்த்துக்கூறினர். அறிந்தனே - அறிந்தனையாய்; அறிந்தனே அருளாயாயின் - அறிந்தனையாய் அருளாயாயின்; அதாவது, அறிந்து அருளாயாயின்; செய் முறை அறிந்து அருள்புரியாயாயின். இவண் - இவ்வுலகில். நெடுந்தகை - நெடுந்தகையே; பெருந்தகையே! பெரிய நிலையமைந்த அரசே என்றபடி. வாழுமோர் - வாழ்வோர்; நினக்கு எதிராக நல் வாழ்வில் விளங்குவோர். (சஎ)

## செழுமையும் அமைதியும்

[செழுமையும் அமைதியும் உலகத்திற் சிலர்க்கு இயல்பாகவே அமைகின்றன. ஆனல், அவற்றைப் பலர் தக்கபடி பயன் படுத்திக்கொள்ளாமல், வீணாய் இழந்து விடுகின்றனர். இது மிகவும் இரங்குதற்குரியது. இந் நிலையில் இருந்த ஒரு மன்னனை, ஒரு பெரியார் வாய் மொழியால் திருந்தி நலம் பெற்ற வரலாறு இச் செய்யுளில் வருகின்றது.]

சிறப்பில் சிதடும், உறுப்பில் பிண்டமும்,
கூனும், குறளும், ஊமும், செவிடும்,
மாவும், மருளும் உளப்பட, வாழ்நர்க்கு
எண்பேர் எச்சம் என்றிவை யெல்லாம்
பேதைமை யல்லது ஊதியம் இல்லென
முன்னும் அறிந்தோர் கூறினர்; இன்னும்
அதன்திறம் அத்தையான் உரைக்க வந்தது;
வட்ட அரிய செம்பொறிச் சேவல்
ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம்
கானத் தோர்நின் தெவ்வர்; நீயே [தோர்
புறஞ்சிறை மாக்கட்கு அறங்குறித்து அகத்
புய்த்தெறி கரும்பின் விடுகழை தாமரைப்
பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்
ஆடுகளங் கடுக்கும் அகநாட் டையே; [றும்
அதனல், அறனும் பொருளும் இன்பமும் மூன்

ஆற்றும் பெருமநின் செல்வம்;
ஆற்றா மைநின் போற்றா மையே.

—புறநானூறு, உஅ.

உலகத்திற் செல்வர்கள் பலர் இருக்கின்றார்கள்; ஆனால், அச் செல்வத்தைக்கொண்டு தக்க பயன் கொள்வோர் மிகச் சிலரே. பண்டங்கள், பயன்கொள்வதற்கு இருக்கின்றனவே அல்லால், வீணாய் அழிந்தொழிவதற்கு அன்று. பயனாவது, அறம் பொருள் இன்பங்களைப் பெறுதல். பொருளைக்கொண்டு மேன்மேற் பொருளும் பெறலாம்; இன்பமும் பெறலாம்; இவை யெல்லாவற்றினுஞ் சிறந்த அறத்தையும் பெறலாம் என்பது கருத்து.

சோழன் நலங்கிள்ளி என்னுஞ் சோழமன்னன் தக்க செல்வமுடையவன். அவனது நாடே வளமான நீர் நாடு. எங்கும் கரும்புத் தோட்டங்கள்; தாமரைப் பொய்கைகள். குடிமக்களிடம் அறவுணர்வும் உண்டு. கரும்புத் தோட்டத்தில் குடிமக்கள் தொழில் செய்துகொண்டிருக்கும்போது, எவரேனும் வேலிப் புறத்தில் இருந்தால் அவர்கட்குப் பயன்படும்படி அக் குடிமக்கள் கருப்பங் கழைகளை அப்படியே பிய்த்தெடுத்து வீசுவர். அறங் கருதி அவர்கள் அங்ஙனம் செய்வதுண்டு. வீசிய அந்தக் கருப்பங்கழைகள் ஒரோவொருகால், அருகிலுள்ள தாமரைப் பொய்கையில் அதன் அழகிய தாமரை மலர் சிதையும்படி விழுந்துவிடும். அப்போது அந்தக் குளத்தின் அலைச் சிதறலை நோக்கினால், அக் குளம் கூத்தர்கள் ஆடுகின்ற ஆடுகளத்தை ஒத்துக் காணப்படும். சோழன் நலங்கிள்ளியின் நாடு அவ்வளவு செழிப்புடையதுதான்.

மேலும், சோழ நாடு கழனிகள் மிக்க மருத நாடு. அதனால், அயலார் எளிதில் நடமாடுதற்குரிய பிறர் நாடுகளுக்கு உள்நாடாயிருக்கின்றது. அதனால், இவனுக்குப் பகைவர்கள் அரியர். யாரையாவது, பகைவராகச் சொல்ல வேண்டுமானால், எங்கேனுங் காட்டின்கண் உள்ள ஆறலை கள்வரைக் கூறலாம்.

நலங்கிள்ளி நாடு இவ்வளவு அமைதியும் செழிப்பும் உடையது. ஆயினும், அவன் தாயாதிகளோடு பகைத்தலும், பிற நாட்டவரோடு போர் தொடுத்தலுமாய்ச் சில காலம் இருந்தான். அக்காலத்தில், உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்னும் பேரறிஞர் ஒருவர் அவனுக்குப் பழக்கமுடையவர். அப் பெரியாருக்கு இம் மன்னன் மேல் இரக்கம் பிறந்தது. இவன் தனக்கமைந்த இவ்வளவு நல்ல செல்வத்தை அறம் பொருள் இன்பமாகிய சிறந்த வகைகளிற் பயன்படுத்தி எவ்வளவோ மேம்பாடு அடையலாமே' என்று அவர் திருவுள்ளத்தில் தோன்றியது. கிள்ளியை அணுகி அவன் நாட்டின் செழுமையையும் அமைதியையும் எடுத்துக்காட்டிப் பின்வருமாறு அறிவுரை கூறினார் :

"உலகில் மக்கட் பிறப்பில் வாழ்வோர்க்கு, அறஞ் செய்யாமை காரணமாக எண்வகைக் குறைபாடுகள் உண்டாவதுண்டு; குருடு, சப்பை, கூன், குட்டை, ஊமை, செவிடு, விலங்கு, பித்து எனப் பேதையராகப் பிறக்க நேர்தலே அவை. அறிந்தோர் முன்னும் இங்ஙனங் கூறினர். யாமும் அதனையே இப்போது நினக்குச் சொல்ல வந்தது. நின் பெருஞ் செல்வமோ அறனும் பொருளும் இன்பமும் என மூன்றும் ஆற்றவல்லதாயுள்ளது. ஆனால், அங்ஙனம் ஆற்றாமை, நின்னை நீ காத்துக்கொள்ளாமையேயன்றி வேறில்லை."

இங்ஙனம் புலவர் அறிவுரை கூறியதும், நலங்கிள்ளி உடனே உள்ளம் திருந்தித் தகுந்த அற வாழ்க்கையனாய் விளங்கினான். சான்றோர்கள் பண்டைக்காலத்தில் இங்ஙனம் நாட்டுக்குப் பல நலங்கள் புரிந்திருத்தலை அறியும்போது மிக்க மகிழ்ச்சியுண்டாகின்றது.

குறிப்புரை : சிறப் பில் - சிறப்பில்லாத. சிதடும் - குருடும். குறளும் - குட்டையும். ஊமும் - ஊமையும். மாவும் - விலங்கு வடிவும். மருளும் - பித்தும். வாழ்நர்க்கு - உலகில் உயிர் வாழ்வார்க்கு. எண் பேர் எச்சம் - எட்டுப் பெரிய குறைபாடுகள். பேதைமை - பேதைப் பிறவிகள். ஊதியம் இல் என -

இவற்றால் அறம் பொருள் இன்பச் செய்கைகளாகிய ஊதியம் இல்லை என்று. அதன் திறம் - அதன் இயல்பை. அத்தை, அசைச்சொல்; இதற்குப் பொருள் இல்லை. கானத்தோர் - காட்டிலுள்ள கள்வர். தெவ்வர் - பகைவர்; வேறு பகைவரில்லை என்றபடி. அந்தக் கானம் எப்படிப்பட்டது என்பதற்கு 'வட்ட அரிய செம் பொறிச் சேவல் ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம் கானத்தோர்' என்றார். அதற்குப் பொருள், 'வட்டமான அரிய சிவந்த புள்ளிகளையுடைய காட்டுக்கோழியின் சேவல், அங்கே தினைப்புனங் காவல் செய்வோரைத் துயிலுணர்த்தும் பொருட்டு விடியற்காலத்திற் கூவும் கானம்' என்பது. பொறி - புள்ளி. ஏனல் - தினைப்புனம். உணர்த்திய - துயிலெழுப்பும் பொருட்டு. 'நீயே அக நாட்டையே' என்று சேர்த்து உரைத்துக்கொள்ள வேண்டும். சிறை - வேலி. புறஞ் சிறை மாக்கட்கு - வேலிக்குப் புறத்தே இருக்கும் மக்கட்கு. அகத்தோர் - தோட்டத்தின் உள்ளே தொழில் செய்வோர். புய்த்து எறி - பிய்த்து எறிந்த. கரும்பின் விடு கழை - கரும்பாகிய அவ் வீசிய கழை. கழை - தண்டு. வீழ்ந்தென - பொய்கையில் வீழ்ந்ததாக. கடுக்கும் - ஒக்கும். அகநாட்டையே - உள்நாட்டை உடையோனே! பெரும! மூன்றும் ஆற்றும் நின் செல்வம் - பெருமானே நின் செல்வம் அற முதலிய மூன்றையும் ஆற்ற வல்லது. ஆற்றாமை - அங்ஙனம் செய்யாமை. நின் - நின்னை. ()

## நீர் வளம்

[அரசனுடைய கடமைகள் எல்லாவற்றிற்கும் அடிப்படையான கடமை, நாட்டில் நீர்நிலைகளைப் பெருக்கிவைத்த லாகும். அதிலிருந்து, அவன் இவ் வுலகில் புகழை நிலைநிறுத்திக் கொள்வதற்கும், தான் செல்லும் மறுமை யுலகத்திற்கு அறம் தேடிக்கொள்வதற்கும், தன் காலத்தில் தன் செயலை உயர்ந்த நிலையில் மிகுத்துக்கொள்வதற்கும் இடம் உண்டாகும். அரசியல் அறம் இது.]

செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்,
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினும், சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினும், மற்றதன்

தகுதி கேளினி ; மிகுதி யாள !
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே ;
உண்டி முதற்றே உணவின் பிண்டம் ;
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே ;
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே ;
வித்திவான் நோக்கும் புன்புலங் கண்ணகன்
வைப்பிற் றாயினும், நண்ணி யாளும்
இறைவன் தாட்குத வாதே ; அதனால்
அடுபோர்ச் செழிய ! இகழாது வல்லே
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோ ரம்ம இவண்தட் டோரே ;
தள்ளா தோர்இவண் தள்ளா தோரே.

—புறநானூறு, கஅ : கரு - உo.

குடபுல வியனார் என்னும் புலவர்பிரான் ஒருவர் இருந்தார். பாண்டியன் நெடுஞ்செழியனிடம் அவருக்குப் பழக்கம் உண்டு. அவனுக்கு ஒருகால் அவர் பின்வருமாறு கூறினார்.

"மக்களாய்ப் பிறந்தோர் இம்மை மறுமை நலங்களைப் பெறவேண்டும். இம்மை நலம் என்பது புகழ் ; மறுமை நலம் என்பது அறம். இவையன்றி மற்றொரு நலமும் அவர்கள் பெறவேண்டுங் கட்டாயம் உண்டு. அது, தனது நிலையை இணையற்றதொன்றாக மிகுத்துக்கொள்ளுதல் ; வேந்தராயின், பகையரசரது தோள்வலியைக் கெடுத்துத் தாமே தலைவராக மிகுத்துக்கொள்ளுதலென்று அதனைக் கூறலாம். இங்ஙனம் மூவகை நலங்களை மக்கள் பெற வேண்டும். நீ அவற்றைப் பெற விரும்பினால், அவற்றிற் குரிய தகுதியான வழி பின்வருமாறு :

"பெரியோய்! உடம்புக்கு உணவும் நீரும் இன்றியமையாதன. உண்டி, நீர் என்னும் இவற்றைக் கொடுத்தோர் உயிர் கொடுத்தவரேயாவர். நிலத்தோடு நீர் சேர்ந்தால், அந் நீர் உடனே உண்ணும் உணவாகவும் உண்ணும் நீராகவும் உண்டாகின்றது. ஆதலால், நீரையும் நிலத்தையும் ஒன்று சேர்த்தோரே இவ் வுலகத்தில் உயிரையும் உடம்பையும் ஒன்று சேர்த்து நிலைபெறுத்தியவராகின்றனர். இதனால், மறுமைக்குரிய அறமும் இம்மைக்குரிய புகழும் உண்டாக இடமிருக்கின்றது. அரசியல் முயற்சியில் தலைமை பெறுதற்கும் நீரோடு கூடிய நிலமே வருவாய் பெருக்கி, உதவியாகும். விதையை விட்டு மழையை எதிர்நோக்குதற்குரிய புன்செய் நிலம் எவ்வளவு இடமகன்றதாயினும் முயற்சிக்குப் பயன்படாது.

"ஆதலால், பாண்டியனே, இவ் வுண்மைகளை இகழாது கடைப்பிடித்து, உடனே, நிலம் சற்று நெளிந்து பள்ளமாயிருக்கும் பக்கங்களில் நீர் நிலைகள் நாட்டில் பெருகும்படி தடுத்து அமைத்தவர்களே, இவ் வுலகத்தில் தமது புகழைப் பொருத்தி அமைத்தோராவர். அங்ஙனம் நீர் நிலைகளைத் தளைசெய்யாதவர்கள் இங்கே தம் பெயரையும் தளைசெய்யாதவரேயாம்.

ஆகவே, நீ நின் நாட்டில் புகழும் அறமும் தலைமையும் பெற ஆட்சிசெய்ய விரும்பினால், குடிமக்கள் முயற்சிகள் செவ்வையாக நடைபெறும்படி அங்கங்கும் நீர்வளத்தைப் பெருக்கி யுதவுதல் வேண்டும்," என்பது.

வாழ்க்கையின் அடிப்படைகளும், அவற்றிற்குத் தக்கபடி செய்யவேண்டிய அரசன் கடமைகளும் இச் செய்யுளில் என்றும் பயன்படும்படி ஆசிரியர் நன்கு விளக்கியருளினார்!

குறிப்புரை: செல்லும் உலகத்துச் செல்வம் - செல்லும் மறுமையுலகத்திற்குரிய அறம். ஞாலம் காவலர் - உலகத்தைக் காக்கும் அரசரது. முருக்கி - அழித்து. ஒரு நீ ஆகல் - நீயொருவனே தலைவனாதலை. சிறந்த நல் இசை - மிக்க உயர்ந்த

புகழ். அதன் தகுதி - அந்நிலைக்கேற்ற தகுதியான செயலை. கேள் இனி - இப்போது கேட்பாயாக. மிகுதியாள - உயர்த்தும் எண்ணங்களையுடைய பெரியோனே! நீர் இன்று - நீர் இல்லாமல். அமையா - நிலைத்திராத. உண்டி முதற்று - உணவினை முதலாக உடையது. உணவின் பிண்டம் - உணவினால் வளர்ந்த உடம்பு. 'உணவின் பிண்டம் உண்டி முதற்றாகலின் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்று உரைத்துக்கொள்ள வேண்டும். 'உண்டி' என்றது, இங்கே சோறும் நீருமாகும். 'உணவு' என்பதற்கும் அப்படியே பொருள்செய்துகொள்ள வேண்டும். 'உணவெனப்படுவது நிலத்தொடு நீரே' என்று அடுத்த அடி வருவதனாலும் இவ்வுண்மை நன்கு விளங்கும். 'நிலத்தோடு நீர் சேர்ந்த பின்பே உண்ணுஞ் சோறும் உண்ணும் நீரும் அமைதலால், 'உணவெனப்படுவது நிலத்தொடு நீர்' எனப் பட்டது. புணரியோர் - சேர்த்து நிறுத்தினோர். ஈண்டு - இவ்வுலகில். படைத்திசினோர் - படைத்தோர்; தோற்றி நிலை பெறுத்தினவராவர். வித்து - விதைத்து; குடியானவர்கள் விதையை விதைத்துவிட்டு. வான் - மழையை. புன் புலம் - புன்செய் நிலம். கண் அகல் வைப்பிற்று ஆயினும் - இடம் அகன்ற நிலத்தையுடையதாயினும். நண்ணி ஆளும் - அந்த இடத்தைப் பொருந்தி ஆளுகின்ற. இறைவன் தாட்கு - அரசனது முயற்சிக்கு. அடு போர் - கொல்லுதல் வல்ல போர்ப் படையையுடைய. வல்லே - விரைவில். நிலன் நெளி மருங்கில் - நிலம் குழிந்த பக்கங்களில். தட்டோர் - தளை செய்தோர்; நீரைத் தடுத்து நிறுத்தினோர். அம்ம, வியப்பினை உணர்த்தும் இடைச்சொல். இவண் - இவ்வுலகில். தட்டோர் - தமது பெயரைப் பொருந்தச்செய்தவராவர். (சக)

## அரசியலும் அறிஞரும்

[அறிஞரோடு தொடர்பில்லாமல் அரசியல் இனிதாக நடைபெற்று விடாது. அரசியலுக்கு ஆக்கமெல்லாம் அறிஞர்களாலேதாம் உண்டாகின்றன. ஆதலால், அறிவியல், அரசோடு மிக்க அணுக்கம் வாய்ந்தது. அந் நிலையறிந்து அரசன் அறிஞர்களைப் பொருள்செய்து ஒழுகவேண்டும். அரசியலுக்கு உதவக்கூடிய அறிஞர்களாகச் சங்க காலப் புலவர்கள் விளங்கினர்.]

பல்கனி நசைஇ அல்குவிசும் புகந்து
பெருமலை விடரகஞ் சிலம்ப முன்னிப்

பழனுடைப் பெருமரந் தீர்ந்தெனக் கையற்றுப்
பெறாது பெயரும் புள்ளினம் போலநின்
நசைதர வந்துநின் இசைநுவல் பரிசிலேன்,
வறுவியேன் பெயர்கோ வாண்மேம் படுந!
ஈயா யாயினும் இரங்குவே னல்லேன்;
நோயிலை யாகுமதி; பெரும! நம்முட்
குறுநணி காண்குவ தாக, நாளும்
நறும்பல் ஒலிவருங் கதுப்பின் தேமொழித்
தெரியிழை மகளிர் பாணி பார்க்கும்
பெருவரை யன்ன மார்பின்
செருவெஞ் சேஎய்! நின் மகிழிருக் கையே.

—புறநானூறு, உ0கூ : எ - கக.

மூவன் என்று முன்பு சிற்றரசன் ஒருவன் இருந்தான். பெருந்தலைச்சாத்தனார் அவனிடம் பரிசில் விரும்பிச் சென்றார். அவன் அதற்குக் காலந் தாழ்த்தினான். புலவர் உள்ளம் வருந்தியது. மூவனை நோக்கி வருந்திச் சில கூறினார்:

"பழம் விரும்பிப் பழமரத்தை நாடிச்சென்ற பறவையினம், மரத்தில் பழம் மாறிப் போனமையால் அது பெறாமல் வருந்தித் திரும்பினாற்போல நின் புகழை இசைத்துக்கொண்டு வந்த யான் வெறுங்கையனாய் இதோ திரும்புகின்றேன். நீ ஈயாயாயினும் அதற்காக நான் இரங்கமாட்டேன்; இத்தகைய உள்ளப்பான்மையால் நீ நோயில்லாமல் இருந்தாற்போதும். பெரும! புலவரும் அரசருமாகிய நமக்குள் உள்ள நெருங்கிய அணுக்கத்தை நின் திருவோலக்க இருக்கை விரைவில் காண்பதாக!"

இவ்வுரையினால் புலவர் உள்ளம் மிகவும் நொந்திருக்கின்றதென்று தெரிகின்றது. ஓர் அரசனுக்கும் புலவர்க்கும் நெருங்கிய அணுக்கம் இருக்கவேண்டுவது அரசியல் வளர்ச்சிக்குக் கட்டாயமானது. அதனை நின் அர

சிருக்கை விரைவில் அறியும் பேறு பெற்று மாட்சிமை யுறுவதாக என்பது அவர் கருத்து. மூவன் சிறிது நினைவு மாறித் தக்கோரைப் பொருள்செய்யாது ஒழுகிய இப் பழி நிகழ்ச்சி இலக்கியத்தில் நிலைத்துவிட்டதே, என்ன செய்யலாம்?

குறிப்புரை: நசைஇ - விரும்பி. அல்கு விசும்பு உகந்து - தான் உறையும் வானத்தினூடு உயரப் பறந்து. விடரகம் சிலம்ப - பிளவிடம் எதிரொலி செய்யும்படி. முன்னி - முனைந்து சென்று. தீர்ந்தென - பழுத்து மாறியதென்று அறிந்து. கை யற்று - வருந்தி. பெயரும் - திரும்பிச் செல்கின்ற. நின் நசை - நின் விரும்பத்தகுந்த தன்மை. தர - என்னை இங்கே கொண்டு வர. பரிசிலேன் - பரிசிலாளனேன். வறுவியேன் பெயர்கு - வெறுங்கையேனாய் இதோ திரும்புகின்றேன். வாள் மேம்படுந - வாட்போர் மிக்கவனே! ஆகுமதி - ஆவாய்; மதி, முன்னிலை அசை. குறு நணி - நெருங்கிய அணுக்கம். 'நின் மகிழிருக்கை காண்குவதாக' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும். நாளும் - நாடோறும். நறு பல ஒலிவரும் கதுப்பின் - நல்ல பல தழைத்தலையுடைய கூந்தலையும். தே - இனிய. 'கூந்தலை யும் மொழியையும் இழையையும் உடைய மகளிர் பாணி பார்க் கும் மார்பினையுடைய சேய்' என்று தொடரும். பாணி பார்க்கும்- கூடுதற்குக் காலம் பார்ப்பதற்கு ஏதுவான. வரை - மலை. செரு வெம் - போரை விரும்பும். சேய் - முருகக்கடவுளை ஒப்ப வனே. நின் மகிழ் இருக்கை - நின் மகிழ்ச்சிக்கு ஏதுவான இத் திருவோலக்க அரசிருக்கையானது. (௫0)

## உழுதொழில்

[அரசனுக்கு வெற்றியும் நாட்டு மக்களுக்கு வாழ்க்கையும் உழு தொழிலால் உண்டாகின்றன. அரசன், நேர்மையாய் அரு ளோடு ஒழுகினால் மட்டுமே அத் தொழிலுக்கு வேண்டிய மழை பொழியும். இவையெல்லாம் செவ்வையாய் நடந்தால் மட்டுமே நாட்டில் தீய செயல்கள் நிகழாமலிருக்கும். ஆதலால், வேளாண்குடிகளைப் பாதுகாக்கவேண்டியது அரசனுக்கு முதற்கடமையாகும்.]

அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதனெளி யோர்

[ஈண்டு

உறைவேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே;
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக் [குடை
கண்பொர விளங்கும்நின் விண்பொரு வியன்
வெயின்மறைக் கொண்டன்றோ அன்றே, வருந்
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ! [திய
வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் [கிடப்பக்
களிற்றுக்கணம் பொருத கண்ணகல் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே;
மாரி பொய்ப்பினும், வாரி குன்றினும்,
இயற்கை யல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகல் ஞாலம்;
அதுநற் கறிந்தனை யாயின், நீயும்
நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது,
பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை யாயின், நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே.

—புறநானூறு, நரு : கச - நடச.

'வெள்ளைக்குடி' என்பது சோழநாட்டின் ஓர் ஊர். அங்கே நாகனார் என்னும் வேளாளர் ஒருவர் இருந்தார். அவர், புலவருமாவர். அவர்க்குச் சில நிலங்கள் இருந்தன. அவர், வேளாண் தொழில் உடையவர். சில ஆண்டுகள் அவருக்கு, நில வரி செலுத்த இயலவில்லை.

அவர் காலத்துச் சோழமன்னன், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். அருளும் ஆண்மையும் மிக்க

வன். அவனுஞ் செய்யுள் செய்யவல்லவன். தமிழன்பிற் சிறந்தவன். அவன் ஆட்சியாளர் வெள்ளைக்குடி நாகனாரின் நிலங்களை வரிப்பணத்திற்காகக் கைப்பற்றினர்.

நாகனார் நேரே சோழனிடஞ் சென்றார். உழவு தொழிலின் சிறப்பையும், அதனால் வேளாண்குடிகளைப் பாதுகாத்துக்கொள்ளும் முறையையும், பிற ஆட்சிக் கடமைகளையும் விறுவிறு வென்று பின்வருமாறு எடுத்துக் காட்டினர் :

"குடிமக்கள் தம்மிடம் வந்து தமக்கு முறைவேண்டும் பொழுது அவர்க்கு எளிதாக முகங் கொடுக்கும் அரசரே, தமது நாட்டில் மழைவேண்டும்பொழுது அது பெறுவர். அரசர்க்கு வெண்கொற்றக்குடை வெயில் மறைப்பதற்காக இல்லை; வருந்திய குடிகளின் குறை மறைப்பதற்கே உள்ளது. அரசர்க்குப் படையால் உண்டாகும் வெற்றியும், உழுபடையாகிய ஏரால் விளையும் விளைவின் பயனே.

"அன்றியும், காலத்தில் மழை பெய்யாவிட்டாலும், நாட்டில் வருவாய் குறைந்தாலும், மக்கள் செயலில் இயல்பல்லாத கொடுஞ்செயல்கள் தோன்றினாலும் இந்த உலகம் அரசனையே பழிக்கும். அதனை நீ நன்கறிந்தனையாயின், கோள்கூறுவோருடைய மேற்போக்கான பேச்சைக் கேளாமல், வேளாண்குடிகளை முதன்மையாய்ப் பாதுகாத்து அதுகொண்டு நாடுகாத்தலை நீ கடமையாகக் கொள்ளவேண்டும். அவ்வாறு செய்தால், நின் பகைவரெல்லாரும் நின் அடிபோற்றிக் கிடக்குந் தலைமை நிலை நினக்கு நிலைபெறும்.

புலமையும் உழுதொழிலுமுடைய நாகனாரது செவியறிவுறாஉக் கேட்டுச் சோழன் அவர் கருத்துக்கும் அறிவுக்கும், அன்புக்கும் மகிழ்ந்து, அவர் நிலங்களை அவர், வழிவழி வரியின்றியே ஆண்டுகொள்ளும்படி விடுதலை செய்துவிட்டான்.

சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் ஆண்மைக்கும், நேர்மைக்கும், அருளுக்கும் அச் செயல் மேலுமேலும் அழகு செய்தது.

**குறிப்புரை :** அறம் புரிந்தன்ன - அறமே விரும்பி ஆராய்ந் தாற்போன்ற. செங்கோல் நாட்டத்து - செங்கோல் நோக்கத்தி னால். முறை - நீதியை. வேண்டு பொழுதில் - குடிகள் வேண் டுங் காலத்தில். பதன் - முகங்கொடுத்து உசாவும் செவ்வியில். எளியோர் - எளியராயிருக்கும் அரசர். ஈண்டு - இவ்வுலகில். உறை - மழைத்துளி. பெயல் - மழையை. கோடு திரள் - பக்கந் திரண்ட; திரண்ட பெரிய மேகம் என்பதற்கு இங்ஙனங் கூறப் பட்டது. கொண்மூ - மேகம். ஞாயிறு சுமந்த மேகம் என்றார், வெண்மேகம் என்பதற்கு. மாக விசும்பின் - ஆகாயமாகிய வானிடத்தில். நடுவு நின்றாங்கு - வெயிலை மறைத்துக்கொண்டு நடுவே நின்றாற்போல. கண் பொர விளங்கும் - காண்பவர் கண்ணொளி மழுங்க விளங்குகின்ற. விண் பொரு - வானத்தை முட்டும். வியன் - பரந்த. வெயில் மறைக் கொண்டன்றோ அன்று - வெயில் மறைத்தலைக் கொண்டதோ எனின் அன்று. மறை - மறைத்தலை. கொண்டன்றோ - கொண்டதோ. குடி - குடிகளின் குறையை. மறைப்பதுவே - மறைத்து அவர்கட்கு அருள் செய்வதுவே. வெளிற்று - இளைய. துணியின் - துண் டைப்போல. வீற்று வீற்று - வேறு வேறு. கிடப்ப - துணி பட்டுக் கிடக்க. களிற்றுக் கணம் - யானைத் திரளை. கண் அகல் பறந்தலை - இடம் அகன்ற போர்க்களத்தில். வரு படை தாங்கி - எதிர்த்து வருகின்ற படையை எதிர்நின்று பொறுத்து. பெயர் புறத்து - அவை உடைந்து திரும்பும் தோல்வியில். புறத்து - புறங்கொடுத்துச் செல்லுதலாகிய தோல்வி நிலையில். ஆர்த்து - ஆரவாரித்து. பொரு படை தரும் கொற்றமும் - இவ்வாறு பொருகின்ற நினது படை நினக்கு உண்டாக்கும் வெற்றியும். உழு படை - ஏர். ஊன்று சால் மருங்கின் - ஊன்றிய சாலி னிடத்தில்; ஊன்றிய நிலப்பிளவில். ஈன்றதன் - விளைந்ததன். வாரி - வருவாய்; விளைவு. இயற்கை யல்லன - இயல்பல்லா தன; அவை, தீச்செயல்கள். செயற்கையில் - செய்கையில்; மக்கள் செய்கையில். கண் அகல் - இடம் அகன்ற. நற்கு - நன்கு. பொதுமலாளர் - அயலார்; இங்கே, கோள் கூறுவார். பொது மொழி - உறுதியற்ற சொல். கொள்ளாது - உட்கொள் ளாமல். பகடு புறந்தருநர் - ஏரைப் பாதுகாக்கும் வேளாண்

மக்களின். பாரம் - குடிச் சுமையை. ஓம்பி - நின் அருட் செய்கையால் எளிதாக்கிக் காத்து. குடி புறந் தருகுவையாயின் - ஏனைக் குடிகளைக் காப்பாயானால். அடி புறந் தருகுவர் - நின் அடியைப் போற்றுவர். அடங்காதோர் - நின் பகைவர். (௯௪)

## முன்னேற்றம்

[வாழ்க்கை சிலர்க்கு எளிதாயிருக்கும்; அதற்கு அவர்களுடைய நற்பண்புகளே காரணம். பெருமையுள்ளது எதுவும், கிடைப்பதற்கு அருமையாகத்தான் இருக்கும். கிடைக்க அது எளிதாக வேண்டுமானால் மக்கள் தம்மிடம் நற்பண்புகளை வளர்த்துத் தம்மைப் பெரியோர்களாக்கிக்கொள்ள வேண்டும். பின்பு, எல்லாம் எளிமைதான்.]

இல்லோன் இன்பம் காமுற் றாஅங்கு
அரிதுவேட் டனையால் நெஞ்சே! காதலி
நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு,
அரியள் ஆகுதல் அறியா தோயே.

—குறுந்தொகை, ௧௨௦.

உயர்ந்த தன்மைகள் வாய்ந்தது, கிடைப்பதற்கு எப்போதும் அருமையாகத்தான் இருக்கும்; மக்களிலும் நல்லோர் தொடர்பு அவ்வளவு எளிதாகக் கிடைத்து விடுவதன்று. பெருமையுள்ளவை அருமையுள்ளனவாகத் தான் இருக்கும். ஆதலால், அப் பெருமைக்கேற்றபடி மக்கள், தம்மை மேலும் மேலும் பெருமைப்படுத்திக் கொண்டால், அப்போது தொடர்பு கொள்வது எளிதாக முடியும். இதுவன்றோ முறை! அதனை விடுத்துத் தமக்கு எதுவும் எளிமையாகக் கிடைக்கவில்லை என்று மற்றதன் மேல் குறை சுமத்துவதனால் என்ன பயனிருக்கின்றது? பொருளில்லாதவன் ஒருவன் உலக இன்பங்கட்கு விரும்பியதுபோலத்தான்.

காதலொழுக்கத்தில், தலைவனும் தலைவியும் ஓரிடத்தில் சந்திக்கவேண்டுமென்று தீர்மானித்துக்கொள்கின்றனர். தலைவனுக்கு, குறியிடம் தவறிப்போகின்றது. அப்போது தனது நெஞ்சை நோக்கி அவன், "நெஞ்சே,

பொருள் தகுதியில்லாதவன் உலக இன்பங்களை விரும்பினாற்போல, அரிய பொருளையன்றோ நீ விரும்பினாய்; காதலி நல்லவளாதலை அறிந்தாற்போல, அதற்கேற்றபடி, கிடைக்க அவள் அரியளாதலையும் அறியாதோய்'' என்று கூறிக்கொள்கின்றான். 'தலைவியின் நல்ல தன்மைக்கு ஏற்ப நீயும் உயர்ந்திருந்தாலன்றோ எளிதாகத் தொடர்பு நேரும்; இவ்வாறெல்லாம் தவறாது' என்று அவன் தன் நெஞ்சிற்குக் கூறியபடியாகும்.

சிறந்த நட்பத்தை இச் செய்யுளில், பரணர் விளக்கியிருக்கின்றார். 'அவரவரும் தம்தம் திறத்தில் முன்னேறி உயர்ந்தால், உலகில் வாழ்க்கை எளிதாகும்; அங்ஙனம் முன்னேறி உயர்தலென்பது நல்ல பண்புகளிற் சிறத்தலே' என்று இச் செய்யுள் நல் வாழ்க்கைக்கு வழி காட்டுகின்றது.

குறிப்புரை: இல்லோன் - வறியோன். காமுற்றாங்கு - விரும்பினாற்போல. அரிது - அரியதை. வேட்டனை - விரும்பினாய். ஆல், அசைச்சொல். 'நெஞ்சே, அறியாதோயே! அரிது வேட்டனை' என்று கொள்ளவேண்டும். அறியாதோயே என்றது, அழைப்புச்சொல்; விளிச்சொல் என்று ஆசிரியன்மார் கூறுவர். அறியாத நெஞ்சே என்பது கருத்து. (௫௨)

### அன்புள்ளம்

[மக்கள் அன்புள்ளம் பெற்றால், குற்றங் குறைவுகள் காணும் மனப்பான்மை மேலெழாமற் போய்விடும். வேறு சட்ட திட்டங்கள் அவ்வளவுக்குப் பயன்தரா. உள்ளத்தில் அன்பைக் கிளர்ந்தெழச் செய்த மாட்சிமை எதுவோ, அதனிடமே உள்ளம் ஈர்ப்புண்டிருப்பது இயல்பு.]

மன்றப் பனைமேல் மலைமாந் தளிரே! நீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டும் அறிதியோ?
மென்தோள் ஞெகிழ்த்தான் தகையல்லால்,
நன்றுதீ தென்று பிற. [யான்காணேன்

—கலித்தொகை, ௧௪௨: ௭௭ - ௮௦

மெய்யன்புடையாரது அடிப்படையான உள்ளப் போக்கு ஒன்று இச் செய்யுட் பகுதியில் வருகின்றது. தமது உள்ளத்தில் அன்பைக் கிளரவைத்த தம் நண்பரின் மாட்சிமைப் பண்பு எதுவோ, அதனையன்றி வேறு அவரிடமுள்ள குற்றங் குறைகளைப் பொருள்செய்துகொண்டிருப்பது மெய்யன்புடையாரின் செயலன்று. உள்ளம் அம் மாட்சிமைப் பண்பிலேயே ஈர்ப்புண்டு கிடக்கும். அதனால், உயர்ந்ததையே நினையும் ஆற்றல், உள்ளத்தில் வளர்ச்சி பெறுகின்றது.

தலைவிக்குப் பிரிவாற்றாமை மிகுதியாய்விட்டது; ஆற்றாமை உணர்வு, மிக்க முறுக்கமேறித் தலைவியின் நாணத்தையுங் கடந்துவிட்டது. மாலையில் மறைந்துபோகும் கதிரவனை நோக்கி, "ஞாயிறே, நீயும மறைந்துவிடுகின்றனை; நான் இரவெல்லாம் தனித்து எங்ஙனம் வாடுவேன்? நான் என் தலைவனை எப்படியுந் தேடியே தீரவேண்டும். எனக்குக் கை விளக்காக உதவும்படி நின் கதிர்களிற் சில கொடு" என்று கேட்கின்றாள். அதற்கு ஞாயிறு விடை ஒன்றும் சொல்லவில்லை. 'அப்படி நான் கொடுத்தால் நீ உன் தலைவனைத் தேடி அவனிடமுள்ள குறைகளை எடுத்துக்காட்டி ஊடல் கொள்ளவோ' என்று ஞாயிறு கருதுவதாகத் தலைவி உட்கொண்டு, இச் செய்யுட் பகுதியில் வருங் கருத்தைப் பின்பு ஞாயிறுக்குச் சொல்கின்றாள் :

"இதோ இந்த வெளியிடத்தில் வளர்ந்திருக்கும் பனைமரத்திற்குமேல், மலையில், மாந்தளிரின் நிறம் போலச் செவ்வண்ணமாய் மறைந்துகொண்டிருக்கும் அந்தி ஞாயிறே! எனது மெல்லிய தோளை நெகிழச்செய்த என் தலைவனது மாட்சிமையை யல்லாமல், நன்றென்றுந் தீதென்றுங் கூறுகின்ற பிற குறைவு நிறைவுகளை யான் காணமாட்டேன். பழைமை தொட்டே இவ் வுலகத்தில், அன்புடையார் செயல் இதுவன்றி வேறென்று நீ கேட்டும் அறிவையோ?"

தலைவியின் மெய்யன்பின் நிலை இது. உலகத்தில் மக்கள், தம்மை யொழிந்த பிறர் அனைவரிடத்தும் மெய்

யன்பு கொண்டு ஒழுகினால், அவ் வனைவரிடமும் குற்றங் கள் கண்டு அழுக்காறு முதலியன கொள்வது நேராதன்றோ! பிறரை இகழாதே, வெறுக்காதே என்றெல்லாம் எவ்வளவுதான் வற்புறுத்தினாலும், உள்ளத்தில் மெய்யன்பு நிகழ்ந்தாலன்றி அது பயன்படாது. அன்பு வெள்ளம் பாயுமாறு செய்துகொள்வதே எல்லாவற்றிற்கும் அடிப்படையானது. அது நிகழ்ந்தால் இந்தச் சட்ட திட்டங்களின் வேலை எவ்வளவோ குறைந்துபோகும். ஒன்று கிடக்க ஒன்றைச் செய்தலால் என்ன பயன்?

**குறிப்புரை :** மன்றம் - வெளியிடம். மலை - மலையிடத்தில். மாந் தளிரே என்று அந்தி ஞாயிற்றை அதன் செந்நிறம் கருதி அழைத்தபடி. தொன்று - பழைமையாக. அறிதியோ - அறிவையோ? தகை - மாட்சிமை. 'நன்று தீதென்று பிறக்காணேன்' என்பது. (ரு௫)

**சொல்வன்மை**

[தெளிவும், முறைமையும், இனிமையும் தோன்றச் சொல்வது சொல்வன்மையாகும். சொன்னபடி, பிறர், காரியத்தில் இறங்குவராயின், சொல்வன்மையோடு சொல்லப்பட்டதாகக் கருதப்படும். உண்மை யன்பும் அதனால் உண்டான ஆற்றலும் இச் சொல்வன்மைக்கு ஏதுவாகும்.]

'சொல்லறியாப் பேதை; மடவை! மற்றெல்லா!
நினக்கொரூஉம் மற்றுஎன் றகல்; அகலும் : [நீடின்று;
நினக்கு வருவதாக் காண்பாய்;' அனைத்தாகச்
சொல்லிய சொல்லும் வியங்கொளக் கூறு.

—கலித்தொகை, ககச : அ - கக.

காரிய நிறைவேற்றத்திற்குச் சொல்வன்மை மிகவும் இன்றியமையாதது. தெளிவாகச் சொன்னால், பிறர்க்குக் கேட்பதில் விருப்பமுண்டாகும்; மேலும், ஒரு முறைப்படுத்தி இனிமையாகச் சொன்னால், கேட்டபடி நடத்தலில் எண்ணமுண்டாகும். இங்ஙனம் சொல்லும் முறை

களை அறிந்து உண்மையோடும் ஆற்றலோடும் அன்போடும் சொல்வது சொல்வன்மையாகும்.

காதலித்த தலைவன், மணஞ்செய்துகொள்ளும் முயற்சியில் ஊக்கமின்றி இருந்தான். தலைவியின் சுற்றத்தாரிடம், வேறு அயலார் மணம் பேசி வந்தனர். தலைவிக்குத் தொல்லையாய் இருந்தது. 'தலைவனுக்கு இச் செய்தியைப் புலப்படுத்தி வரைவுக்கு முயலச்சொல்' என்று தோழியினிடம் தெரிவித்தாள். அதற்குத் தோழி, 'நான் அவ்வாறே செல்வேன்; என்ன வகையாக அவனுக்குத் தெரிவிக்கலாம்' என்று கேட்டாள். அதற்குத் தலைவி சொல்லும் விடையே இச் செய்யுட் பகுதி.

"மடவாய்! நீ அவனிடம் சென்று, 'ஏடா! நின் வரைவின்பொருட்டு நின் குரவரிடம் நீ சொல்லுதலறியாத பேதையாயிருக்கின்றனை. விருப்பமில்லையானால், இந்த வதுவை நினக்குப் பொருந்தாது ஒழியும் என்று நீங்கிவிடு. உடனே நின்னைவிட்டு இந்த மணம் அகன்று விடும்; காலந் தாழ்க்காது. விருப்பமானால், நினக்கு இவ் வரைவு கூடிவரும் முறையில் முயல்வாய்' என்று இவ்வளவாக நீ சொல்லுவதற்குக் கொள்ளும் இச் சொற்களும் அவன் உள்ளம் நின் ஏவலைக்கொள்ளும்படி சொல்லுவாய்."

இவ்வாறு தலைவி சொன்னாள்; தலைவி தன் வருத்தத்தை இப்படிப் புலப்படுத்தினாள்; தோழி அதனைத் தலைவனிடம் சொல்லும்போது தக்க முறையில் அவன் கேட்டு அதன்படி நடக்கும் வகையாகச் சொல்லவேண்டும் என்பது தலைவியின் கருத்து. அதனாலேதான், 'வியம் கொளக் கூறு,' என்று இறுதியிற் கூறினாள். 'வியம் கொள்ளல்' என்பது 'இட்ட ஏவலை ஏற்று நடத்தல்; கேட்டதும், காரியத்தில் இறங்கும் வகையாகக் கூறுவாய் என்று தலைவி சொன்னபடியாகும். அந்த முறைமை தோழிக்குத் தெரியும்; தெரிந்திருந்தும் தன்னைத், தெரியாதவள்போலக் கேட்டதனால் அவளை 'மடவாய்' என்று அழைத்தாள்.

இச் செய்யுட் பகுதியினால், சொல்வன்மையின் முதன்மையும் பயனும் புலப்படுகின்றன.

குறிப்புரை: மடவை - மடவாய்; மற்று, இரண்டு இடங் களிலும் அசை. எல்லா - எடா என்று நட்பு முறையில் விளிக் குஞ் சொல். ஒரூஉம் - பொருந்தாது நீங்கும். அகலும் - அது வும் நின்னைவிட்டு அகலும். நீடு இன்று - நீட்டித்தல் இல்லை. வருவதா - கூடிவரும் வகையில். காண்பாய் - எண்ணி முயல் வாய். அனைத்தாக - அவ்வளவாக. சொல்லிய - அவனிடம் சொல்லும்பொருட்டு. சொல்லும் - இங்கே கேட்டுக்கொள்ளும் சொற்களையும். வியம் - நின் ஏவலை. கொள - கொள்ளும்படி. ()

## மன வருத்தம்

[ஒருவர் உள்ளம் வருந்தினால், அதனால் பலர்க்குந் தீமை உண் டாகும்; கற்புடைய மாதர், உள்ளம் நொந்தால் உலகுக்கு அதன் தீமை பெரிது. பிறர் செய்யும் பிழைக்காகத் தன் னையே தான் நொந்துகொள்ளுதல் வருத்தத்தின் கொழுந் துக்கு அடையாளம். இல்லக்கிழத்தியரின் அக் கொழுந்து நோய் வாளா இராது.]

அஞ்சாதி; நீயும் தவறிலை; நின்கை இதுதந்த
பூவெழில் உண்கண் ணவளுந் தவறிலள்;
வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்றும் எள்ளி இதுஇவன் கைத்தந்தாள்
தான்யாரோ என்று வினவியநோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன்.

—கலித்தொகை, அசு : நகூ - சுக.

ஆடவரிற் சிலர், ஒருவர்க்கு மேற்பட்ட மகளிரை விரும்பும் மாசு உடையராகவும் இருப்பர். தலைவி தன் தோழியரோடு தன் புதல்வனை ஒருநாள் திருக்கோயில் வழிபாட்டின்பொருட்டு அனுப்பினாள். தலைவனுக்கு அமைந்த காமக் கிழத்தியருள் ஒருத்தி, இக் குழந்தையை வழியிற் கண்டு அன்போடு அளவளாவி, தலைவன் தனக் குத் தந்த தோள்வளையை அணிவித்து அனுப்பினாள்.

பையன் வீட்டுக்கு வந்ததும் தலைவிக்கு உண்மை விளங்கி விட்டது. 'யார் அணிந்தது?' என்று புதல்வனைக் கேட்டாள். குழந்தை அஞ்சியது. அதன்மேல், தலைவி வருந்திக் கூறுஞ் சொல்லே இச் செய்யுட் பகுதி.

"அஞ்சாதே; இதனை அணிந்துவந்த நீயுந் தவறுடையை யல்லை; நினது கையில் இதனை அணிவித்து அனுப்பிய அவளும் தவறுடையள் அல்லள்; வேனிற் காலத்துப் புதுப்புனல்போல எல்லார்க்கும் பொதுவிற் பயன்படுகின்ற உன் தந்தையை நோவதிலும் யாது பயன்?"

"ஆம்; நமக்கு மேல்நிலையில் இருந்து நம்மை இகழ்ந்து இவ் வளையை இப் புதல்வனின் கையில் அணிவித்தவள் யாரோ என்று வினவியறிதற்குரிய கீழ்நிலையாகிய தீவினைப் பான்மையிலுள்ள யானே தவறுடையேன்."

தலைவியின் நெஞ்சம் இவ்வாறு கூறி வருந்தியது. அறிவம் ஆற்றலு மிக்க தலைவனுக்கும், குடும்பத்துக்கும், உலகுக்கும் தலைவியின் இந் நெஞ்சக்கனல் எவ்வளவு தீமையைத் தரும்!

குறிப்புரை: அஞ்சாதி - அஞ்சாதே. இது - இந்தத் தோள் வளையை. பூ எழில் உண்கண் - பூவின் அழகு பொருந்திய கவர்ச்சியான கண்ணையுடைய. அவளும் - அக் காமக்கிழத்தியும். நுந்தையை - உன் தந்தையைத்தான். நோவார் யார் - இங்கே நோவார் யார் இருக்கின்றனர்? மேல் நின்று - நமக்கு மேல் நிலையில் இருந்து. எள்ளி - நம்மை இகழ்ந்து; தலைவி கண்டு விடுவாளே என்பதைப் பொருள் செய்யாமல் தொடி அணிவித்து அனுப்பியதனால், 'எள்ளி' எனப்பட்டது. வினவிய நோய்ப்பாலேன் - வினவுதற்குரிய தீவினைக்கூறுடையேன். (௬௫)

## ஆண் பெண் உயிர்

[ஆண் உயிரும் பெண் உயிரும் அன்பினால் ஒன்றுதலே காதல் என்பது. அவ் விருயிரும் ஒன்று சேர்ந்த பின்னரே, உயிர் முழுமை அடைகின்றது; ஓருயிராகின்றது; ஆற்றலெய்துகின்றது. அதற்கு முன் அவை ஆற்றலற்ற பகுதிப்பட்ட உயிர்களே.]

யார்இவன் எங்கூந்தல் கொள்வான்? இதுவும் [ஓர்
ஊராண்மைக் கொத்த படிறுடைத்து;எம்மனை
வாரல்நீ; வந்தாங்கே மாறு.
என்னிவை? ஓருயிர்ப் புள்ளின் இருதலை யுள் [ஒன்று
போர்எதிர்ந் தற்றாப் புலவல்நீ கூறின்என்
ஆருயிர் நிற்குமாறு யாது?

—கலித்தொகை, அக: க - சு.

தலைவி: "(நெஞ்சத்துள்) யார் இவன் என் கூந்தலைத் தொடுகின்றவன்? இதுவும் ஒரு நாகரிக முறையோ? ஆம்; நாகரிகமுறைக்கு ஒத்ததுபோன்ற கொடுமை யுடையது இது. (வெளிப்படையாக) நீ என் வீட்டுக்கு வராதே; வந்ததுபோலவே போ;"

தலைவன்: "என்ன இவை; ஒரே உயிரையுடைய பறவையின் இரண்டு தலைகளுள் ஒன்று மற்றொன்றோடு போர் மேற்கொண்டாற்போலப் புலந்துகொள்ளுதல்! நீ இங்ஙனங் கூறினால் இனி எனது அரிய உயிர் நிற்கும் வழி யாது?"

இவ்வாறு தலைவனுக்குந் தலைவிக்கும் ஒருகால் அன்பினாற் பேச்சு நடந்தது. ஊரையாளுந் தன்மை ஊராண்மை எனப்படும்; நாகரிகம் என்பதும் அது. ஊரைப் பாதுகாத்தல்போல நடித்துக்கொண்டு, இங்ஙனம் ஒரு மாதின் கூந்தலைப் பிடித்தல் என்ன நாகரிகத்தைச் சேர்ந்தது என்பதற்காக, 'ஊராண்மைக்கொத்த படிறுடைத்து' என்றாள். கூந்தலில் அன்புணர்வு ஊடுருவிச் செல்லுதலின், அதனோடு விளையாடுதல் தலைவன் இயல்பாயிற்று. உடம்பும் உயிரும் ஒன்றாய்த் தலைமட்டும் இரண்டுடைய பறவை ஒன்றிருந்து, அதன் இரு தலைகளும் ஒன்றையொன்று எதிர்த்துக்கொண்டால் எப்படியிருக்கும்? காதலர், தம்முள் ஊடிக்கொள்வது இதனை யொத்தது

என்று பண்டைக்காலத்து முன்னோர் கருதியது அவரது மெய்க்காதல் மாண்பினை எடுத்துக்காட்டியது. காதலித்தல் என்பதும் உயிர் ஒன்றுதலே என்பதும், காதலர் இருவருயிரும் சேர்ந்ததே ஒரு முழு உயிர் என்பதும் இதனால் விளங்குகின்றன.

குறிப்புரை: ஊராண்மைக்கு - நாகரிகத்திற்கு. படிறு - ஒத்த; போலியாய் ஒத்த. படிறு - கொடுமை. மனை - வீட்டுக்கு. வாரல் - வராதே. வந்தாங்கே - வந்ததுபோலவே. மாறு - திரும்பிப் போ. புள்ளின் - பறவையின். எதிர்ந்து அற்று - எதிர்ந்தாற்போல. புலவல் - புலத்தல். (௬௬)

### காதலர் சான்றாண்மை

[தமிழ் நாட்டில் பண்டைக்காலத்தில் காதலர், சான்றாண்மையைப் பெரிதும் விரும்பினர். சான்றாண்மையால் நட்பு எப்போதும் மெலிதலின்றி உரமாய் நிலைபெற்று இன்பம் பயக்கும் என்பது அவர்கள் கருத்து. பிற அவர்கட்குப் பொருளல்ல.]

சான்றவர் கேண்மை சிதைவின்றாய் ஊன்றி
வலியாகிப் பின்னும் பயக்கும்; மெலிவில்
கயந்திகழ் சோலை மலைநாடன் கேண்மை
நயந்திகழும் என்னும்என் நெஞ்சு.

—ஐந்திணை எழுபது, ௫.

பலரும் நட்புச் செய்கின்றனர்; அவற்றுள் சிலர் நட்பே சிதைவின்றி நிலைத்து வலியாகிப் பிற்காலங்களிலும் பயன் தருவதாயிருக்கின்றது. பெருங்குணம் அமைந்தவர் கேண்மை அங்ஙனம் நிலைபெறுகின்றது. இதனால், நட்புச் செய்யத் தக்கவர் இன்னார் என்பது பெறப்படும்.

தலைவி, தான் செய்துகொண்ட தலைவனது நட்பு அத்தகைய சான்ற நட்பே என்று தன் தோழியினிடம் மகிழ்ந்து தெரிவிப்பதாக வருவது இச் செய்யுள். "அவன் நட்பு மெலிதலின்றி இன்பமாய் விளங்குகின்றதென்று என் நெஞ்சம் கருதுகின்றது" எனத் தலைவி தெரிவிக்கின்றனள்.

ஊழ் உந்த அதனால் அமையும் நட்பாதலின், அது தகுதியாகவே அமைந்துவிட்டது. இடையூறுகள் வருங் காலங்களில் அதனை நீக்கிக்கொண்டு கடந்து செல்வதற்குப் பெருந்தன்மை இன்றியமையாதது. அதனாலேதான் சான்றவர் நட்பு வலிவுற்று நிலைப்பதற்கு ஏதுவாயிற்று.

தலைவி சொல்லிய இம் மகிழ்ச்சியுரையினால், காதலர், தமக்குள் சான்றாண்மைப் பண்பை மிகவும் விரும்புகின்றனர் என்பது விளங்கும். நாகரிக மிக்க நாட்டிலன்றோ இவ் விருப்பம் மக்களுக்குள் தலையெடுக்கும்? பண்டைத் தமிழகத்தின் நிலைமை இதனால் இனிது புலப்படும். மண மக்களுள், சான்றாண்மையை விடுத்து மற்றச் சொத்து உறவு முதலியவற்றையே பெரிதும் நாடும் இக்காலத் தமிழகத்துக்கு இச் செய்யுள் சிறந்த அறிவுறுப்பாகுமன்றோ?

**குறிப்புரை:** சிதைவின்றாய் - கெடுதலின்றி. ஊன்றி - நிலைபெற்று. பின்னும் - மறுமையிலும் பயக்கும் - நல்ல பயன்களை உண்டாக்கும். கயம் திகழ் சோலை மலைநாடன் - நீர் நிலைகள் விளங்குகின்ற சோலைகளையுடைய மலைநாட்டினனான தலைவனது. 'மெலிவு இல் கேண்மை' என்று தொடர்ந்து கொள்ளவேண்டும். நயம் - இன்பம்; நயம் திகழும் - இன்பம் மிகுந்து விளங்குகின்றது. என்னும் என் நெஞ்சு - என்று என் நெஞ்சம் கருதுகின்றது. (௫எ)

## போர்ச்செயலின் கொடுமை

[சிலருடைய அறியாமையால் எப்படியோ உலகத்தில் போர் நேர்ந்துவிடுகின்றது. ஆனால் அதனால் மக்கட்கு உண்டாகும் துன்பமோ பொறுக்க வொண்ணாததா யிருக்கின்றது. ஊர்கள் பாழாகி நெருஞ்சிக்காடாய் விடுகின்றன. ஊரிலுள்ளோர் கண்ணீர் பெருக்கிக் கைநெரித்துக்கொள்கின்றனர். என்ன துன்பம்!]

தேஎர்பரந்தபுலம் ஏஎர்பரவா
களிறாடியபுலம் நாஞ்சிலாடா
மத்துரறியமனை இன்னியமிமிழா [பின்
ஆங்குப், பண்டுநற் கறியுநர் செழுவளம் நினைப்

நோகோ யானே நோதக வருமே;
பெயல்மழை புரவின் றாகி வெய்துற்று
வலமின் றம்ம காலையது பண்பெனக்
கண்பனி மலிர்நிறை தாங்கிக் கைபுடையூ
மெலிவுடை நெஞ்சினர் சிறுமை கூரப்
பீரிவர் வேலிப் பாழ்மனை நெருஞ்சிக்
காடுறு கடுநெறி யாக மன்னிய
முருகுடன் றுகறுத்த கலியழி மூதூர்
உரும்பில் கூற்றத் தன்னநின்
திருந்துதொழில் வயவர் சீறிய நாடே.

—பதிற்றுப்பத்து, உசு.

பல் யானைச் செல்கெழு குட்டுவன் சேரமன்னன்; இவனைப் புலைக் கவுதமனார் என்பவர் பாராட்ட விரும்பினார்; அவன் வீரத்தைச் சொல்ல நினைந்தபோது பின் வருமாறு சொல்கின்றார்:

''திருந்திய போர்த்தொழிலையுடைய நின் வீரர் சினந்து போர் செய்த நின் பகைவருடைய நாடு முன்னெல்லாம் எவ்வளவோ வளமாயிருக்கும். ஒருதரம் தேர் ஓடிய நிலம் பின்பு ஏர் உழாமலே விளையும் செம்மையுடையது. பன்றிகள் கிளறிய நிலமும் ஏர் உழாமலே விளையும். தயிர் கடையும் மத்துக்களால் ஒலியெழுந்த வீட்டில் வேறு வாத்திய ஒலிகள் தேவையில்லை. முன்பு அந் நிலைகளை நன்கு தெரிந்தவர் அந் நாட்டின் மிக்க வளத்தை நினைத்தால் வருத்தமுண்டாகாமல் இராது. நானும் வருந்துகின்றேன். அத்தகைய நாடு இப்போது, மழைபெய்தலில்லாமல் வெப்பமுற்று, வலிவில்லாததாயிற்று; 'காலத்தின் தன்மை இது' வென்று அந் நாட்டிலுள்ள மெல்லிய நெஞ்சமுடையோர் கண்ணில் நீர் தாங்கிக் கையை நெரித்து வருத்தம் மிகும்படி, மனைகள் பலவும் நெருஞ்சிக் காடாயின. முருகக்கடவுள் வெகுண்டு

பகைத்தழித்த ஆரவாரமொழிந்த பழைய ஊர்போலாயிற்று.''

இங்ஙனங் கூறியது, குட்டுவன் வெற்றியைப் புகழ்ந்தபடியாயிற்று. ஆயினும், போர்ச் செயல்களால் உலகத்தில் உண்டாகும் பாழ்த்த நிலைகளும் இன்னல்களும் இவையென்று ஆசிரியர் விளக்கி வருந்தியதும் நினைத்தல் வேண்டும். இது, வீணுகப் போர் தொடுத்து இடையூறு விளைவித்துக்கொள்ளும் அரசரைக்குறித்து குட்டுவனும் இரக்கங்கொள்ளும்படி அமைந்திருக்கின்றது.

குறிப்புரை: களிறு - இங்கே, ஆண் பன்றி. ஆடிய - சிதைத்த. நாஞ்சில் ஆடா - கலப்பை உழா. உரறிய - ஒலித்த. இன் இயம் - இனிய வாத்தியக் கருவிகள். இமிழா - ஒலிக்கா. ஆங்கு - அவ்வாறு. நற்கு - நன்கு. நோவேன் யான் நோதக வரும் - ஆ, நான் வருந்துகின்றேன்; அவர்க்கு வருந்துதல் மிக வரும் என்பது. புரவு - புரத்தல். வலம் இன்று - ஆற்றல் இல்லாததாயிற்று. காலையது பண்பு - காலத்தின் பண்பு. கண் பனி மலிர் நிறை தாங்கி - கண்ணில் நீர் ததும்பி நிறைதலைத் தாங்கி. கைபுடையூ - கைநெரித்து சிறுமை கூர - துன்பம் மிக. பீர் இவர் வேலி - பீர்க்கங் கொடி ஏறிய வேலியையுடைய. பாழ் மனை - மக்கள் இல்லாத மனை. நெருஞ்சிக் காடு உறு கடு நெறியாக - நெருஞ்சி முட்களின் மிகுதி பொருந்திய கடுமையான வழியிடமாக. மன்னிய முருகு - வீரம் நிலைத்த முருகக் கடவுள். உடன்று - வெகுண்டு. கறுத்த - பகைத்து அழித்த. கலி அழி - ஆரவாரம் ஒழிந்த. மூதூர் - மூதூரைப்போல. உரும்பு இல் கூற்றத்து அன்ன - மனக்கொதிப்பு இல்லாத நடுநிலை மிக்க கூற்றுவனை யொத்த. வயவர் - வீரர். சீறிய - சினந்து எதிர்த்த. 'காடுறு கடு நெறியாக நின் வயவர் மூதூர் போலச் சீறிய நாடு வலம் இன்று; பண்டு நற்கு அறியுநர் செழு வளம் நினைப்பின் நோதக வரும்' என்று உரைத்துக்கொள்ளப் படும். (நிஅ)

# 7. நாகரிகம்

## கற்பின் அருஞ்செயல்

[ஒருவரிடம், நிலைபெற்ற அன்பின் உறுதி இருந்தால், அந் நிலையில் நில்லா ஏனையோரும் அதனால் திருத்தம் அடைவர். கற்பென்

னும் இத் திண்மையில் மாதர் ஆற்றல் படைத்தவராயிருக்கின்றனர். அதற்குக் காரணம், அவர்க்கு இயல்பில் அமைந்திருக்கும் மென்மைப் பண்பாகும்.]

அணில்பல் அன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப!
இம்மை மாறி மறுமை யாயினும்,
நீயா கியர்என் கணவனை;
யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே.

—குறுந்தொகை, சுசு.

மக்களிற் சிலர் பேச்சு, உரமுடையதாயிருக்கும்; சிலர் பேச்சு, அவ்வாறு இராது. 'வழவழா' 'குழகுழா' என்று இருக்கும். உள்ளத்தில் உறுதியிருந்தால் வாக்கினும் உறுதியிருக்கும். வாக்கின் கருத்தும் நெடுங்காலம் வரையில் உறுதி பயப்பிக்கும். இம்மை மாறி மறுமையாயினும் அவ் வுறுதி நிலைதளராமல் நிலைபெறும் என்று கூறலாம்.

மனங் கலந்து பழகும் நண்பர் இருவருள் ஒருவரேனும் நிலைகலங்காத உறுதியுடையவராய் இருந்தால், அது மற்றை யொருவரையும் நிலையில் நிறுத்தும். இந் நன்முறை அறிந்தே மாதர், கற்புநெறி மேற்கொள்ளும் பெருநெறி யுடையவராய் விளங்குகின்றனர். அவர்களிடம் அது, உறுதி குலையாது நிலைபெற்றிருப்பதனாலேயே 'மன்னும் மாதர் பெருங்கற்பு' என்றும் பாராட்டப்பெறுகின்றது.

ஒருகால் ஒரு மாது தன் கணவனை நோக்கித் தனது நிலைதளராத அன்பின் உறுதியைப் புலப்படுத்தி, அவனையும் அத்தகைய அன்பின் உறுதியில் நிலைப்பிக்க முயன்றனள். அப்போது அவளுடைய உறுதியான வாய்மொழி பின்வருமாறு இருந்தது:

''தலைவ! இந்தப் பிறப்பு நீங்கி வேறு எத்தனை பிறப்புகள் பிறந்தாலும், என் கணவன் நீயே ஆகுக! நின் நெஞ்சு பொருந்திய மனைவி யானே ஆகுக!'' என்பது.

ஆழ்ந்த உள் உரமும் கலந்த பெருங்கேண்மையு முடைய இவ் வுறுதி மொழியைக் கேட்கும்போது கணவனது நெஞ்சம் எவ்வளவு உருகி ஒற்றுமைப்படும்! கணவன்பால் ஏதேனுஞ் சிறிது தவறு இருப்பினும் உடனே அது நீங்கி நன்மையில் அவன் நிலைகொண்டு நிற்பதற்கு, மாதரது இப் பெருங்கற்பு நெறியாகிய திண்மை நிலையைவிடச் சிறந்த காரணம் வேறு என்ன இருக்கின்றது?

தன் கணவனிடம் முட்செடிபோன்ற சிற்சில குற்றங்கள் முளைத்திருத்தலும் அதனால் ஒரு நிலையில் நில்லாது அவன் உள்ளம் அலைதலும் அறிந்துகொண்ட மனைவி, அதனையுங் குறிப்பாக அவனுக்கு அறிவித்துவிடக் கருதி, அவனை, "அணிலின் பல்லைப்போன்ற கூரிய சிறு சிறு முட்களையுடைய முள்ளிச் செடியையும், நீலமணியின் நிறத்தை யொத்த பரந்த அலைநீரினையும் உடைய கடற்கரைத் தலைவனே!" என்று முதலிலேயே வல்லமையாகக் கூறிக்கொண்டாள். முட்களுடைய முள்ளிச்செடி என்று கூறியதோடு நில்லாமல், 'கொங்கு முதிர் முள்ளிச்செடி' என்றும் புலப்படுத்தியதனால், 'அவன் குற்றமே முற்றும் உடையனல்லன்; குணங்களும் பலப்பல உடையன்' என்னும் உண்மையையும் அவள் வெளிப்படுத்தி மகிழ்வித்திருக்கின்றனள்.

அத்தகைய நல்லியல் அமைந்த கணவனுக்கு, தன் மனைவியின் கற்புறுதியும் பெருந்தன்மையுமான இப்பேச்சுகள் எவ்வளவு இனிக்கும்!

குறிப்புரை: கொங்கு முதிர் - பூந்தாது நிறைந்த. 'அணில் பல் அன்ன' என்பதற்கு அணிலின் பல்லைப்போன்ற முள்ளையுடைய என்று பொருள் செய்து, முண்டகம் என்பதனோடு சேர்த்துக்கொள்ளவேண்டும். முண்டகத்து - கழிமுள்ளிச் செடியையும். மணி - நீலமணி. கேழ் - நிறம். மா நீர் - பெரிய நீர்; அதாவது, பரந்த நீர். கடற்கரை நிலமாகிய நெய்தல் நிலத்தின் தலைவனுக்குச் 'சேர்ப்பன்' என்பது பெயராதலால், 'சேர்ப்ப' என்று விளித்துக்கொண்டாள். இம்மை - இப் பிறப்பு. மாறி - நீங்கி. மறுமை - மறு பிறப்பு; மறு பிறப்பாக வரும்

பல பிறவிகளை இங்கே உணர்த்திற்று. நீ ஆகியர் என் கணவனை - நீ ஆகுக என் கணவன். 'கணவனை' என்பதிலுள்ள 'ஐ' என் பதை, பொருள் செய்யும்போது விட்டுவிட வேண்டும்; அதற்கு இங்கே பொருளில்லை; அதனைச் சாரியை என்று கூறுவர். அது கட்டுரைச் சுவைக்காகச் சும்மா வந்துநின்றது. நின் நெஞ்சு நேர்பவள் - நின் நெஞ்சம் பொருந்துவோள். நெஞ்சு - அன்பு.

## அன்னையும் அத்தனும்

[மகளிர் உள்ளம் மிக்க பொறுமை வாய்ந்தது. கணவர்க்கு வாழ்க் கைத்துணையாயிருக்கும் அவ் வுள்ளம் கணவர் நலங்களையே நாடும் இயல்பு அமைந்தது. அதனால், அவ் வுளத்தில் தோன் றும் அழகுணர்வுகள் பலவாகும்; அவற்றுள், மெய்ம்மை வழுவாது இணக்கமாக ஒழுகும் உயர்ந்த உணர்வும் ஒன் ருகும்.]

நன்னலம் தொலைய நலம்மிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையல்; அவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ, தோழி!
புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே.

—குறுந்தொகை, ௯௩.

இணக்கமாக உரையாடுதலும், அவ் விணக்கத்திலும் மெய்க் கருத்துக்களை நிறுவிப் பேசுதலும் அழகு பெற்ற நாகரிக அறிவுக்கே இயல்வதாகும். அந்த ஆற்றல் மெய் யொழுக்கமுடைய மெல்லியலாரிடம் நன்ருக அரும்பி மலர்ந்து காட்சியளிக்கின்றது.

ஏதோ காரணமாகக் கணவன் தன் இனிய இல்லக் கிழத்தியை விட்டுச் சிலகாலம் பிரிந்திருந்தான். பிரிவைப் பொறுப்பதைவிட மகளிர்க்குப் பெரிய இன்னல் வேறு இல்லை. கணவன் உடனிருக்கும்போது மனைவியின் பெண்மையுள்ளம் நன்ருக மலர்ந்து வீறுபெறும். உடம் பும் அழகு மிகும். வாழ்நாளும் நீளும். நெடுநாள் பிரிவு நேர்ந்தால், அப் பெண்மை நலம் தொலைய, உடம்பு நல மும் சாய்ந்து, இன்னுயிர் கழியினும் கழியும். இங்ஙனம் தேய்ந்த உயிரோடு நடைப்பிணம்போல வாழ்நாள்

செலுத்துவது மங்கலமாக இருக்குமா? கணவனுக்கு வாழ்க்கைத் துணைவியாகிய மனைவி இந் நிலையில் இருந்தால், கணவனுக்குதான் வாழ்வு என்ன இருக்கின்றது! தனக்கு உள்ளத்தின் மலர்வும் உடம்பின் எழிலுங் கெட்டு வாழ்நாள் தேய்வதேயாயினும், அன்புள்ள நன்மனைவியின் உள்ளம் தன் இன்னல் கருதுவதன்று; கணவனுக்கு வாழ்க்கை மலர்ச்சி குறைகின்றதே என்பதுதான் அதன் கவலையெல்லாம். ஊடுருவிய அப் பேரன்பினால் மனைவிக்குக் கணவன்பால் ஒரு புலவி தோன்றும்.

மனைவி அங்ஙனம் புலந்திருந்த நேரத்தில், வெளியிற் பிரிந்திருந்த கணவன் திரும்பி வந்தான். தோழி, தலைவியினிடம் அவன் வரவினைக் கூறி அவன் செய்த கொடுமைக்கு வெகுண்டு பேசி, ஆயினும் புலவி தீர்ந்து ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று அவனைப்பற்றிப் பரிந்தும் பேசினாள். தலைவி அப்போது தோழியை நோக்கிச் சொன்ன சில சொற்கள், கல்லுங் கனியத்தக்கபடி அவ்வளவு உருக்கமான மெய்யிணக்க நல்லுரைகளாயிருக்கின்றன. தோழி வெகுண்டு பேசியதையும் மறுத்து, அவள் புலவி தீர்க என்றதையும் மறுத்து, ஆனால், தலைவனை ஏற்றுக்கொள்க என்றதைத் தலைவி வல்லமையாக உடன்படும் அழகு, நினைக்க நினைக்க மிக்க இன்பம் பயப்பதாயிருக்கின்றது. தலைவியின் சொற்கள் இப் பாடலில் வருகின்றன.

"தோழீ! தலைவன் பிரிவினால் நமது சிறந்த பெண்மைக்குணம் தொலைய அதனால் மேனிநலம் மிகக் குறைந்து நமது இனிய உயிர் நீங்கிப்போவதேயானாலும், அவரைக் குறைகூற வேண்டாம். அவர் நமக்குத் தாயும் தந்தையுமாக அல்லவா இருக்கின்றார்! கணவன் மனைவியர்க்கு உரிய அன்பில்லாத நிலையில் அவரிடம் எனக்கு ஊடல் ஏது?"

"ஆதலால், அதுபற்றி யாருங் கவலையுறுதல் வேண்டாம். அவர் தாராளமாக வரலாம்; தாயை எப்படி நீக்க முடியும்? தந்தைக்கு அடங்காதொழுகுதல் எங்ஙனம் இயலும்?

“முன்பெல்லாம் கணவன் என்ற முறையில் இன்றியமையாதவராயிருந்தார்; இப்போது அந்த அன்பு நீங்கித் தாய் தந்தையரைப்போல அவர் நடந்துகொள்வதனால் இப்போதும் அவர் இன்றியமையாதவராகவே இருக்கின்றார்” என்று கணவன் பிரிவினாற் பதமடைந்து வந்த தனது பெரிய உள்ளத்தினால் தலைவி உருகி மொழிந்தாள்.

கணவன் மனைவியர் உள்ளத்திற் காமம் நீங்கினால், அவர் ஒருவருக்கொருவர் பெற்றோரைப்போலவும், மக்களைப்போலவும் பரிந்தொழுகும் உள்ளப்பாங்கு பெறுவர் என்னும் உண்மையும், இச் செய்யுளில் நன்றாக நிழலாடுகின்றது.

பிரிவைப் பொறுத்திருத்தல் என்னுங் கற்பொழுக்கமாகிய இம் முல்லை யொழுக்கத்தை இவ்வளவு உள்ளம் அள்ளும்படி பாடி வழங்கிய புலவர் அள்ளூர் நன்முல்லையார் என்பவர். அவர் பெயர் இப் பாட்டின் பொருண் முறைமையோடு ஒத்து நோக்க எவ்வளவு பொருத்தமுடையதாக இருக்கின்றது! அவர் பெயருக்கேற்ப இப் பாடல் அமைந்ததா, இப் பாடலுக்கேற்ப அவர் பெயர் அமைந்ததா என்னும் ஆராய்ச்சி யார்க்கும் இயல்பாகவே உண்டாகுமன்றோ!

குறிப்புரை: நல் நலம் - சிறந்த நலம்; பெண்மை நலம்; அதாவது, பெண்மைப் பண்பு. தொலைய - மலர்ச்சி அற்றுப் போக; அற்றுப்போக அதனால் என்று காரணக் கருத்தில் உரைத்துக்கொள்ளவேண்டும். நலம் - மேனி அழகு; இது ‘நன்னலம்’ என்று கூறப்படாமையால், முன்போல் பண்பழகை உணர்த்தாமல் உடம்பழகை உணர்த்திற்று. சாஅய் - சாய்ந்து; குறைந்து; கழியினும் - நீங்கினாலும். உரையல் - சொல்லாதே; குறை சொல்லவேண்டாம். அத்தன் - தந்தை. புலவியஃது - புலவியது; அதாவது, புலவி என்னும் பொருட்டு. புலவி - ஊடல். எவன் - எது? புலவியஃது எவனோ - ஊடல் எது. அன்பிலங்கடை, அன்பு இல் அம் கடை; இவற்றுள், அம் என்பது சாரியை; அதற்குப் பொருளில்லை; மற்றவை ‘அன்பு இல்லாத விடத்து’ என்று பொருள் பெறும். அன்பு என்றது, இங்கே காதலாகிய காமம். (௬0)

## அழகும் புகழும்

[சிலர் உடம்பினல் அழகாயிருப்பர்: ஆனல் புகழ்க்குரிய செய லில்லாதவராயிருப்பர். உலகமோ, கண்ணுக்கு அழகில்லாதவ ராயினும் புகழ்க்குரிய செயல் வாய்ந்தவரையே மதிக்கின்றது. என்ன வியப்பு! அழகினும் புகழ் அழியாததும் இனியதுமா யிருப்பதன்றோ அதற்குக் காரணம்!]

நீயே, அமர்காணின் அமர்கடந்துஅவர்
படைவிலக்கி எதிர்நிற்றலின்
வாஅள் வாய்த்த வடுஆழ் யாக்கையொடு
கேள்விக்கு இனியை, கட்குஇன் னயே;
அவரே, நின்காணின் புறங்கொடுத்தலின்
ஊறுஅறியா மெய்யாக்கையொடு
கண்ணுக்கு இனியர், செவிக்குஇன் னரே;
அதனல், நீயும்ஒன்று இனியை; அவரும்ஒன்று
[இனியர்;
ஒவ்வா யாவுள மற்றே? வெல்போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி
நின்னை வியக்கும்இவ் வுலகம்அஃது
என்னே பெரும? உரைத்திசின் எமக்கே.

—புறநானூறு, கசஎ.

கருத்துக்களை மகிழ்ச்சி தோன்றச் சொல்லுதல், சிறந்த இலக்கிய அழகாகும். இதனைப் 'பொருட்சுவை' என்று சொல்லுவார்கள். பிற்காலத்தார் வகுத்துக் கொண்ட அணியிலக்கண வகைகள் இதனுள் அடங்கும்.

ஏனதி திருக்கிள்ளி என்பானை நோக்கி மதுரைக் குமரனர் என்பவர், "கிள்ளி! நீ பகைவர்க்குப் புறங் கொடாமல் அவரை எதிர்த்து அழிப்பவன்" என்று தமது கருத்தைப் புலப்படுத்த விரும்பினர். அதனை அவர் பொருட்சுவை தோன்றச் சொல்லும்முறை பின்வருமாறு:

"நீதான், போரைக் கண்டால் உடனே எதிர்த்துப் பகைவர் படையை விலக்கி நிற்றலால் எதிரிகளின் படைகள் தாக்கிய வடு அழுந்திய யாக்கையோடு கண்ணுக்கு அழகின்றி, புகழால் கேள்விக்கு இனியனாய் இருக்கின்றனே. ஆனால், நின் பகைவரோ நின்னைக் கண்டவுடனே அஞ்சி விலகிப் புண் அறியாத உடம்புடனே புறங்கொடுத்து ஓடுதலால் கண்ணுக்கு இனியராய், கேள்விக்குக் கொடியராகின்றனர். நினைத்துப் பார்க்குமிடத்து, இதனால், நீயும் ஒன்று இனியை அவரும் ஒன்று இனியர். நுங்கட்குள் ஒவ்வாதன யாவையுள்ளன? அவ்வாறிருந்தும், கிள்ளி! நின்னை மதிக்கும் இவ்வுலகம்; பெரும! ஏனோ அது? எமக்குக் கூறுவாய்." என்பது.

பழித்தது போலப் புகழ்தலும் புகழ்ந்தது போலப் பழித்தலுமான பொருட்சுவை இச் செய்யுளில் எவ்வளவு நன்றாக அமைந்திருக்கின்றது!

குறிப்புரை: அமர் - போர். கடந்து - எதிர்த்து வென்று. வாய்த்த - தப்பாது தாக்கிய. நின் - நின்னை. ஊறு அறியா மெய் - புண் அறியாத வடிவோடு கூடிய; மெய் - வடிவு. ஒவ்வா- நுமக்குள் ஒவ்வாதன. யா - யாவை. மற்று ஏ, அசை; பொருளில்லை. திருந்து அடி - திருந்திய அடியினையும். கடு மான் - விரைந்தோடும் குதிரையினையுமுடைய. கிள்ளி - கிள்ளியே! என்னோ - ஏனோ? உரைத்தி - உரைப்பாய். இசின், அசை; பொருளில்லை. (சுக)

### இறப்பும் இருப்பும்

[வாழ்க்கையில், செய்வதற்குரிய நற்செயல்களைத் தக்கவாறு செய்து விளங்கியவர், ஒருகால் இறந்துபோயினும், அவர் இறந்தவராகவே எண்ணப்படுவதில்லை. என்றும் இருந்து விளங்குவோராகவே தோற்றுவர். அதியமான் நெடுமான் அஞ்சி அத்தகையோன் என்கின்றார் ஔவையார்.]

எறிபுனக் குறவன் குறையல் அன்ன
கரிபுற விறகின் ஈம ஒள் அழல்

குறுகினும் குறுகுக ; குறுகாது சென்று
விசும்புற நீளினும் நீள்க ; பசுங்கதிர்த்
திங்கள் அன்ன வெண்குடை
ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே.

—புறநானூறு, உகக.

அதியமான் நெடுமானஞ்சி புகழ்பட வாழ்ந்த வீரன்; வள்ளல்; மன்னன். அவன் இறந்தபோது அவனுக்கு உற்ற நண்பராயிருந்த ஔவையார், தமது இரங்கலுரையை ஒரு தனிச்சுவை தோன்ற இச் செய்யுளிற் புலப்படுத்தியிருக்கின்றார். அது:

"அவன் இறந்தவனாகவே இருக்கட்டும்; அவன் உடம்பில் ஈமத் தீ சிறுகவேனும் பற்றட்டும்; பெருகவேனும் பற்றிச் சாம்பராக்கட்டும்; அதியனாவது மாயவாவது; அவன் மாயவேயில்லை. அவன் இங்கே என்றும் நிலைத்திருக்கின்றான்" என்பது.

இக் கருத்தினையுடைய பாட்டின் பொருள் வருமாறு:

'தூறுகள் வெட்டிச் சுடப்பட்ட கொல்லை நிலம்; நிலத்தில் வேர்க்கட்டைகள் கரிந்து கிடக்கின்றன. அந் நிலத்துக் குறவன் அவ் வேர்க்கட்டைகளைத் துண்டந் துண்டமாகத் தறித்தெடுத்துக்கொள்கின்றான். அதியமான் நெடுமான் அஞ்சியின் உடம்பைச் சுடலையிற் சுடுவதற்காக அடுக்கப்பட்டுள்ள விறகுகள், அக் குறவன் தறித்துக்கொண்ட துண்டங்களைப்போல, கரிந்த மேற்புறத்தை யுடையனவாயிருக்கின்றன. அவ் விறகு அடுக்கின் ஒள்ளிய அழல் சிறுகி எரியினும் எரியட்டும்; சிறுகாது பெருகி வானளாவக் கொழுந்தோடி நீண்டு எரியினும் எரியட்டும்; எப்படியாவது எரிந்து அதியன் உடம்பைச் சாம்பராக்கட்டும். குளிர்ந்த கதிர்விரிக்குந் திங்களைப் போன்ற வெண்கொற்றக் குடையையுடைய அதியன்—ஒள்ளிய ஞாயிற்றை யொத்த அதியன்—புகழ்கள் இவ் வுலகத்தில் ஒருகாலும் மாயமாட்டா. அதியன் இங்கே என்றும் விளங்கியிருப்பன்' என்பது.

அதியமான் வீறுகளை ஔவையார் புலப்படுத்தும் முறைகள் ஒரு தனித்திறம் படைத்துள்ளன !

குறிப்புரை : எறி - வெட்டப்பட்ட; வெட்டிச் சுடப்பட்ட என்றபடி. கரிபுற விறகின் என்னும் பொருளுக்கேற்றபடி உவமையினுங் கரிபுறம் என்பது பெறும்பொருட்டு இவ்வாறு 'சுடப்பட்ட' என்று உரைத்துக்கொள்ளப்பட்டது. குறையல் - குறைக்கப்பட்ட துண்டு; தறித்துக்கொள்ளப்பட்ட துண்டு. விறகின் ஈமம் - விறகால் அடுக்கப்பட்ட ஈமம். ஈமம் என்றது, பிணஞ் சுடுதற்கு அடுக்கும் விறகடுக்கு. குறுகினும் - சிறுகினும். விசும்புற - வானளாவ. நீளினும் - கொழுந்தோடி எரியினும். 'வெண்குடை' என்றது, அதியனின் அருளையும், 'ஒண் ஞாயிறு' என்றது அவன் வீரத்தையும் உணர்த்தும். அவன் செய்த பல வேறுபட்ட புகழ்க்குரிய செயல்களை நினைந்து 'புகழ் மாயா' என்று பன்மையிற் கூறினார். உடம்பு அழியினும் புகழ் அழியாதாகலின், அதியன் இறந்தும் இறவாதவனே என்று அவன் பெருமை விளக்கியது இச் செய்யுள். (கஉ)

## நம்பிக்கை

[விரும்பத் தகுந்ததை 'நம்பிக்கைக்குரியது' என்பர். நிலைத்த பண்புகளால், விருப்பம் உண்டாகின்றது. ஆதலால், மக்கட்குக் கவர்ச்சியாவது, அந் நிலைத்த நடையே. அதனால், செல்வாக்கும் உண்டாதலின், அது 'நாணயம்' எனவுங் கூறப்படும். வாழ்க்கைக்கு ஒளி இந் நம்பிக்கை !]

பொய்த்தற் குரியனோ, பொய்த்தற் குரியனோ?
அஞ்சல்ஓம் பென்றோரைப் பொய்த்தற் குரி
[யனோ?
குன்றகல் நன்னாடன் வாய்மையில் பொய்
திங்களுள் தீத்தோன்றி யற்று. [தோன்றின்,

—கலித்தொகை, சக : உக - ச.

நம்பிக்கை, சொத்தினும் மேலானது. நிலைத்த பயன் விளைப்பது. ஏனென்றால், நிலைத்த குணங்களின்மேலே தான் நம்பிக்கை உண்டாகின்றது. அப் பண்புகள் அத்தனையும் காசுதாம். அதனால், 'நாணயம்' என்றும் அவற்றிற்குப் பெயர் உண்டு.

'நம்புதல்' என்பதற்கு 'விரும்புதல்' என்பது பொருள். 'நம்பிக்கை' என்பதும் அது. இங்ஙனம் விரும்பத்தக்க பொருளாக உலகத்தில் விளங்குதல் எவ்வளவு மேலானது! இக் கருத்தினால், மக்கட்குக் 'கவர்ச்சி' என்பது, நம்பிக்கைக்கு ஏதுவான பண்புகளிலிருந்தே உண்டாகின்றதென்பது இனிது விளங்குமன்றோ?

நிலைத்த பண்புகளே, நடைகளே, இங்ஙனங் கவர்ச்சிக்கு ஏதுவாவன என்னுங் கூர்ந்த கருத்தினை எடுத்துக் காட்டுதற்கு இச் செய்யுளில் ஓர் அரிய அழகிய உவமை கூறப்படுகின்றது.

"தலைவன் வஞ்சித்தற்குரியனோ? வஞ்சித்தற்குரியனோ? அல்லன்; அல்லன். அவன் வாய்மையில் பொய் தோன்றின் திங்களுள் தீத்தோன்றியதுபோலும்!"

திங்களுக்குக் குளிர்ந்த பண்பு இயல்பானது; நிலையானது. அதிலிருந்து ஒருகாலுந் தீயானது தோன்றாது. அதனைத் திண்ணமாய் நம்பலாம். அங்ஙனமே, தலைவனுக்கு வாய்மை இயல்பானது; நிலையானது. அதிலிருந்து ஒருகாலும் பொய்மை தோன்றாது. அதனையும் உறுதியாக நம்பலாம்.

நிலைத்த நடை, உலகுக்கு எவ்வளவு நம்பிக்கையையும், வாழ்க்கைக்கு எவ்வளவு ஒளியையுங் கவர்ச்சியையுந் தருகின்றது! கவர்ச்சிக்குரிய அடிப்படைக் காரணங்களைக் கருதாதும் பொருள்செய்யாதும் ஒழுகுவதனால் யாது பயன்?

**குறிப்புரை:** பொய்த்தற்குரியனோ என்னும் வினா அல்லன் என்னும் விடையினை உட்கொண்டுள்ளது. பொய்த்தல் - இங்கே, வஞ்சித்தல். அஞ்சல் ஓம்பு - அஞ்சுதலைப் பாதுகாத்துக்கொள்; அதாவது, அஞ்சுதலை நீக்கு என்பது கருத்து. என்றுரை - என்று உறுதி கொடுக்கப்பட்டவரை. குன்று அகல் - மலை அகன்ற. நன்னுடன் வாய்மையில் - நன்னுடனது வாய்மையில். குன்று அகல் நன்னுடன் என்றது, மலைநாடன் என்பதற்கு. (௬௩)

### தகுதி

[நம்பினோரைக் கைவிடாமை, ஆளும் இயல்பு, நன்மக்களைக் காணுங்கால் இயல்பாகத் தோன்றும் அடக்கம், இல்லோர் வறுமையைத் தணியச் செய்தல் முதலியன தகுதியின்பால் அடங்கும்; ஒருவர்க்குப் பெருந்தன்மையும், வலிமையும், அடக்கமும், ஆற்றலும் இவைபோல்வனவாம்.]

ஒன்று, [கம்
இரப்பான்போல் எளிவந்துஞ் சொல்லும் உல
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடை [யன்;
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடை [யன்;
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க [யன்;
வல்லான் போல்வதோர் வன்மையும் உடை
அன்னன் ஒருவன்றன் ஆண்டகை விட்டென் [னைச்
சொல்லுஞ்சொல் கேட்டீ சுடரிழாய் பன் [மாணும்;
நின்னின்றி அமையலேன் யான்என்னும் [அவனாயின்,
அன்னான்சொல் நம்புண்டல் யார்க்கும்இங் [கரிதாயின்,
என்னுற்ற பிறர்க்கும்ஆங் குளகொல்லோ [நறுநுதால்!

—கலித்தொகை, சஎ: க - கக.

ஏதோ குறிப்போடு தோழி தலைவியினிடம் வந்தாள். தோழியின் முகம், அவள் ஓர் இடர்ப்பாடான நிலைமையில் தவிக்கும் உண்மையை எடுத்துக்காட்டியது. பார்த்த தலைவி சற்றுத் துணுக்குற்று,

"என்ன தோழீ! என்ன நேர்ந்தது? ஏன் இந்த வருத்தம்?" என்று பரிவோடு கேட்டாள்.

தோழி: "அம்மே! என் வருத்தங்கள் பிறர்க்கும் உண்டோ?"

தலைவி: "அவை என்னவென்றுதானே கேட்கிறேன்"

தோ: "சொன்னால், முழுதுந் தீர்ந்துவிடும்!"

த: "சொல்லாவிட்டால், நீயே வைத்துக்கொள்; உடனே தீர்ந்துவிடும்!"

தோ: "உன்னிடம் சொன்னால், முழுதுந் தீர்ந்து விடும் என்றுதானே சொல்லுகிறேன். ஒருவர் என்னிடம் வந்து 'நின் உதவியில்லாமல் யான் உயிர் வாழேன்' என்கிறார். யார்பொருட்டு என் உதவியை விரும்புகின்றாரோ அவர்களைச் சேர்ந்தவர்கள் அவர் சொல்லில் நம்பிக்கை வைப்பது அரிதாயிருக்கின்றது. என் இடர்ப்பாடான நிலைமை எப்படி யிருக்கின்றது?"

த: "இடர்ப்பாடில்லாமல் செய்துகொள்வது."

தோ: "எப்படி?"

த: "எப்படி, என்ன? உண்மையையே சொல்லுவது. உங்கள் சொல்லை மற்றவர்கள் நம்புவது அரிதாயிருக்கின்றது என்று அவரிடம் சொல்லிவிட்டால் தீர்ந்தது."

தோ: "அதற்கு அவர் என் உதவியை நாடுவானேன்? 'நின் உதவியில்லாமல் நான் உயிர்வாழ்வது அரிதாயிருக்கின்றது' என்று நம்மை அவ்வளவு நம்பிக்கையாய் நாடுகின்றவரைக் கைவிடுவதுதான் முறையோ? மேலும், அப்படி நாம் எளிதாகச் சொல்லிக் கழித்துவிடத் தக்கவராகவும் அவர் எனக்குத் தோன்றவில்லை.

த: "பின்னை எப்படித் தோற்றுகின்றார்?"

தோ: "உலகத்தையே ஆட்சி செய்யும் அரசனைப் போலும் ஆற்றல் உடையவராகத் தோற்றுகின்றார்."

த: "அப்புறம்?"

தோ: "மெய்யறிவு நூல் வல்ல ஞானாசிரியரை வழி பட்டு அம் மெய் யறிவுப்பொருள் உணர்ந்த அறவோன் றன் அடக்கத்தைப்போல நன்மக்களைக் கண்டால் தோன் றும் அடக்கமும் உடையவராகத் தோற்றுகின்றார்."

த: "முன்னால் அரசியலில் வல்லவர் என்றாய்; இப் போது அறவியலிலும் வல்லவரென்கின்றாய்; இன்னும் என்னென்ன சொல்ல விருப்பமோ சொல்லு."

தோ: அறவியலில் அதுமட்டுமன்று: வறிஞர்களின் இடர்ப்பாடறிந்து அவர்கள் வறுமைத் துன்பத்தைத் தணிக்கவல்ல வன்மையும் உள்ளவராகத் தோற்றுகின்றார். உள்ளதைக் கூறுவதில் என் விருப்பம் என்ன இருக்கின் றது? உள்ளபடியே, எனக்கு ஒருவகையில் விருப்ப முண்டாகின்றது. இத்தனை பெருந்தன்மையும் பெருநிலை களும் உடைய அவர், தம்முடைய ஆண்டன்மையை விட்டு பிறர் கண்டு இகழுமளவுக்கும் எளியார்போலத் தோன்றி, என்னிடம் ஒன்று இரந்துகேட்பாரைப்போல் சில சொல் லிக்கொள்ளுதலே என் உள்ளத்தைப் பெரிதும் உருகச் செய்கின்றது. அவர் சொல்லுஞ் சொல்லாற் பல காரி யங்கள் மாட்சிமைப்படுமென்றுந் தோற்றுகின்றது."

த: "உனக்கு எல்லாந் தோற்றும். அப்படியானால், யார்பொருட்டு உன் உதவியை வேண்டுகின்றாரோ அவர் களை அவர் சொல்லில் நம்பிக்கை வைக்கும்படி நீ முயற்சி செய்யவேண்டியதுதான். அதனாலேதான் உனது தவிப்பு இனித் தீரவேண்டும்."

தோ: "அதனாலேதான், முதலில் நீ அவர் சொல்லில் கருத்தூன்ற வேண்டியிருக்கின்றது."

தலைவிக்கு உடனே அசைவு பிறந்தது. தோழியின் இடர்ப்பாட்டை நீக்குதலன்றி இனி அவள் செய்யத் தக்கது யாதுண்டு?

இச் செய்யுட் பகுதியில், நம்பினோரைக் கைவிடல் இயலாத பெருந்தன்மையும், வலிமை இன்னது அடக்கம்

இன்னது ஆற்றல் இன்னது என்னும் உண்மையும், அத்தனை அருமையுடையோரும் அன்பினால் எளியராம் இயல்பும் நன்கு விளங்குகின்றன.

**குறிப்புரை:** எளிவந்தும் - எளிமை தோன்ற வந்தும். சொல்லும் - சொல்லுவான். மதுகையும் - வலிமையும். நல்லார் கண் - நன்மக்களிடத்தில். புன்கண் - துன்பத்தை; வறுமைத் துன்பத்தை. ஈகையின் - தனது கொடையினால். அன்னான் - அத்தகையோன். என்னை - என்னை நோக்கி. கேட்டு - கேட்பானாக. சுடர் இழாய் - விளங்குகின்ற அணிகலன்களையுடைய தலைவீ! பன் மாணும் - பல காரியங்களும் மாட்சிமைப்படும். அமையலேன் - அமைதியோடு இரேன்; என்றது, உயிர் வாழ்ந்திரேன் என்றபடி. என்னும் அவனாயின் என்பதை அவன் என்னுமாயின் என்று மாற்றி உரைத்துக்கொள்ளவேண்டும். நம்புண்டல் - நம்புதல். என் உற்ற - என்னைச் சேர்ந்த துன்பங்கள். ஆங்கு - அசை. உள கொல்லோ - உளவோ? இல்லை என்றபடி; அத்தனை மிகுதியான வருத்தங்கள் என்பது கருத்து. நறு நுதால் - மணங்கமழும் நெற்றியையுடைய தலைவீ! (கஙச)

## கொடையும் வென்றியும்

[அருட்குணத்தால் கொடையும், வீரத்தால் வென்றியும் ஒருவனுக்கு உண்டாகின்றன. நல்லுணர்வை வளர்த்துக்கொள்வதற்கு அருளும், மாசு நீக்கிக்கொள்வதற்கு வீரமும் பயன்படும். ஆதலால், இந்த இரண்டு இயல்புகளும் வாழ்க்கைக்கு இன்றியமையாதன. இவற்றின் விளக்கமே நாகரிகம் என்பர்.]

மன்றப் பலவின் மாச்சினை மந்தி
இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்
பாடின் றெண்கண் கனிசெத் தடிப்பின்
அன்னச் சேவல் மாறெழுந் தாலும்
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்,
ஆடுமகள் குறுகி னல்லது,
பீடுகெழு மன்னர் குறுகலோ அரிதே.

—புறநானூறு, கஉஅ.

நல்ல உணர்வுகள் எங்கும் பரவுவதற்கு ஒவ்வொரு வரும் இருவகைப் பண்புகள் உடையவர்களாக இருக்க வேண்டும். அவை அருளும் வீரமும் ஆகும். அருளால் பிறர்க்கு உதவியாக வாழலாம். வீரத்தால், தீயோர்க்கு இடங்கொடாமல் வாழலாம்.

மாசு நீக்குதல் வீரம்; நன்மை யோம்புதல் அருள். வீரம் ஆண்மைப் பண்பு; அருள் பெண்மைப் பண்பு. இரண்டுமின்றி வாழ்க்கையில்லை. ஆதலால், ஆண் பெண் சேர்க்கை அதாவது வீரம் அருள் இணைப்பு உலகத்தில் இன்றியமையாதனவா யிருக்கின்றன.

பண்டைக்காலத்து மக்கள் இவ் விருவகைப் பண்பு களினுஞ் சிறந்திருந்தனர்; அதனால், அவர்கள் ஆற்றலோடு விளங்கினர். அங்ஙனம் விளங்கிய காலமே சங்க காலம் என்பது. நாகரிகக் கொழுந்தோடிய காலம் அது. எங்கு வீரமும் அருளும் இல்லையோ அங்கு நாகரிகம் இல்லை. அருளுள்ளவர்கள் கொடைக்குணம் உடையவர்களாயிருப் பர். வீரமுடையவர்கள் வெற்றியுடையவர்களாய் விளங்கு வர்.

கடையெழு வள்ளல்களில் ஒருவனான பொதியில் மலையில் விளங்கிய ஆய் என்பவன், இங்ஙனங் கொடையும் வென்றியுமாகிய நாகரிகம் உடையவன் என்று உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் இச் செய்யுளிற் பாராட்டிக் கூற விரும்பினார். அவர் கூறியமுறை அழகாக இருக் கின்றது.

'ஆய்' விளங்குகின்ற பொதியில் மலையில் பரிசில் விரும் பும் ஆடுமகளாகிய விறலி குறுகலாமேயல்லது, போர் விரும்பும் அயல் மன்னர் குறுகல் அரிது' என்பது அவர் பாராட்டுரை. பகைவரை எதிர்ப்பான்; பரிசிலரை எதிர் கொள்வான் என்பது இதனாற் பெறப்பட்டது. பகை வரை எதிர்ப்பதற்கு வீரம் வேண்டும்; பரிசிலரை எதிர் கொள்வதற்குக் கொடை வேண்டும். ஆய் அருளும் வீர மும் பொருந்திய நனிநாகரிகன் என்பதை முடமோசியார் இங்ஙனம் விளக்குகின்றார்.

மேலும், 'ஆய்' வள்ளலின் மலைவளத்தைப்பற்றி ஆசிரியர் எடுத்துரைக்கும் பகுதி மிக்க கவர்ச்சியுடையதாயிருக்கின்றது. ஆடுமகளைப்போன்ற பரிசிலர் அணுகுதற்குப் பொதியில் மலையின் இயற்கை யமைப்பு மிக்க ஏற்புடையதா யிருக்கின்றது என்பது அவர் கருத்து.

மலையில், மக்கள் பலரும் நடமாடுதற்குரிய பொதுவிடங்கள் உண்டு. அங்கே, பெரிய பலாமரங்கள் ஓங்கி வளர்ந்திருக்கும். அவற்றின் கிளைகளில் ஆயினிடம் வருகின்ற கூத்தர் விறலியரைப்போன்ற இரவலர் தம்முடைய மத்தளமாகிய இசைக்கருவியை மாட்டித் தொங்கவிட்டிருப்பது வழக்கம். அங்கே கிளைகளில் இருக்கும் மந்திகள் அந்த மத்தளங்களைப் பலாப் பழமென்றே கருதி அவற்றின் முனைப்பக்கத்தைத் தட்டிப்பார்க்கும். ஆனால், அவை உண்மையில் மத்தளமாதலால், மந்திகள் தட்டினவுடன் ஓசை இனிய அவற்றின் தெளிந்த முனைப்பக்கங்களிலிருந்து. சிறந்த இன்னொலிகள் எழும். இங்ஙனம் மத்தளத்தின் இன்னிசை எழவே, அங்கே அருகில் இருந்த ஆண் அன்னங்கள் தம் குரலெடுத்து அதற்கு வேறாகப் பாடத் தொடங்கும். இங்ஙனம் இசையும் பாட்டும் நடைபெறுகின்ற இயல்பமைந்தது பொதியில் மலை! இனி, அங்கே தேவையுள்ளது யாது? கூத்து. ஆதலால், ஆடுமகள் அங்கே குறுகவேண்டிய கட்டாயம் உள்ளது. பகை மன்னர்க்கு அங்கே என்ன வேலை? முடமோசியார் இங்ஙனம் இச் செய்யுளை வல்லாங்கு அமைத்திருத்தல் அறிந்து இன்புறுதற்குரியது!

குறிப்புரை: மன்றப் பலவின் - பொதுவிடத்திலிருந்த பலாமரத்தின். மா சினை - பெரிய கிளைகளில். நாற்றிய - தொங்கவிட்ட. விசி கூடு முழவின் - வார்ப்பிணிப்புப் பொருந்திய மத்தளத்தின். பாடு இன் - ஓசை இனிய. தெண் கண் - தெளிந்த முனைப்பக்கத்தை. கனி செத்து - பலாப்பழம் என்று கருதி. அடிப்பின் - அடித்தவிடத்து. அன்னச்சேவல் - ஆண் அன்னம். மாறு - அவ் வொலிக்கு வேறாக. எழுந்து - கிளர்ச்சியுற்று. ஆலும் - பாட்டு இசைக்கின்ற; 'ஆலும் பொதியில்' என்று சேர்த்துப் பொருள் அமைத்துக்கொள்ள வேண்டும். கழல்

தொடி ஆய் - கழல இட்ட வீரவளையையுடைய ஆய் வள்ளலின். மழை - மேகம். பொதியில் - பொதியில் மலையில். பீடு கெழு மன்னர் - பெருமிதம் பொருந்திய பகைமன்னர். (கூடு)

## உரையும் பாட்டும் உடையோர்

[மக்கள், மலர்களைப்போல விளங்கவேண்டும். தழைகளைப்போலப் பயனின்றி மாய்தலாகாது. மலர்களுள்ளும், புகழும் பாட்டு முடைய சிறப்பு மலர்களாகப் பொலிதல் வேண்டும். அத் தகையோரே இம்மையிலும் மறுமையிலும் விளக்கமும் இன்பமும் உடையவர்களாய்த் திகழ்வர்.]

சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
நூற்றிதழ் அலரின் நிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை எண்ணுங் காலை,
உரையும் பாட்டும் உடையோர் சிலரே;
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே;
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான வூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்தெனக்
கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி!

—புறநானூறு, உஎ : க - கO.

"தாமரை மலர்களைப்போல அழகிய மக்கள் பலர் உலகில் தோன்றுகின்றனர். நூறு இதழ்களையுடைய பெரிய மலர்களைப்போலவும் பெருமக்கள் தோன்றுகின்றார்கள். ஒன்றற்கொன்று ஏற்றத் தாழ்வே இல்லாத ஒத்த பெருமலர்களின் வரிசையைப்போல வேற்றுமையில்லாத சிறந்த மன்னர் குடியினரும் தோன்றுகின்றனர். தத்தம் அரச வீறு தோன்றவும் வீற்றிருக்கின்றனர்.

ஆனால், மலரன்ன அம் மக்களுள், புகழும் பாட்டும் உடையோர் சிலராகவே இருக்கின்றனர். உலகத்தில் மக்களுள், பொதுவாக மலர்களைப் போலவும் விளங்காமல்

தாமரையின் இலைகளைப்போற் பயனின்றி மாய்ந்தோரே பலர்.

எம் அரசே, சேட்சென்னி, நலங்கிள்ளி! மலரைப் போல் விளங்குவோருள்ளும், புலவராற் பாடப்படும் புகழுடையோர், தம் நல்வினையை முடித்துக்கொண்டு புண்ணிய வுலகுக்குச் செல்லும் வானவூர்தியைப் பொருந்துவர் என்று அறிந்தோர் சொல்லுவரெனயான் கேட்பதுண்டு.''

இங்ஙனம் சோழன் நலங்கிள்ளியை நோக்கி முதுகண்ணன் சாத்தனார், புகழும் பாட்டுமுடையோரது சிறப்பை நன்கு விளக்கியிருக்கின்றார். வாளா பிறந்து தழையாய் மாய்வதனால் என்ன பயன்! மலராகவும் சிறந்த மலராகவுமன்றோ விளங்கி மாண்புறல் வேண்டும்!

**குறிப்புரை:** தாமரை - தாமரைப் பூ. பயந்த - இங்கே பூத்த என்னும் பொருட்டு. ஒண் கேழ் - ஒளி மிக்க நிறம் அமைந்த. அலரின் நிரை - மலர்களின் வரிசையை. விழுத்திணை - சிறந்த குடியில். உரையும் என்றது பொதுமக்கள் கூறும் புகழ். பாட்டு என்றது, புலவர்கள் பாராட்டி இயற்றும் செய்யுள்; இரண்டும் உடையோர் என்றது, இரண்டுக்கும் ஏற்ற பண்பினையுடையோர் என்றபடி. மரை இலை - தாமரையிலை. மாய்ந்திசினோர் - மாய்ந்தோர். புலவர் பாடும் - புலவராற் பாடப்படும். விசும்பின் - வானத்தின்; புண்ணிய வுலகுக்குச் செல்லும். வலவன் ஏவா - பாகனால் செலுத்தப்படாத; 'தம் செய்வினை முடித்து எய்துப என்ப எனக் கேட்பல்' என்று உரைத்துக் கொள்ளவேண்டும். செய்வினை - செய்யத்தக்க நல்வினையையும். எய்துப - பொருந்துவர். கேட்பல் - கேட்பேன்; கேட்பதுண்டு என்றபடி. நீயும் அங்ஙனம் புலவராற் பாடப்படும் புகழுடையையாதல் வேண்டும் என்பது கருத்து. புலவர் என்போர், மெய்யுணர்வுடைய ஞானியராதலின், அவராற் பாடப்படுவோர் தக்க மெய்ந்நலங்களை யுடையவராகவே இருக்கவேண்டும். அத்தகையோர் புண்ணிய வுலகுக்குச் செல்வது இயல்பு. புலவர்கள் மகிழ்ந்து பாடுவராயின், அவ் வியல்பு பின்னுஞ் சிறந்து எளிதாய் இனிதாய்ப் பெரும்பயன் நல்குமாகலின், புலவராற் பாடப் பெறுதல் சிறப்பாக எடுத்துக்காட்டப்பட்டது. (௬௬)

## இயற்கை மணம்

[நறுமணத்தைச் செயற்கையாகப் பண்டங்களின் சேர்க்கையால் மக்கள் அடைந்து மகிழ்கின்றனர். மேனியில், இயற்கையாகவே மணம் கமழ்தலும் உண்டு. இயற்கை மணம், மெல்லிய உயிருணர்வுகளிலிருந்து உண்டாகின்றன. மகளிரிடம் இது சிறந்து தோன்றக் காணலாம்.]

*கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!*
*காமஞ் செப்பாது கண்டது மொழிமோ;*
*பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்*
*செறிஎயிற்று அரிவை கூந்தலின்*
*நறியவும் உளவோநீ அறியும் பூவே.*

—குறுந்தொகை, உ.

"பூக்களில் தேன் தேர்ந்து உண்ணும் வாழ்க்கையையுடைய அழகிய சிறகுகள் அமைந்த தும்பியே! என் விருப்பத்தைக் கூறுமல் நீ கண்கூடாகக் கண்டதைச் சொல்வாய்; என்னேடு பழகுதல் பொருந்திய நட்பினையும், மயிலின் தன்மையாகிய சாயலினையும், நெருங்கிய பற்களையும் உடைய இப் பெண்மணியின் கூந்தலைப்போல நறுமணமுடைய பூக்களும் இருக்கின்றனவா நீ அறியும் பூக்களுள்?" என்பது இச் செய்யுளின் பொருள்.

அன்பும் பெண்மை யிலக்கணமும் அமைந்த மாதர்களின் கூந்தல் உலகத்திலுள்ள மலர்கள் எல்லாவற்றையும் விட மிக்க மணமுடையது என்பது இதிலிருந்து வெளிப்படுகின்றது. எல்லா மலர்களையும் விட மணமுடையது என்பதனுல், 'மலர்களின் சேர்க்கையால் வந்த மணமன்று இக் கூந்தல் மணம் என்பது பெறப்படும். இதனுல், கூந்தலுக்கு மணம் இயற்கையானது என்பது தெளியப்படும். அம் மணம், பெண்மையும் நேயமும் என்னும் உயிருணர்விலிருந்து உண்டாவது என்னும் அரும் பேருண்மையும், 'நட்பின் மயிலியல் அரிவை கூந்தலின்' என்று இச் செய்யுளில் விளக்கங் காட்டி வருவதனுல் உணர்ந்துகொள்ளப்படும்.

உயிருணர்வைப் பெருக்கினால் உலகத்திற் பெறக் கூடாத நலன்கள் யாவை யுள்ளன ?

**குறிப்புரை :** கொங்கு - தேன். தேர் - தேர்ந்து; தேடி. தும்பி - வண்டு. காமம் - விரும்பியதை. மொழிமோ என்ப தில் மோ, முன்னிலையில் வருகின்ற அசை. பயிலியது - பழகுதல். நட்பின் - நட்பினையும். மயில் இயல் - மயிலின் இயலினையும். செறி எயிற்று - நெருங்கிய பற்களையும் உடைய. அரிவை - இப் பெண்ணின். கூந்தலின் - கூந்தலைப்போல. நறியவும் - நறு மணமிக்க பூக்களும். நீ அறியும் பூ - நீ அறியும் பூக்களுள். தலைவியின் நலம் பாராட்டுந் தலைவன் வண்டினை விளித்துக் கூறு வதுபோல் இச் செய்யுள் இறையனாரால் அருளிச்செய்யப் பெற்றது. (௬௭)

## வாய்மையின் ஆற்றல்

[எந் நிலையிலும் மெய்யே உரைத்தல், யார்க்கும் உயர்ந்த நிலையை உலகத்தில் உறுதியாய் நிறுவும். அசைக்க முடியாத நம்பிக் கையை உண்டாக்கும். கண்கூடாக நேரிற்காணுங் காட்சி யினும் அந் நம்பிக்கை, ஆற்றல் வாய்ந்ததாய் உயரும். பொய் வழங்காமை அத்துணை உறுதிக்கு இடஞ்செய்கின்றது.]

வண்டுபடத் ததைந்த கொடிஇணர் இடையிடுபு
பொன்செய் புனைஇழை கட்டிய மகளிர்
கதுப்பின் தோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானம் கார்எனக் கூறினும்,
யானோ தேறேன்;அவர் பொய்வழங் கலரே.

—குறுந்தொகை, ௨௧.

பழைய காலத்தில் கணவன் மனைவியர்க்குள் எவ்வளவு மிகுதியான மெய்ம்மையும் நம்பிக்கையும் இருந்தன என்ப தற்கு இச் செய்யுள் தக்க சான்றாய் விளங்குகின்றது.

கணவன், கார்ப் பருவத்தின் தொடக்கத்தில் வருவ தாகக்கூறி, வெளிநாட்டுக்கு வினைமேற் சென்றான். அவன் வருந் துணையும் மனைவியை ஆற்றுவித்துக்கொண்டிருப்

பது தோழியின் பொறுப்பு. கார்ப் பருவம் வருந்துணை யும் ஆற்றுவித்தாள். கார்ப்பருவமும் வந்துவிட்டது. பொன்னுற்செய்த அழகிய தலையணிகலன்களை அணிந்து கொண்ட மகளிரின் கூந்தலைப்போலக் காட்டிற் கொன்றை மரங்கள் கார்ப்பெயலால் இலை தழைத்து இடையிடையே நீண்ட பூங்கொத்துக்களையும் விட்டு வண்டுகள் விழும்படி மலர்ந்துவிட்டன. 'கார்ப்பருவம் வந்துவிட்டதே, இனித் தலைவியை ஆற்றுவிக்க முடியுமோ' என்று தோழிக்குக் கவலை உண்டாயிற்று. தோழிக்கு இக் கவலையிருப்பது தலைவிக்குத் தெரிந்தது. போன தலைவனோ இன்னும் வந்திலன்.

"கானத்தின் தோற்றம் கார்ப்பருவம் வந்துவிட்ட தாகப் புலப்படுத்தினும், நான் தெளியேன். ஏனென்றால், என் தலைவர் பொய் சொல்லமாட்டார்! அவரோ, கார்ப் பருவத்தின் தொடக்கத்தில் வருவதாகக் கூறியிருக்கின் றார். உண்மையில் இது கார்ப்பருவமானால், அவர் இதற் குள் வந்திருக்கவேண்டுமே." என்று ஒருநாள் தோழிக் குத் தலைவி சொல்லுகின்றாள்! நேரிற் கண்கூடாகக் காணுங் காட்சியினும், கணவன் வாய்மொழியில் அவ ளுக்கு எவ்வளவு மிகுதியான நம்பிக்கை!

**குறிப்புரை:** பட - விரும்பி வீழ. ததைந்த - மலர்ந்த. கொடி இணர் - நீட்சியான பூங்கொத்துக்களை இடையிட்டுக் கொண்டு. கட்டிய - அணிந்துகொண்ட. கதுப்பின் - கூந் தலைப்போல. 'இடையிடுபு தோன்றும் கொன்றை' என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். பொன்னுலான தலை யணிகலன் பொன்னிறமான பூங்கொத்துக்களுக்கும் இலை கூந்தலுக்கும் உவமை. கரு நிறமான கூந்தலில் பொன் அணிகலன் இடை யிட்டுத்தோன்றுவதுபோல, கொன்றை மரங்களிற் கரும் பச்சை நிறமான தழைகளினிடையே பொன்னிறமான பூங்கொத்துக்கள் மலர்ந்து இடையிட்டுத் தோன்றுதல் கூறப்பட்டது. கொன் றைக் கானம் - அத்தகைய கொன்றை மரங்களையுடைய காடு. கூறினும் - தன்னிடத்து மலர்ந்துள்ள மலர்களின் அடை யாளங்களைக்கொண்டு புலப்படுத்தினும். தேறேன் - தெளி யேன்.

(கூஅ)

## சான்றாண்மையிற் கருத்து

[நாட்டில் எந் நிலையிலும் சான்றாண்மையை மக்கள் மிகவும் மதித்து வந்தனர். மகளிர் இம் மேன்மையில் மிக்க கருத்துடையரா யிருந்தனர். பிறரைப் பழித்துரைப்பதில், 'சான்றோரல்லர்' என்று உரைப்பதே பெரிய பழிப்புரையாகவும், பெருந் தன்மையான ஒரே பழிப்புரையாகவுங் கருதப்பட்டது. ஔவைப்பிராட்டியார் இச் செய்யுளில் அதனை நன்கு விளக்கி யிருக்கின்றார்.]

உள்ளின் உள்ளம் வேமே; உள்ளா
திருப்பின்எம் அளவைத் தன்றே; வருத்தி
வான்தோய்வு அற்றே காமம்;
சான்றோர் அல்லர்யாம் மரீஇ யோரே.

—குறுந்தொகை, ௧0௨.

"தலைவரை நினைத்தால் உள்ளம் வேகும்; நினையா திருக்கலாம் என்றால் அது, எமது ஆற்றலுக்கு உட்பட்ட தாக இல்லை. பிரிந்திருக்கமாட்டாமையாகிய காமவேட் கையோ, வானத்தை அளவியதுபோலப் பெரிதாயுள்ளது. யாம் மருவிய தலைவர் சான்றோர் அல்லர்!"

தலைவனை நெடுங்காலமாகப் பிரிந்திருக்குந் தலைவி, ஆற்றாமையால் மனநொந்து சொன்ன நோவுரை இது. பெருந்திறல் வாய்ந்த ஔவையார் இச் செய்யுளின் ஆசிரி யர். கருத்தின் ஒட்பத்திற்குச் சொல்ல வேண்டுமா?

'சான்றோர் அல்லர்' என்று ஒரு தலைவி சொல்லு வதைக் கருதினால், அக் காலத்தில் மக்கள் சான்றாண்மைப் பண்பில் எவ்வளவு மதிப்பும் கருத்தும் உடையவர்களாய் இருந்திருக்கிறார்கள் என்பது விளங்குகின்றது. அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் ஐந் தும் சான்றாண்மைக்குரிய பண்புகள் என்பர். பிரிந்து நெடுங்காலமாகியும் தலைவன் வாராமையால் அன்பில்லை என்றும், தான் தகுதியாக ஒழுகிக்கொள்ளவேண்டுமென் னுங் கருத்தில்லாமையால் நாணமில்லை என்றும், விருந்

தாற்றுதலாகிய உலகியலை மறந்தமையால் ஒப்புரவில்லை என்றும், தனது துயரத்தைச் சற்றுங் கருதாமையால் கண்ணோட்டமில்லை என்றும், இன்ன காலத்தில் வருகிறேன் என்று சொன்ன சொற்படி நடந்துகொள்ளாமையால் வாய்மை யில்லை என்றுந் துணிந்து தலைவி 'சான்றோர் அல்லர்' என்று கூறினாள். வாழ்க்கையில் மக்கள் எவ்வளவு கருத்தாக நடந்துகொள்ளவேண்டி யிருக்கின்றதென்பது இதனால் தெரிகின்றது. தன் தலைவர் சான்றோராய் விளங்கவேண்டும் என்னும் அன்பன்றோ தலைவியை இங்ஙனம் சொல்லச் செய்தது!

குறிப்புரை : உள்ளின் - நினைத்தால். வேம் - வேகும். எம் அளவைத்து அன்று - எமது ஆற்றலின் அளவையுடையது அன்று ; அதனினும் மீறியது என்பது கருத்து. 'வான் தோய்வு அற்று காமம்' என்றது, வேட்கை அவ்வளவு பரந்து மிகுகின்றது என்பதற்கு வந்தது. மரீஇயோர் - மருவியவர். (௬௧)

## நாகரிகச் செவ்வி

[பிறர்க்கு ஆதரவாயிருத்தல், இயற்கை மணங் கமழ்தல், கவினுங் கலையும் விளங்குதல், பொருள் முற்றி அறவழியே இன்ப நுகர்தல் முதலியன இச் செய்யுளில் நாகரிகப் பகுதிகளாக வருகின்றன. இச் செய்யுள் நக்கீரனார் இயற்றியது. இக் கருத்துக்களை நாகரிகத்தின் கொழுந்தென்று கூறலாம்.]

கேள்கே டூன்றவும் கிளைஞர் ஆரவும்
கேளல் கேளிர் கெழீஇனர் ஒழுகவும்
ஆள்வினைக் கெதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து
ஆரங் கண்ணி அடுபோர்ச் சோழர்
அறங்கெழு நல்லவை உறந்தை யன்ன
பெறலரு நன்கலன் எய்தி நாடும்
செயலருஞ் செய்வினை முற்றின மாயின்,
அரண்பல கடந்த முரண்கொள் தானை
வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங் காடி நாறு நறுநுதல்

நீளிருங் கூந்தல் மாஅ யோளொடு
வரைகுயின் றன்ன வான்றோய் நெடுநகர்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
நிவந்த பள்ளி நெடுஞ்சுடர் விளக்கத்து
நலங்கேழ் ஆகம் பூண்வடுப் பொறிப்ப
முயங்குகம் சென்மோ நெஞ்சே!

—அகநானூறு, கூ: க - கசு.

உடம்பில் இயற்கையாக மணம் வீசுதல் மிக்க நாகரிக முடையவர்க்கே இயலும். ஒரு சிறந்த நகரத்திற்கு நிக ரான மதிப்புடைய அணிகலன்களை உடையராயிருப்பதும் நனி நாகரிகர்க்கே வாய்ப்பதாகும். மேலும், உறவினர் களின் தளர்ச்சியை நீக்குதல், அவர்கட்குச் சார்பாயுள்ள வர்கள் பலரும் நுகரும்படி வாழ்க்கை நடத்துதல், அய லாரும் அன்புரிமை கொண்டு நண்பராகும்படி உதவியாய் நடந்துகொள்ளுதல் முதலியனவும் சிறந்த நாகரிக மக்கட் கன்றிப் பொதுவாக எல்லார்க்கும் இயல்வன அல்ல. இந்தச் செய்யுளில் இச் சிறந்த நாகரிக நிலைகளெல்லாம் வருகின்றன.

வெளியிற்சென்று தான் எடுத்த காரியத்தை நிறை வேற்றிக்கொண்டு திரும்புந் தலைமகன், "நெஞ்சே, உறவின ரின் தளர்ச்சி நீக்குதல் முதலியவற்றிற்காகச் சோழமன்ன ரின் தலைநகரமாகிய உறையூருக்கு நிகரான அரிய மதிப் புடைய அணிகலன்களை எய்தி, எடுத்த செயலை நாம் முடித்துவிட்டனம்; இனி விரைவில் மதுரை நகரத்துக் கடைத்தெருவின் மணத்தைப்போல் மணக்கும் நெற்றியை யுடைய கிழத்தியைக் கூடுவோம் வா" என்று வழியில் தனது நெஞ்சை நோக்கிச் சொல்லுவதாக இச் செய்யுள் வருகின்றது.

பண்டைக்காலத்துத் தமிழ் மக்களின் நாகரிகச் செவ்வியானது, சங்க நூல்களில் எத்தனையோ வகையாக மின்னி இங்ஙனம் விளங்கிக்கொண்டிருக்கின்றது.

குறிப்புரை : கேள் - கேளிரின் ; உறவினரின் ; நண்பரும் இவருள் அடங்குவர். கேடு - தளர்ச்சியை. ஊன்றவும் - தாங்கவும். கிளைஞர் - அவர்கள் வாயிலாகக் கிளைத்துச் சூழ்ந் துள்ள சுற்றத்தார். ஆரவும் - உண்ணவும். கேள் அல் கேளிர் - உறவல்லாத உறவினர் ; என்றது, புது உறவினராய் வரும் அய லார். கெழீஇனர் ஒழுகவும் - அன்புரிமை யுடையோராய் நேயங் கொண்டு ஒழுகவும் ; இங்ஙனம் ஊன்றவும் ஆரவும் ஒழுகவும் பொருளீட்டிச் செயல் முடித்தனம் என்று கருத்துத்தொடர்ந்து செல்கின்றது. பொருளீட்டி என்பதை ஆசிரியர் அணிகலன் எய்தி என்று கூறுகின்றார். ஆள்வினைக்கு - முயற்சிக்கு. எதிரிய - ஏற்ற. புகல் சிறந்து - விருப்பம் மிகுந்து. 'ஆரம் கண்ணி அடு போர்ச் சோழர் அறம் கெழு நல் அவை உறந்தை அன்ன பெறல் அரு நன்கலம் எய்தி' என்றது, உறையூரை ஒத்த பெறற் கரிய அணிகலன்களைப் பெற்று என்பதற்கு வந்தது. ஆத்தி மாலையையுடைய, கொல்லும் போர்ப்படைகளையுடைய சோழ வேந்தர்களின் அறம் விளங்கும் உயர்ந்த அரசவை பொருந்திய உறையூர் என்று உறையூரும் இவ் வரிகளிற் சிறப்பிக்கப்பட்டிருக் கின்றது. ஆர் கண்ணி, ஆரம் கண்ணி என வந்தது. அம், சாரியை. அவை - அரசவை. உறந்தை என்றது, உறையூர் என்பதன் திரிபு. நாடும் - பலரும் விரும்புகின்ற. முற்றினம் - முடித்தனம். ஆயின் - ஆதலின். கூடல் - மதுரை நகரின். அது பாண்டியனது கூடல் என்பதற்கு வழுதி கூடல் என்றார். வழுதி - பாண்டியன். அவன் எப்படிப்பட்டவன் என்பதற்கு 'அரண் பல கடந்த முரண் கொள் தானை வாடா வேம்பின் வழுதி' என்றார். பகைவர் மதில்கள் பலவற்றை வென்ற மாறு பாடுமிக்க படைகளையுடைய, வாடாத வேப்பமாலையினை அணிந்த பாண்டியனது என்பது அதன் பொருள். நாள் அங்காடி - காலைக் கடை ; காலைக் கடைத் தெருவினைப்போல. நாறும் நறு நுதல் - மணக்கும் நல்ல நெற்றியினையும், நீள் இரு கூந்தல் - நீண்ட கரிய கூந்தலினையும் உடைய, மாயோளொடு - அழகிய மாமை நிறத்தாளான கிழத்தியுடன். 'மாயோளொடு முயங்குகம் சென்மோ நெஞ்சே' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். முயங்குகம் சென்மோ - முயங்குவோம் வருவாயாக. வரை குயின்றன்ன வான் தோய் நெடுநகர் - மலையைக் குடைந்து இயற்றினலொத்த வானம் அளாவிய உயர்ந்த மாளிகையில். நுரை முகந்தன்ன மென் பூஞ் சேக்கை நிவந்த பள்ளி - பால் நுரையை முகந்தமைத்தாற்போன்ற மெல்லிய மலர் அணை

பொருந்திய உயர்வினால் ஓங்கிய கட்டிலில். நெடு சுடர் விளக்கத்து - பெரிய விளக்கின் ஒளியில். 'நகரில் பள்ளியில் விளக்கத்தில் மாயோளோடு முயங்குகம் சென்மோ நெஞ்சே' என்றபடி.

## சிறந்த ஆட்சி முறை

[பகைவர்களால் நாட்டுக்கு நலிவு இல்லாதபடி அவன் வீரத்தோடும் அருளோடும் ஆட்சி செய்தல் வேண்டும். நாட்டில் அமைதியும், கவலையில்லாமல் குடிமக்கள் கடமைகள் செய்தலும் அப்போதுதான் நிகழும் நாகரிகமும் இன்பமும் முகிழ்க்கும் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்னும் மன்னன் முதலியோர் பண்டு இங்ஙனம் நாகரிகச் செவ்வியில் விளங்கினோராவர்.]

சோறுபடுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது, [ரே ;
பிறிதுதெறல் அறியார்நின் நிழல்வாழ் வோ
திருவில் அல்லது கொலைவில் அறியார் ;
நாஞ்சில் அல்லது படையும் அறியார் ,
திறன்அறி வயவரொடு தெவ்வர் தேயஅப்
பிறர்மண் உண்ணும் செம்மல்! நின் நாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே.

—புறநானூறு, ௨0 : எ - கரு.

குடிமக்கள் கவலையின்றித் தத்தம் கடமைகளைச் செய்து நலம்பெறல் வேண்டும். அதற்கு, நாட்டில் அமைதி வேண்டும். அதற்குப், பகையரசரால் தொல்லை விளையாத படி அரசன் செங்கோலோச்சுதல் வேண்டும்.

அரசன், தன்னை மதியாத வேற்றரசரை வீரத்தால் அஞ்சச் செய்தல் வேண்டும். தன்னை மதிக்கும் நட்பரசரை மேன்மேலுந் தனது அளியினால் தழுவிச் செல்லுதல் வேண்டும். இங்ஙனம், அரசன் வீரமும் அருளும் உடையனாய் ஆட்சி செய்தால், நாட்டில் எஞ்ஞான்றும் அமைதி நிலைபெற்றிருக்கும்.

அப்போது, குடிமக்கள், சோறு சமைக்கும் அடுக்களைத் தீயும், செஞ்ஞாயிற்றின் வெப்பமுமன்றி வேறு வெம்மையை அறியார். ஒரோவொருகால் வானத்தில் தோன்றும் இந்திரவில்லைக் காண்டலல்லது வேறு கொலை வில்லினைக் காணார். கலப்பை என்னும் படையினையல்லது வேறு படையினை அறியார் இங்ஙனம் அமைதி நிலை பெற்றிருக்கும் நாட்டில், கருவுற்றிருக்கும் மகளிர் ஏதேனும் வேட்கையினால் விரும்பி உண்ணுதலல்லது, பகைவர் வந்து நாட்டை உண்ணுதலென்பது இல்லை.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்னும் முடிமன்னன், இங்ஙனம் பகைவர் உண்ணுத அரிய மண்ணினையுடையவன் என்று குறுங்கோழியூர் கிழார் என்னும் புலவர் இச் செய்யுளிற் கூறியிருக்கின்றார். ஆனால், தன்னைச் சினப்பித்தால் மாந்தரஞ்சேரல் இரும்பொறை சும்மா இரான். போரின் கூறுபாடுகளை அறியும் தம் வீரரோடு பகைமன்னர் அழியும்படி அவர் நாட்டினை உடனே கவர்ந்து கொள்வன்; அத்தகைய தலைமைப்பாடுடையவன் அவன். 'பிறர் மண் உண்ணும் செம்மல்' என்று புலவர், சேரலை விளித்துக் கூறுவதனால் இது தெரிகின்றது.

ஆட்சி முறையில் இத்தகைய அரசர்களைத் தமிழ் நாடு முன்பு பெற்றிருந்தது என்று நினைக்கும்போதும், குடிமக்கள் அவர்கள் நிழலில் இவ்வளவு பேரமைதியில் விளங்கினார்கள் என்று அறியும்போதும் மிக்க பெருமிதம் உண்டாகின்றது.

குறிப்புரை : படுக்கும் - சமைக்கும். தெறல் - வெம்மை. திரு வில் - இந்திர வில். நாஞ்சில் - கலப்பை. படை - வேல், வாள் முதலிய படைகள். திறன் - கூறுபாடு; போர்ச் செயலின் கூறுபாடு. வயவர் - வீரர். திறமையான இவ் வீரரோடு பகைவர் அழியும்படி என்பது கருத்து. தெவ்வர் - பகை மன்னர். தேய - அழியும்படி. அப் பிறர் - அப் பகைவராகிய பிறருடைய. மண் என்றது இங்கே நாடு. உண்ணும் - கவர்ந்து தனதாக்கிக் கொள்ளும். செம்மல் - செம்மலே; தலைமைப்பாடு உடை

யோனே. வயவு உறு மகளிர் - கருவினால், உண்ணும் பண்டங்களில் வேட்கை உறும் மகளிர். வேட்டு - ஏதொன்றையும் விரும்பி. அரு - அப் பகைவராற் பெறுதற்கு அரிய. மண்ணினையே - நாட்டினையுடையோயே. (எக)

மாதர் செவ்வி

[மாதர் செவ்வி, மிகவும் மெல்லிது. நுகர்வின்பின், அது மீண்டும் பிறர்க்குப் பயன்படாது. அந் நுட்பமறிந்து அம் மென்மை, ஆடவரால் ஏற்றபடி போற்றப்பெறுதல் வேண்டும். அங்ஙனம் போற்றினால், அது பிறவி முழுதும் மணமுடையதாயிருக்கும். அதனால், இருதிறத்தார்க்கும் பிறர்க்கும் நலங்கள் விளையும்.]

இனியான்,
உண்ணலும் உண்ணேன் வாழலும் வாழேன்;
தோள்நலம் உண்டு துறக்கப் பட்டோர்
வேள்நீர் உண்ட குடையோ ரன்னர்;
நல்குநர் புரிந்து நலன்உணப் பட்டோர்
அல்குநர் போகிய ஊரோ ரன்னர்;
கூடினர் புரிந்து குணன்உணப் பட்டோர்
சூடினர் இட்ட பூவோ ரன்னர்.

—கலித்தொகை, உ௫ : ௬ - க௩.

ஆடவரும் மாதரும் மேற்கொள்ளும் காதற்கூட்டம், பிறவி முழுதும் அமைந்துநிற்பதற்குரியது. மாதரது நிலை மிக மெல்லியது. அவர் செவ்வி ஒரு தடவை பயன் பட்டால், அப் பயன்கொண்டே அது முற்றும் மணம் பெறுவதற்குரியது.

தலைவன் ஏதோ காரியமாக வெளிநாடுகட்குப் பிரிய இருக்கின்றான் என்பது தெரிந்து பிரிவு பொறாமல் தலைவி அவனுக்குச் சொல்வது வருமாறு :

"இனி யான் உண்ணலும் இயலாது; வாழலும் இயலாது. கணவராற் கூடிக் கைவிடப்பட்ட மகளிர், வேட்கையால் நீர் உண்டபின் எறிந்துவிடும் ஓலைப்பட்டையை

ஒப்பர்; கணவரால் விரும்பி அருள் செய்து அழகு நுகர்ந்து விடப்பட்ட மகளிர், குடியிருப்போர் நீங்கிவிட்ட பாழ் ஊரை ஒப்பர்; கணவரால் விரும்பிக் கூடி உள்ளம் நுகர்ந்துவிடப்பட்ட மகளிர், சூடிக் கழித்துவிட்ட மலரை ஒப்பர்."

இங்ஙனந் தலைவி கண்ணுங் கண்ணீருமாக உள்ளங் கலங்கித் தலைவனுக்குக் கூறுகின்றாள். கேட்க மிக்க உருக்கமாயிருக்கின்றது. மாதரின் மெல்லிய நிலைதான் எவ்வளவு விழிப்பாய்ப் பாதுகாத்து ஒழுகுவதற்குரியதாய் இருக்கின்றது! அத்தகையோர் உள்ளம் வருந்த ஒழுகுவது எவ்வளவு தீது?

இதைக்கேட்ட தலைவனது நெஞ்சம் எவ்வளவு எரி கண்ட இழுதாக உருகியிருக்கும்!

**குறிப்புரை:** உண்ணலும் உண்ணேன் - திண்ணமாக உண்ணேன். தோள் நலம் - உடம்பின் மென்மையை. உண்டு - அணைத்து நுகர்ந்து. துறக்கப்பட்டோர் - பிரிவினால் தனித்திருக்கும்படி நீக்கி விடப்பட்ட மகளிர். வேள் - நீர் வேட்கையால். குடை - பனை ஓலைப் பட்டையை. அன்னர் - ஒப்பர். நல்குநர் புரிந்து - புரிந்து நல்குநரால்; விரும்பி அன்பு செய்யுங் கணவரால். நலன் உணப்பட்டோர் - அழகு நுகர்ந்து விடப்பட்ட மகளிர். அல்குநர் - தங்கியிருக்குங் குடிமக்கள். போகிய - நீங்கிய. ஊர் அன்னர் - ஊரை ஒப்பர். கூடினர் புரிந்து - விரும்பிக் கூடின கணவரால். சூடினர் இட்ட - சூடிக்கொண்டவர் கழித்துவிட்ட. குடையோர், ஊரோர், பூவோர் என்பவற்றில் ஓர், அசை. (எஉ)

## தாய்மை யுள்ளம்

[பலர், இவ் வுள்ளம் படைத்தவர்; தோழி அத்தகையவள்; அவள் அறிவும் கனிவும் விரகும் பெரிது பாராட்டற்பாலன. அருஞ் செயல்களை நிறைவேற்றுதற்கு இவ் வுள்ளம் இன்றியமையாதது. அதற்கு அவள் இணையற்ற எடுத்துக்காட்டாவள்.]

அறியாய், வாழி தோழி! பொறிவரிப்
பூநுதல் யானையொடு புலிபொரக் குழைந்த

குருதிச் செங்களம் புலவற வேங்கை
உருகெழு நாற்றம் குளவியொடு விலங்கும்
மாமலை நாடனொடு மறுவின் றாகிய
காமம் கலந்த காதல் உண்டெனின்
நன்றுமன் அதுநீ நாடாய் கூறுதி ;
நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யானல தில்லைஇவ் வுலகத் தானே ;
இன்னுயி ரன்ன நின்னொடுஞ் சூழாது
முளையணி மூங்கிலின் கிளையொடு பொலிந்த
பெரும்பெயர் எந்தை அருங்கடி நீவிச்
செய்துபின் இரங்கா வினையொடு
மெய்யல பெரும்பழி எய்தி னேனே.

—அகநானூறு, உகூஅ.

அகப்பொரு ளிலக்கியங்களில், தோழியின் பங்கே பெரியது ; மிகு திறம் வாய்ந்தது ; பெரும் பயன் நிரம்பியது. அறிவோடு கூடிய அவள் உழைப்பும் உண்மையும் நன்றியும் அன்பும் தன்னல இழப்பும் தலைவியின் வாழ்க்கையில் என்ஞான்றும் மறப்பரியன. எதையும் அவள் தனது காரியமாய் அக்கறையோடு செய்வாள் ; தலைவன் றலைவியர் நலத்திற்காகத் தன்னையே பழித்துக்கொள்வதுஞ் செய்வள். பழியைத் தான் ஏற்றுக்கொண்டு மகிழ்வை அவர்க்கு வழங்குவள். சுருங்கக் கூறின், தோழியே தலைவிக்குத் தாயும் ஆவள் எனலாம்.

தலைவன் தலைவியரிடையே காதற்களவு நடைபெறுகின்றது ; தோழியை அறியாமலே நடைபெறுகின்றது. ஆனால், தோழியாலேதான் அது நிறைவேறுதல் வேண்டும். தோழி, இந் நிகழ்ச்சியை உணர்ந்துகொண்டாள் ; பின்பு, தலைவனும் அவளைக் குறை முடிக்கும்படி நயந்து வேண்டினான். தோழியோ தாய் அனைய உள்ளமுடையவள் ; தன்னிடம் தலைவியே வந்து உணர்த்தும் வரையில் அவள்

காத்திருக்கவில்லை. தானே முன்னின்று அதனை நிறை வேற்றிவைக்கத் துணிந்தாள். தலைவனுக்கும் குறை முடிப்பதாகக் கூறினள். ஆனால், தலைவியோ ஒன்றும் அறியாதவள்போல இருக்கின்றாள்; தோழியே ஏதேனும் பேசினால், எதிர்மறுத்தும் ஏதேனுங் கூறுகின்றாள். தோழியின் கட்டாயத்திற்காகத் தான் இசைவதாக இது நிறைவேறிவிடவேண்டும் என்பது தலைவியின் பிடி. எப்படியோ, நிறைவேறி அவர்கள் மகிழ்ச்சியாக இருந்தாற் போதும், பழி தனதாகவே இருக்கட்டும் என்று தோழியின் தாய்மை யுள்ளம் எண்ணுகின்றது. பின்வருமாறு கூறுகின்றாள் :

"அம்மே! மலைநாடனோடு அன்பார்ந்த களவு உளதாயின் அது, குற்றமில்லாததே. நீ ஏதேதோ சொல்லுகின்றாய்! என் உயிர்போன்ற நின்னுடன் கலந்து எண்ணுமல், தந்தையின் காவலையுங் கடந்து, செய்து பின் இரங்காத நல்ல முடிவையே நான் செய்திருக்கின்றேன்; அதனால் பழியை நான் ஏற்றுக்கொண்டேன்; ஆனால் உண்மையில் அது பழி அல்லாதது. அவ்வாறு செய்தும், நீ முரணுகின்றாய். நாணமும் நட்பும் இல்லாதவர்கள் உலகத்தில் என்னைவிட வேறு யார் இருக்கின்றார்கள்?"

இதைக்கேட்ட தலைவிக்கு உடனே நெஞ்சம் கரைந்துவிட்டது. இணங்குவதைத் தவிர வேறு என்ன செய்வாள்? தடையாயிருந்த நாணம் விலகியது! பின்பு, தலைவன் தலைவியர் மகிழ்ச்சிக்குச் சொல்லவேண்டுமா?

தோழி, தன் காரியம் நிறைவேறியதென்று எண்ணுவாளா? தலைவன், தன் காரியம் நிறைவேறியதென்று எண்ணுவானா? தலைவி, தன் காரியம் நிறைவேறியதென்று எண்ணுவாளா? அதனை யார் அறிவார்?

இந் நிறைவேற்றத்திற் கலந்து மகிழ்வோர் தலைவனும் தலைவியும். அனையதே தோழியின் மகிழ்ச்சியும்! என்ன வியப்பு!

**குறிப்புரை :** பொறி - புள்ளிகளும், வரி - வரிகளும் உடைய. பூ - பொலிவுற்ற. பொர - சண்டையிட அதனால். களம் - இடம். புலவு - புலால் நாற்றம். வேங்கை - வேங்கை மரத்தின். உரு கெழு - நிறமுள்ள மலரிற் பொருந்திய. குளவியொடு - காட்டு மல்லிகையின் மணத்தோடு கூடி. விலங்கும் - மாற்று கின்ற. அத்தகைய மலைப்பக்கங்களையுடைய நாடனொடு என்று தொடர்க. காமம் கலந்த காதல் - அன்பு கலந்த களவொழுக் கம். நன்று மன் - மிக நன்று. சூழாது - கலந்து எண்ணாமல். முளை அணி மூங்கிலின் - முளைகளால் அழகுபெற்ற மூங்கிற் புதரைப்போல. கிளையொடு - அடர்ந்த சுற்றங்களோடு. பெரும் பெயர் - பெரிய புகழையுடைய. கடி நீவி - காவலைக் கடந்து. வினையொடு - செயலோடு. மெய்யல - உண்மையல்லாத. 'நீ நாடாய் கூறுதி; பெரும்பழி எய்தினேன்; நாணும் நட்பும். இல்லோர் யானலதில்லை இவ் வுலகத்தில் என்று முடிக்க. இங் ஙனம், உருக்கத்தோடு தன் காரியம்போலத் தன்னையே நொந்து உரைத்துக்கொண்டாள் தோழி. (எரு)

## பெருந்தன்மை

[மக்கள் அடையவேண்டிய தலைமைப் பண்பு இது. பிறரை மேன்மையாகக் கருதும் தெய்வப் பண்பு. இதன் மெல்லிய சாயல்கள் இச் செய்யுளில் மிக இனிமையாகக் கிளைவாங்கித் தழைத்திருக்கின்றன. பண்டைத் தமிழரது காதற் கள வொழுக்கம் இப் பண்பின் அடிப்படைமீது எழுந்த அன்பு மாளிகையேயாகும்.

தேர்சேண் நீக்கித் தமியன் வந்துநும்
ஊர்யா தென்ன நணிநணி யொதுங்கி
முன்னாட் போகிய துறைவன் நெருநை
அகலிலை நாவல் உண்துறை உதிர்த்த
கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்
தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம்
அலவற் காட்டி நற்பாற் றிதுவென [னே;
நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோ
உதுக்காண் தோன்றும் தேரே; இன்றும்

நாம்எதிர் கொள்ளா மாயின் தான்அது
துணிகுவன் போலாம், நாணுமிக வுடையன் ;
வெண்மணல் நெடுங்கோட்டு மறைகோ,
அம்ம, தோழி! கூறுமதி நீயே.

—அகநானூறு, ௩௨௦.

பெருந்தகைமையின் அடையாளங்களுள் ஒன்று, தன்னைப்போற் பிறரையும் பெருந்தக்கோராகவே காண்பது. தம்மைத்தாம் எவரும் ஐயுறார் ; தருவிக் காண முயலார் ; கவடெனக் கருதார். பிறரையும் அவ்வாறே கருதுவர் மென்சாயலுடையோர் ; அதாவது, நாணமுடையோர் ; பெரியோர் என்க.

பேரன்புடன் தலைவியைக் காதலித்துத் தலைவியின் உடன்பாட்டிற்கு உதவியாயிருக்கும்படி தோழியையும் தலைவன் வேண்டிக்கொண்டான். தோழி ஒப்புக்கொண்டு தலைவியினிடம் முயற்சி மேற்கொண்டாள். சில நாள் ஆயின : ஒருநாள், பின்வருமாறு சொன்னாள் :

"அம்மே! தேரைத் தொலைவில் நிறுத்திவிட்டுத் தனியனாய் வந்து, 'உங்கள் ஊர் யாது?' என்று நம்மை வினவி, திரும்பிப் போகக் கால் வராமல் குறுகக் குறுக நடந்து முன்னொரு நாள் சென்றவன் நேற்றும் வந்தான். நாம் வழக்கமாக நீர் உண்ணுந் துறையின் அருகே நின்று எதையோ உருக்கமாகக் கவனித்துக்கொண்டிருந்தான். நானும் கவனித்தேன். கரையின் மரத்திலிருந்து நீர்த் துறையில் வீழ்ந்த கனிந்த நாவற்பழத்தை அது சிதையும்படி இழுத்துக்கொண்டு ஓர் ஆண் நண்டு, தாழைச் செடியின் வேருக்கு அடியிலுள்ள தனது வளைக்குச் சென்று தன் பெண் நண்டுக்கு அதனை அன்புடன் கொடுத்து ஊட்டிக்கொண்டிருந்தது. அவன், எனக்கு அதனைக் காட்டி, 'இது அதன் நல்வினை' என்று கூறி, நெடிது சிந்தித்த நெஞ்சுடன் திரும்பிச் சென்றான். எனக்கு மனம் தாளவில்லை. இன்றும் அதோ பார் அவன் தேர் தோன்று

கின்றது. இன்றைக்காவது நாம் அவனை எதிர்கொள்ளா விட்டால், நாம் உண்மையாகவே அவனை விரும்பவில்லை என்று அவன் எண்ணிவிடுவான்; அவன் நாணம் மிக உடையபெருந்தகையோன்; நாளை முதல், அதனால் வாரா மல் நின்றாலும் நின்றுவிடுவான். நான் அந்த மணல் மேட்டின் அப்பால் மறைந்துகொள்ளட்டுமா, கூறு.''

இதில் அவள் தகுதியாகக் காட்டிய காரணம் 'மிக்க அன்புடையன்' என்பதும், 'பெருந்தகையோன்' என்பது மாகும். மிக்க அன்பென்னுங் காரணம் காதல் கொள் வோர் அனைவர்க்கும் பொது; பெருந்தகையோன் என் னுங் காரணம் இத் தலைவனுக்குமட்டும் சிறப்பு; தலைவன் மாட்டு மதிப்புக்கொடுத்துத் தலைவியை உடனே இணங்கு வித்ததும் இச் சிறப்பியல்பேயாகும்.

தலைவி, நாணத்தால் உடனே இணங்காததுபோற் காலந்தாழ்த்தலேயன்றி, உண்மையிற் காதலுடையள். ஆயினும், எதிர்கொள்ளாமையைத் தலைவன் அப்படியே நம்பிவிடுவன் என்னுங் கருத்து, பிறரை ஐயுறாத அவனது பெருந்தன்மையைக் காட்டுகின்றது. நண்டின் நிகழ்ச்சி யைப் பார்த்து, 'அது, அதன் நல்வினை' என்று கருதி னனே யன்றி, தோழி முதலிய எவரையுங் குறைகூற வில்லை; இது பிறர்பாற் குற்றங்காணாத பெரும்பண்பைப் புலப்படுத்துகின்றது. நாணமுடையோனாதலால் மீண்டும் வராமலும் நிற்றல்கூடும் என்ற கருத்து, அவன் பிறரை ஊடுருவித்துருவி வற்புறுத்தாத மேன்மையை விளக்கும். இவைபோல்வனவெல்லாம் பெரும்போக்கின் சாயல்க ளாகும்.

பண்டைக்காலத்தில் நடைபெற்ற காதற்களவொழுக் கம் மிக்க பெருந்தன்மையின் அடிப்படைமீதே நடை பெற்றிருக்கும் உண்மை, இதனால் இனிது விளங்கும்.

**குறிப்புரை:** நணி நணி ஒதுங்கி - குறுகக் குறுக நடந்து. நெருநை - நேற்று. நாவல் - நாவல் மரம். உண் துறை - உண் ணும் நீர்த் துறையில். கவின் சிதைய - அதன் நலம் கெட.

வாங்கிக்கொண்டு - இடுக்கி இழுத்துக்கொண்டு. அளை - வளையி லுள்ள. வீழ் துணைக்கு - விரும்பப்படும் பெண் நண்டுக்கு. இடூஉம் - கொடுக்கும். அலவன் - நண்டை. நல் பாற்று இது - நல்ல பான்மையுடையது இது; அதாவது, இது நல்வினையுடை யது என்றபடி. என - என்று என்னிடம் சொல்லி. பெயர்ந் தோன் - நீங்கினான். உதுக் காண் - அதோ பார். அது - எதிர் கொள்ளாத அச் செயலை. துணிகுவன் - உண்மையென்று துணிந்துவிடுவான். போல், ஆம் அசைச்சொற்கள்; அவற்றிற் குப் பொருள் இல்லை. நாணு - நாணம். கோட்டு - மேட்டில். மறைகோ - மறைந்துகொள்வேனாக. கூறுமதி என்பதில், மதி, அசைச்சொல்; நீ கூறு என்று கொள்க. (எசு)

# 8. வரலாறு

## வாணிப வளம்

[தமிழ்நாட்டின் வாணிபம் பழைய காலத்திலேயே வளம் பெற் றிருந்தது. அக் காலத்துப் பண்டசாலை முற்றங்களைப்பற்றிப் பழைய நூல்களில் வருகின்ற குறிப்புக்களை நோக்கினால் மிக்க வியப்பு உண்டாகின்றது. கடற்கரைப் பண்டசாலை கள் அவற்றுட் சிறந்தன.]

வான்முகந்தநீர் மலைப்பொழியவும்
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவும்
மாரிபெய்யும் பருவம்போல,
நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்,
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்அணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி

மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூர்உகிர் ஞமலிக் கொடுந்தாள் ஏற்றை
ஏழகத் தகரோடு உகளும் முன்றில்.

—பட்டினப்பாலை, கஉகூ - கசக.

பண்டைத்தமிழ்நாட்டின் வாணிப வளமும் முயற்சியும் எவ்வளவு சிறப்பாக இருந்தன என்பதற்கு இச் செய்யுள் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இலங்குகின்றது. காவிரிப் பூம்பட்டினத்தின் கடற்கரையோரத்தில் அமைந்திருந்த பண்டசாலை முற்றம் ஓர் உயர்ந்த ஓவியக்காட்சியாக இதனுள் விளங்குகின்றது.

வெளிநாடுகளிலிருந்து கடலின்மேல் மரக்கலங்களில் வந்த பண்டங்கள் கரையில் இறக்குமதியாகின்றன. உள்நாடுகளிலிருந்து வண்டிகளில் வந்த பண்டங்கள் கடலில் ஏற்றுமதியாகின்றன. அறிவினால் எண்ணி முடிவு போகாத அவ்வளவு ஏராளமான பண்டங்கள் வெள்ளம்போலப் பெருகுகின்றன. கடலிலிருந்து கரைக்கும் கரையிலிருந்து கடலுக்கும் இங்ஙனம் பண்டங்கள் பெருகிப் பெருகிச் செல்லும் நிலைக்கு என்ன உவமை சொல்லி நிறைவடையலாம். நல்ல மழை காலத்தில், கடலிலிருந்து மேகம் முகந்த நீர் மலையில் ஏராளமாகப் பொழிதலையும், மலையிற் பொழிந்த மழை வெள்ளம் மீண்டு கடலிற் சேர்தலையும் வேண்டுமானால் ஒருவாறு சொல்லிப் பார்க்கலாம். அவ்வளவு வரம்பறியாமல் அவை வந்து வந்து ஈண்டுகின்றன.

கடலில் வந்தவற்றை உள்நாட்டிற்குச் செலுத்துமுன்னும் உள்நாட்டில் நிலத்தில் வந்தவற்றைக் கடலின்மேற் செலுத்துமுன்னும் அங்கே சோழமன்னனின் சுங்கக் காவலர், மன்னனது புலி முத்திரையை மூட்டைகட்கு இட்டு, மதிப்பறிந்து போக்குவர். அங்ஙனம் மதிப்பறிந்த பண்ட மூட்டைகள் அகன்ற முற்றத்தில் அங்கே ஏற்றுமதி இறக்குமதிக்கு ஆயத்தமாக உயரமாய் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும்.

அந்த மூட்டைப்போர்கள், வானளாவிய மலைகளைப் போல் உயர்ந்து தோன்றும். அந்தப் போர்களின்மேல் ஆண் நாய்களும் ஆட்டுக் கிடாய்களும் ஏறிக் குதித்துத் திரிந்துகொண்டிருக்குந் தோற்றம், மலைச்சரிவுகளில் வருடை மான்கள் துள்ளி விளையாடுதலை ஒத்திருக்கும் என்பர்.

அப்படியானால் அப் பண்டசாலை முற்றம் எவ்வளவு வாணிப வளமும் முயற்சியும் உடையதாயிருக்கும்! ஆ, அவை இந் நாவலந்தீவின் பழைய தமிழ் முன்றில்!

குறிப்புரை: பரப்பவும் - பரவவும். மாரி - மழை. ஈண்டி - செறிந்து. அருங் கடிப் பெருங் காப்பின் வலியுடை வல் அணங்கினோன் என்றது, சுங்கக் காவலரை. சுங்கம் - வரி. அரு கடி - அரிய காவலையுடைய. பெரு காப்பின் - பெரிய சுங்கச் சாவடியில். வலியுடைய - மனவலிமையுடைய. வல் அணங்கினோன் - உடல் வலிமையும் அமைந்த, அச்சந்தருங் காவலன். புலி - புலி முத்திரை. பொறித்து - இங்கே, இட்டு என்னும் பொருட்டு. மதி நிறைந்த - காவலரின் மதிப்பு நிறைந்த. பொதி மூடை - பண்டங்கள் பொதியப்பட்ட மூட்டைகள். போர் - குவியல். மழை - மேகம். ஆடு - உலவுகின்ற. சிமைய - சிகரங்களையுடைய. மால் வரைக் கவான் - பெரிய மூங்கில்களையும் பக்க மலைகளையுமுடைய. கவான் - பக்க மலைகள். வரை ஆடு வருடை - மலைகளில் விளையாடும் வருடை மான்களின். உகிர் - நகங்களையுடைய. ஞமலிக் கொடு தாள் ஏற்றை - கொடு தாள் ஞமலி ஏற்றை; வளைந்த காலையுடைய நாயின் ஆண்; ஆண் நாய் என்றபடி. ஏற்றை - ஏறு; இதில் ஐ, சாரியை. ஏழகத் தகர் - ஆட்டுக்கிடாய்கள். உகளும் - குதித்துத் திரிகின்ற. முன்றில் - முற்றம். (எ௫)

## கோசர் நன்மொழி

[நாட்டில் ஏதாவது ஒன்று பழமொழிபோல எங்கும் வழங்கவேண்டுமானால், அது பலராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட மெய்ம்மையுடையதாக இருக்கவேண்டும். பண்டைக்காலத்தில், கோசர் நன்மொழி அங்ஙனம் வாய்மை சிறந்து புகழோங்கியிருந்தது. சங்க நூல்களிற் பல விடங்களில் இக் கருத்துப் பயின்று வந்துள்ளது.]

பறைபடப் பணிலம் ஆர்ப்ப, இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல,
வாயா கின்றே தோழி; ஆய்கழல்
சேய்இலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே.

—குறுந்தொகை, கரு.

கடைச்சங்க காலத்தில் மோகூரிற் பழையன் என்னுங் குறுநில மன்னன் ஒருவன் இருந்து விளங்கினன். அவனுடைய அறங்கூறவையத்தில் கோசர் என்னும் பிரிவினர் சிலர் இருந்து வழக்குகட்கு நடுநிலைமையோடு அறம் உரைத்து வந்தனர். அவர்கள் நான்கு ஊர்களில் நான்கு பிரிவினராக இருந்தனர்.

பழைய காலங்களில் மிகப் பழையதான அகன்ற ஆலமரத்தின்கீழ் அவை கூடுவது வழக்கம். மரங்களுள், மிகவுந் தழைத்த மரம் ஆலமரமாதலால், அதன்கீழ், நிழலுள்ள இடம் பரந்து காணப்படும். அது, ஊருக்குப் பொது இடமாகும். அதனால் அந்த இடத்தைப் 'பொதியில்' என்றும் வழங்குவதுண்டு. கோசரும் அப் பொதியின் கீழ்த் தங்குதல் கொண்டு அறம் உரைப்பது வழக்கம். அவர்கள் அறம் உரைத்தால் அது மெய்ம்மையோடு பொருந்தியிருக்கும் என்று நாடு முழுதும் நம்பிக்கையிருந்தது. அவ்வளவுக்குப் பெருமைகொள்ளும்படி மெய்யே பேசுவது அவர்கள் இயல்பாயிருந்தது. நாட்டில் ஏதாவது தொன்று உண்மையாக நிகழ்ந்துவிட்டால், 'இது கோசர் நன்மொழிபோல வாய்மையாகி விட்டதே' என்று எங்கும் மூலை முடுக்குகளிலும் மக்கள் பேசிக்கொள்வர்.

தலைவியின் காதலுக்கு அவள் சுற்றத்தார் எளிதில் இணக்கங் காட்டாமையால் அவள் தன் தலைவனோடு உடன்போக்கினை மேற்கொள்ள நேர்ந்தது. தலைவி சென்றபின், தோழியின் வாயிலாகச் செவிலிக்குச் செய்தி

எட்டியது. செவிலியின் வாயிலாக நற்றாய்க்கும் எட்டியது. நற்றாய் திடுக்கிட்டுச் செவிலியை நோக்கி, "தோழீ, விடலையொடு மடந்தை செய்த நட்பு, கோசர் நன்மொழிபோல வாய்மையாகியதே" என்று வியந்தும் வருந்தியும் சொல்லின்றனள். கோசர் வாய்மொழியின் பெருமை எவ்வளவு மிகுதியாக நாட்டிற் பரவியிருந்தது என்பதற்கு, இதனினும் வேறு எடுத்துக்காட்டும் வேண்டுமோ?

குறிப்புரை : பறை பட - முரசுமுழங்க. பணிலம் ஆர்ப்ப - சங்கு ஒலிக்க. இறை கொள்பு - தங்குதல் கொண்டு. தொல் முது ஆலத்து - பழைய ஆண்டேறிய ஆலமரத்தின்கீழ். பொதியில் - பொதுவிடத்தில். நால் ஊர்க் கோசர் - நான்கு ஊர்களில் நான்கு பிரிவினராயிருந்த கோசருடைய. நன்மொழி போல - அறவுரைபோல. வாய் ஆகின்று - உண்மை ஆகியது; விடலையொடு மடந்தை நட்பு உண்மை ஆகியது என்று உரைத்துக்கொள்ளவேண்டும். ஆய் கழல் - அழகிய வீரக்கழலை யணிந்த. செ இலை வெள் வேல் - பொருத்தமான இலை வடிவு அமைந்த வெண்ணிறமான வேற்படையையுடைய. 'வழியில் யாதும் இடுக்கண் நேராமையால் குருதி தோய்தற்கு இடனில்லாத நிலையில் உள்ள வேற்படை' என்பதற்கு வெண்ணிறமான வேல் எனப்பட்டது. விடலையொடு - காளைப் பருவத்தானொடு. தொகு வளை முன் கை மடந்தை - தொக்க வளைகளை யணிந்த முன் கையினையுடைய மடந்தை செய்த. 'நட்பு வாய் ஆகின்று' என்பது. (எகூ)

## முதுகுடுமி

[பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் இம் மன்னன், தெற்கே கடலில் மறைந்துபோன பஃறுளியாறு நிலவியிருந்த காலத்தில் இருந்தவன்; போர்ச் செயலிலும் அறம் வழுவாதவன்; வீரன்; தம் முன்னோர்களிடத்தும் நல்லோர்களிடத்தும் நன்றி மிக்கவன்.]

ஆவும், ஆனியற் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும், பிணியுடை யீரும், பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்

எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்என
அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்
எங்கோ வாழிய குடுமி! தங்கோச் [றும்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்கு ஈத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.

—புறநானூறு, ௯.

அரசியல், பலர் உள்ளத்தைக் கவர்ந்து இனிது நடைபெறுவதொன்று. பலரும் ஒப்புக்கொள்ளும் பொருள், உலகியற்கையில் ஒன்றே உள்ளது. அதுவே, அறம் என்பது. ஆதலால், அறத்தோடு பொருந்தி நடைபெறுவது எதுவும் பலர் உள்ளத்தைக் கவர்ந்து ஆற்றலோடு இயங்கும் என்று துணிந்துகொள்ளலாம்.

நாட்டுக்கு அரசியல், உயிர்போன்றது. அரசியல் தகுதியாக நடைபெறாவிட்டால், நாடு நிலைகுலைந்து காடாய் விடும். ஆகவே, அரசியல், அறத்தோடு பொருந்தி நடைபெறவேண்டுவது எவ்வளவு கட்டாயமென்பது சொல்லாமலே விளங்கும். இதனால், மிகப் பழைய காலத்திலிருந்தே தமிழரசர்கள் தம் ஆட்சிமுறையை அறம் வழுவாமல் நடத்துவதில் மிகவுங் கருத்துடையவர்களாக இருந்தார்கள்.

போர் செய்யும்போதுகூட, செய்யும் இடம் பகைவர் நாடேயாயினும், போர் நிகழுமிடத்திலிருந்து நல்லோர் மாட்டாதார் முதலியோரை அப்புறப்படுத்திவிட்டுப் பின்பே ஏனையோருடன் போர்செய்யும் அறத்தை அம் மன்னர்கள் மேற்கொண்டிருந்தனர். மிகப் பழைய காலத்திலிருந்தே தமிழ் மன்னர் இங்ஙனமெல்லாம் அறம் உடையவர் என்பதற்கு, பண்டு பஃறுளியாறு கடலுள் அழிந்துபோகாமல் இருந்த காலத்திலேயே விளங்கிய முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியன், தான்

போர் செய்யுங் காலங்களில் இங்ஙனமே நடந்துகொள்ளுங் கொள்கையும் வீரமும் உடையவன் என்று இச் செய்யுளில் வருவதிலிருந்து தெரிகின்றது.

அத்தகைய அறவோனை வாழ்த்துவதற்கு யாருக்குத் தான் உள்ளம் வராது. நெட்டிமையார் என்னும் அவன் காலத்துப் புலவர், அவன் முன்னோன் ஒருவனால் அமைக்கப்பட்டு அக் காலத்தில் விளங்கிய 'பஃறுளி' என்னும் ஆற்றின் மணலைவிடப் பலகாலம் முதுகுடுமி வாழ்க என்று உளமார வாயார இச் செய்யுளில் வாழ்த்தியிருக்கின்றார்.

குறிப்புரை: ஆவும் - ஆன் நிரைகளும். ஆன் இயல் - ஆனின் தன்மையுடைய. பிணியுடையீரும் - நோயுடையீர்களும். பேணித் தென்புல வாழ்நர்க்கு அரு கடன் இறுக்கும் புதல்வர்ப் பெறூஅதீரும் - இதுகாறும் உலகைத் தம் அறிவுரைகளாலும் தொண்டுகளாலும் காத்துவந்து இப்போது தென்புலம் எனப் படும் நுண்ணுலகில் வாழ்ந்துவரும் முன்னோர்க்கு, அரிய செய்ந் நன்றிச் செயல்களாகிய கடமைகளைச் செய்து சிறக்கும் புதல்வன் புதல்வியரை இன்னும் பெற்றெடுக்காமல் உள்ள இளைய மண மக்களும். தென்புல வாழ்நர் என்றது, பொதுவாகச் சான்றோரை. அருங்கடன் என்றது, திருநாட்கொண்டாட்டம் முதலியன. இறுக்கும் - கட்டாயமாகச் செய்யும். பொன் போல் - சொத்துக்கு நிகரான. புதல்வர் - புதல்வன் புதல்வியரை; அதாவது, குழந்தைகளை என்னும் பொருட்டு. கடி - விரைவில். அரண் - பாதுகாப்பில்; பாதுகாப்புக்கு உரிய இடங்களில். அறத் தாறு - அற முறைமையை. நுவலும் - சொல்லிக் கட்டளையிடுகின்ற. பூட்கை - மேற்கோளையும். மறத்தின் - வீரத்தையும் உடைய. 'உடைய எங்கோ குடுமி' என்று சேர்த்துக் கொள்ளவேண்டும். 'கொல் களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும் குடுமி' என்பதும் முதுகுடுமிப் பெருவழுதியின் சிறப்பை உணர்த்திற்று. கொல்லுந் தொழிலையுடைய யானையின் மேலே தூக்கப்பட்ட அடையாளக் கொடியானது வானத்தில் அசைந்து நிழல் செய்யும் மாட்சிமைக்கு உரிய குடுமி என்பது அதன் கருத்து. எம்கோ குடுமி வாழிய - எமக்கு அரசனாகிய முது குடுமிப் பெருவழுதி வாழ்வானாக! தம் கோ - அவனுக்கு முன்னோனை. 'முன்னோனை நெடியோன் உண்டாக்கிய பஃறுளி மணலினும் பலகாலம் குடுமி வாழிய' என்று சேர்த்து

உரைத்துக்கொள்ளவேண்டும். செம் நீர்ப் பசும் பொன் வயிரியர்க்கு ஈத்த - செவ்விய குணத்தையுடைய பசும் பொன்னைக் கூத்தர்களுக்கு வழங்கிய. முந்நீர் விழவின் - கடலின் தெய்வத்துக்கு விழாச் செய்தலையுடைய. ஈத்த விழவின் நெடியோன் என்று சேர்த்துக்கொள்ளவேண்டும். பல - பலகாலம். நெடியோன் என்று இங்கே குறிப்பிடப்பட்ட பாண்டியனை முந்நீர்க் கண் வடிம்பலம்பநின்ற பாண்டியன் என்று வேறு பெயராற் கூறுவர். (எஎ)

### சொல்லுதவி

[எல்லாரும் எவ்வகையாலேனும் பிறர்க்கு உதவலாம். பொருளுதவி சிலர்க்குச் செய்யமுடியாதாயினும், உள்ளம் உரை உடம்புகளாலாவது உதவிசெய்து வாழ வாய்ப்பில்லாமலில்லை. 'வாய்ச் சொல்லுக்குங் குறைவா!' என்று உலகோர் கூறுவதுண்டு. 'ஆற்றுப் படை' என்னுஞ் சங்க கால வழக்கு இத்தகைய சொல்லுதவியேயாகும்.]

ஆனினங் கலித்த அதர்பல கடந்து
மானினங் கலித்த மலைபின் ஒழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
சிதாஅர் உடுக்கை முதாஅரிப் பாண!
நீயே பேரெண் ணலையே நின்இறை
மாறி வாஎன மொழியலன் மாதோ
ஒலியிருங் கதுப்பின் ஆயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து
மரன்அணி பெருங்குரல் அனைய னாதலின்
நின்னை வருதல் அறிந்தனர் யாரே.

—புறநானூறு, கஅ.

சிலர், பிறர்க்கு ஒன்று ஈதலைத் தடுத்துத் தீவினையைப் பெருக்கிக்கொள்வர். சிலர், 'நீங்கள் இன்னாரிடம் சென்றால் நல்ல பயனைப் பெறலாம்' என்று உரிய வழியிற் செலுத்தி நலம் பெருக்கி உதவுவர். இங்ஙனம் உரிய

வழியிற் செலுத்துதலை 'ஆற்றுப் படுத்தல்' என்று கூறுவதுண்டு. 'ஆற்றிற் செலுத்துதல்' என்பது அதன் பொருள். ஆற்றில் என்பது வழியில் என்னும் பொருட்டு.

இவ்வாறு ஆற்றுப்படுத்தலை 'ஆற்றுப்படை' எனவுங் கூறுவர். புலவரை ஆற்றுப்படுத்தினால் 'புலவராற்றுப் படை' எனவும், பாணரை அல்லது கூத்தரை ஆற்றுப் படுத்தினால் 'பாணாற்றுப்படை' அல்லது 'கூத்தராற்றுப் படை' எனவும் அந் நிகழ்ச்சிகள் கூறப்படும். இச் செய்யுள் அம் முறைமையில் வந்த 'பாணாற்றுப்படை'யாகும். பாணன் ஒருவனை நாஞ்சில் வள்ளுவனிடம் ஆற்றுப்படுத்தியது இது. மருதனிளநாகனார் பாடியது.

புலவர்களையும் கலைஞர்களையும் இங்ஙனம் உரிய வழியிற் செலுத்தி நலம்பெறச் செய்த நிகழ்ச்சிகள் சங்க காலத்தில் நிரம்ப உண்டு. இதனால், அக் காலத்தில் அழுக்காறில்லாத அருள்நெஞ்சப் பான்மை மிகுந்திருந்ததென்று நன்கு துணியலாம். பரிசு பெற்ற புலவர்களும் கலைஞர்களுமே தமக்கு எதிரில் வரும் புலவர்களையும் கலைஞர்களையும் இங்ஙனம் ஆற்றுப்படுத்துவரென்றால், புலவரும் கலைஞர்களும் தமக்குள் எவ்வளவு ஒற்றுமையோடும் அன்போடும் அக்காலத்தில் விளங்கியிருக்கின்றார்கள் என்று தெரிகின்றதன்றோ!

'ஆனினங்கள் மிக்க வழிபல கடந்து, மானினங்கள் மிக்க மலைபல பின்னே போக, மீனினங்கள் நிறைந்த நீர்த் துறைகள் பல நீந்தி இங்ஙனம் மிகத் தொலைவிலிருந்து நாஞ்சில் வள்ளுவன் என்னும் நல்லோனை நினைந்து வருகின்ற, வளமான ஒலியையுடைய சிறிய யாழையும கிழிந்த உடையையும் உடைய வயதுமூத்த பாணனே! நீதான் பெருந்தன்மையான எண்ணங்களை எண்ணுதலுடையை.

நீ கருதி வருகின்ற தலைவன், 'இப்போது போய்ப் பின்பு வா' என்று சொல்லாத இயல்புடையவன். மேலும், தழைத்த கரிய கூந்தலையும் தேர்ந்த அணிகலன்களையும் உடைய மாதினியாளுக்குக் கணவனாய்க் குடும்ப வாழ்க்கை

யில் இருப்பவன். இன்னும், கிளிகள் பொருந்திய அகன்ற காட்டில் மரப்பொந்துகள் கொண்ட பெரிய கதிர்களைப் போலப் பலருந் தாவி உண்ணுதற்குரிய ஒப்புரவாளன்.

ஆதலால், நீ அவனிடம் சென்றால், மீண்டு நீ திரும்புகையில் நின்னை யார் அடையாளங் கண்டுபிடிக்க முடியும்?' என்பது இச் செய்யுளின் பொருள். அவ்வளவு வளமாகத் திரும்புவாய் என்பது கருத்து.

இவ்வளவு நன்றாக நம்பிக்கை வரச் சொல்லி உதவுதல் அக்காலத்தில் வழக்கு என்று அறியும்போது நமது தமிழ்நாடா இவ்வளவு நாகரிகநிலையில் விளங்கியது என்று உள்ளம் கொள்ளைபோகின்றது.

'போய் அப்புறம் வா' என்று சொல்லிக் காலோடித்தல் நல்ல இயல்பன்று; வாழ்க்கைத்துணையோடு கூடி இல்லறம் நடத்துவோர்க்கு, இயல்பாகவே பிறர் துன்பத்தை எண்ணிப் பார்த்து உதவும் இயல்பு உண்டு. கிளிகள் மிகுதியாக இருக்கின்ற இடத்தில் மரப்பொந்துகளிலேயே பயிரின் பெரிய பெரிய கதிர்களைக்கொண்டுபோய் வைத்தால் அக் கதிர்கள் கிளிகளுக்குச் சிறிதும் அச்சமும் குறைவுமில்லாத வகையில் எவ்வளவு நன்றாக உதவுமோ, அவ்வளவு நல்ல வகையில் பழைய செல்வர்கள் மிக்க ஒப்புரவாளர்களாய் விளங்கினர் என்னுங் கருத்துக்கள் தமிழ்நாட்டு நாகரிகத்தை எவ்வளவு சிறப்பாக எடுத்துக் காட்டுவனவா யிருக்கின்றன !

**குறிப்புரை :** கலித்த - நிரம்பிய. அதர் - வழி. துறை - நீர் நிலைகள். உள்ளி - நினைத்து. வள் - வளமான. உயிர் - ஒலியையுடைய. சீறியாழ் - சிறிய யாழையுடைய. சிதாஅர் - சிதர்ந்த; தொளைகளையுடைய; அதாவது, கிழிசலான என்றபடி. உடுக்கை - உடையையுடைய. முதாரி - முதிய. எண்ணலை - எண்ணுதலுடையை. இறை - தலைவனான நாஞ்சில் வள்ளுவன். மொழியலன் - மொழியான். ஒலி - தழைத்தலையுடைய. இரு - கரிய. கதுப்பின் - கூந்தலையுடைய. மரீஇய - மருவிய; பொருந்திய. வியன் - அகன்ற. மரன் - மரப்பொந்து. அணி -

கொண்ட. குரல் - பயிரின் கதிர். வருதல் - நீ திரும்பி வருகையில். நின்னை அறிந்தனர் யார் - நின்னை அடையாளம் அறிவார் யார்? (எஅ)

## மதுரை நகர்

[தமிழை வளர்த்த நகரம் மதுரை; அறிவைப் பெருக்கி அதனை உலகுக்கு வழங்கிய நகரம் மதுரை; அதனால் அது, உயர்ந்ததாயிற்று. உலகம் முழுதும் அதற்கு நிகரில்லை என்னும்படி புகழ் ஓங்கியது. சிறந்தன செய்வாரும் செய்யுமிடமும் இப் புகழ்க்கு உரியன.]

உலகம் ஒருநிறையாத் தான்ஓர் நிறையாப்
புலவர் புலக்கோலால் தூக்க—உலகனைத்தும்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூடல் நகர்.

—பரிபாடல் திரட்டு, ௬.

செயற்கரியன செய்யும் இடங்கள் உயர்ந்த இடங்கள்; செயற்கரியன செய்வோரும் பெரியோர்.

தமிழ் மொழி உலகத்துக்கே தக்க அறிவு விருந்தினை அளித்திருக்கின்றது. தக்க மொழிக்கிளைகளையும் பரப்பியிருக்கின்றது. அத்தகைய தமிழ்மொழியை நன்றாக வளர்த்து ஆற்றலுண்டாக்கிய இடம் மதுரைமாநகரம். அதனால், உலகம் முழுமைக்கும் ஆற்றலுண்டாக்கிய இடம் மதுரைமாநகரமாயிற்று. சங்க காலத்தில் மதுரைநகர்க்கிருந்த பெருமை அளவிடற்கரியது.

அக்காலத்தில் அறிஞர்கள் மதுரையையும் உலகம் முழுவதையும் ஒப்பிட்டுப் பார்க்க விழைந்தனர். அறிவே நிறைகோலாக உதவியது. உலகம் ஒரு நிறையாகவும் மதுரை ஒரு நிறையாகவும் வைத்து நிறுத்து எது தன் பெருமையில் வாடுகின்றது, எது வாடாதிருக்கின்றது என்று அறிய முயன்றனர். பலரும் முடிபு காண்பதிற் கருத்தாயிருந்தனர். மதுரைதான் வென்றது; உலகனைத்தும் தன் பெருமை குறைந்து வாடத் தென்னவன் நான்

மாடக்கூடல்நகர் வாடாத தன்மையதாய்ப் பெருமை நிறைந்து விளங்கியது.

யார் யார் தமிழ்க்குச் சிறந்த தொண்டு செய்கின்றார்களோ, உலகுக்கு உயர்ந்த அறிவுச் செல்வத்தை வழங்குகின்றார்களோ, அருட்செல்வத்தைப் பெருக்குகின்றார்களோ, அவர்களெல்லாரும் நிகரற்ற பெருமைக்கு உரியவர்களே ; அவர்கள் இருக்கும் இடங்களெல்லாம் நிகரற்ற பெருமைக்கு உரியனவே என்பது இதனால் விளங்குகின்றது.

**குறிப்புரை :** நிறையா - நிறுக்கப்படும் பொருளாக ; தான் - மதுரைநகர் மட்டும். புலக் கோலால் - அறிவாகிய நிறை கோலால். தூக்க - தூக்கி நிறை பார்க்க ; சீர்தூக்கிப் பார்க்க ; ஒப்பிட்டுப் பார்க்க. உலகனைத்தும் - உலகு முழுதும். தான், அசைச்சொல். தன்மைத்து - தன்மையுடையதாயிற்று. தென்னவன் - பாண்டியனது. நான்மாடக் கூடல் நகர் - 'நான்மாடக் கூடல்' என்னும் பெயரினையுடைய மதுரை நகர் ; 'நகர் வாடாத தன்மைத்து' என்று கொள்ளவேண்டும். (எக)

## பெரிய புகழ்

[தன்னையே இழந்து பிறர்க்கு உதவும் புகழ் பெரிய புகழ். தமிழ் நாட்டிற் பண்டு பலர் அப் பெருமைக்கு உரியராய் விளங்கினர். பெண்களிற் பலர் அப்படி உண்டு. 'மருதி' என்னும் மாதும், ஒரு தோழியும் இச் செய்யுளிற் காட்டப்படுகின்றனர்.]

வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்கென்
மேனி ஆய்நலந் தொலைதலின் மொழிவென் :
முழவுமுகம் புலராக் கலிகொள் ஆங்கண்
கழாஅர்ப் பெருந்துறை விழவின் ஆடும்
ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்டன் அத்தி நலன்நயந் துரைஇத்
தாழிருங் கதுப்பின் காவிரி வவ்வலின்
மாதிரம் துழைஇ மதிமருண்டு அலந்த

ஆதி மந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ? வாழி, தோழி! பன்னாள்
உரவுரும் ஏறொடு மயங்கி
இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே.

—அகநானூறு, உஉஉ.

புகழ், பிறர்க்கு உதவுதலில் உள்ளது; பெரிய புகழ், தன்னலம் இழந்து உதவுதல்; தன்னையே இழந்து உதவுதல் இன்னும் பெரிய புகழ்; அது, தலைமையான புகழ். பண்டு, தமிழகத்தில் இத் தலைப்புகழிற் சிறந்தோரும் இருந்து விளங்கினர். 'மருதி' என்னும் மாது அத்தகையோருள் ஒருவர். 'மருதியன்ன மாண்புகழ்' என்று இச் செய்யுளில் அவர் புகழ் பாராட்டப்படுகின்றது; பின்பற்றவும் படுகின்றது.

'ஆட்டனத்தி' என்பான் சேரமன்னன்: அவனை 'ஆதிமந்தி' என்னுஞ் சோழன் மகள் காதலித்து மணந்தாள. ஒருநாள், இருவருங் காவிரியில் நீராடினர். ஆட்டனத்தி ஆற்றின்வழி மறைந்து கடலுட் சென்றான். ஆதிமந்தி, தவித்துத் தேடிக் கதறினாள். அவள் துன்பந் தாங்காமலும் கடமை கருதியும், 'மருதி' என்னும் மாது கடலுட் பாய்ந்து ஆட்டனத்தியை வெளிப்படுத்தினாள். வெளிப்படுத்தினாளாயினும், அவ் வீரச் செயலில் 'மருதி' உயிர் துறக்கும்படி நேர்ந்துவிட்டது. ஆட்டனத்தி ஆதிமந்தி என்போரின் மகிழ்ச்சிக்காக அவள் தன்னையே இழந்தாள். 'மருதி'யின் புகழ் மாயுமோ? மாயா வீரப்புகழன்றோ அது! கடமையென்று ஒன்று நேர்ந்தால், அதில் இவ்வாறு தன்னை யிழக்கவும் ஆயத்தமாயிருத்தல் தக்கார் செயல்!

தோழி, தலைவியை நோக்கிப் பின்வருமாறு கூறுகின்றாள்: "தலைவன் சென்ற இடத்தைத் தேடி, அவனை நின்

பாற் சேர்ப்பிப்பேன்; இவ்வகையில் 'மருதியன்ன மாண் புகழ்' எனக்குக் கிடைப்பதாயினும் சரி."

தோழி, தலைவன் தலைவியர் மகிழ்ச்சியில் எவ்வளவு தன்னலமிழந்தவளாய்க் காணப்படுகின்றாள். இத்தகைய உயிர் நண்பர்கள் முற்காலத்தில் விளங்கியிருக்கும்போது, தமிழகத்தின் பெருமைக்கு என்ன குறை!

**குறிப்புரை :** உறீஇய - உண்டாக்கிய. ஆய் நலன் - மெல்லிய அழகு. மொழிவென் - அதற்கொரு வாயில் கூறுவேன். முழவு முகம் - முழவின் முன்னிடம். புலரா - ஒலி நீங்காத. கலிகொள் ஆங்கண் - ஆரவாரங் கொண்ட இடமாகிய. கழார்ப் பெருந் துறை - கழார் என்னும் இடத்திலுள்ள பெரிய நீர்த் துறையில். ஈட்டு எழில் - திரண்ட அழகினால். ஏந்து குவவு - ஏந்திய திரண்ட. மொய்ம்பின் - தோள் வலியையுடைய. ஆட்டனத்தி நலன் - ஆட்டனத்தி என்பானது நற்குணத்தை. உரைஇ - பொருந்தி. கதுப்பின் - அலையாகிய கூந்தலையுடைய. காவிரி - காவிரியாறு என்னும் பாவை. மாதிரம் துழைஇ - திசையெலாம் நீரில் துழாவித் தேடி. ஆதிமந்தி காதலன் - ஆதிமந்தியின் காதலனை. காட்டி - அவளுக்கு வெளிப்படுத்தி. பெறீஇயர் - பெறும்பொருட்டு. சென்மோ - செல்வோம்; தான் செல்வதைத் தோழி இப்படிப் பன்மையாகக் கூறினாள். உரவு உரும் ஏறொடு - வலிய இடியேற்றுடன். மயங்கி - கூடி. ஈர்ந் தண் - மிக்க ஈரமாகிய. ஆறு - வழியில். 'வழியில் செல்வோம்' என்று சேர்த்துக்கொள்ள வேண்டும். (அ0)

# 9. மதம்

## உயிரின் சிறுமை

[கடவுள், உயிர், மலம் என்று முப்பொருள் உண்மை பேசுவர் சான்றோர். இவற்றுள், உயிர் சிறிய ஆற்றலுடையது. காமம் என்னும் மலம் பல உயிர்களைப் பிணித்தலின், அதன் ஆற்றல் உயிரின் ஆற்றலைவிடப் பெரியது. கடவுள் எல்லாவற்றினும் ஆற்றல் மிக்கவர். உயிரின் இயல்பும் மலத்தின் இயல்பும் ஓரளவு இச் செய்யுளில் வருகின்றது.]

வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி;
யார்அஃ தறிந்திசி னோரே? சாரல்

சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கு,
உயிர்தவச் சிறிது ; காமமோ பெரிதே. [இவள்
—குறுந்தொகை, ௧௮.

உயிர், சிறிய நிலையுடையது என்பதைப் பண்டைக் காலத்து நன்மக்கள் எவ்வாறோ தெரிந்துகொண்டனர். அதன் அறிவாற்றலெல்லாம் சிறியன என்பது அவர்கள் கருத்து. அதனோடு மற்றுஞ் சில உண்மைகளையும் அவர்கள் அறிந்திருந்தனர். உயிரைக் காமம் என்னும் அறியாமை மலம் இயற்கையே பற்றிப் பெரிதும் துன்புறுத்துகின்றது என்றும், பிரிவாற்றாமைத் துன்பமாகிய அந்த ஆணவமலம் எத்தனையோ உயிர்களை இவ்வாறே பற்றித் துன்புறுத்துவதனால், உயிர்களைவிட அது பெரியதாகவே இருக்கவேண்டும் என்றும் அவர்கள் கருத்தூன்றிக் கண்டனர். காதல் என்னும் அன்பு, உயிரின் இயல்பு. அது மக்களுக்கு இன்பமே தருவதனால், எந்நாளுந் துன்பமே தருங் காமம் என்னும் அறியாமையியல்பு அதற்கு வேறாய் உள்ளது என்றும் அவர்கள் உன்னி யறிந்தனர். இவ்வறியாமை இயல்பினையே 'புலனழுக்கு' என்றனர்.

மிகச் சிறிய உயிரை மிகப்பெரிய அறியாமைக் காமம் பற்றி இன்னலுறுத்தி வருதலை அக்காலத்து நன்மக்கள் இங்ஙனம் அறிந்துகொண்டதனால், அவர்கள் உள்ளம் மிகவும் இரக்கங்கொள்வதாயிற்று. உண்மையாகவே அவர்கள் இவ் விரங்கத்தகுந்த நிலைக்கு வருந்தியிருக்கின்றனரென்பது, இங்கே காட்டப்பட்டிருக்குஞ் செய்யுளில் வருகின்ற ஓர் அழகிய உவமையே மெய்ப்பிக்கும். 'மலைகளிற் பலாமரங்களின் மெல்லிய கொம்பில் மிகப் பருத்த பலாப்பழங்கள் முற்றித் தொங்குதல்போல, தலைவியின் மிகச் சிறிய உயிரைப் பெரிய காமமானது பெருகிப் பற்றி வருத்துகின்றது' என்று தலைவனிடத்துத் தோழி சொல்லுவதுபோல இச் செய்யுள் வந்திருக்கின்றது. காமம் இவ்வளவு பெருகித் துன்புறுத்துதலின், அது நீங்கும்படி உடனே அவன், தலைவியைத் திருமணஞ் செய்துகொள்ள

வேண்டும் என்பது கருத்து. இவர்கள் குறிஞ்சிநிலத்து மக்களாதலால், தாம் அறிந்திருந்த பலாமரத்தையும் பழத்தையும் நினைந்து இங்ஙனம் உவமையை அழகுபடுத்தினர்.

உயிரினியல்பையும் அறியாமையின் இயல்பையும் இவ்வளவு சிறிய தெளிவான உவமை கொண்டு அழகாக அறிவித்த ஆசிரியர் பிறரெவருமல்லர்; புலனழுக்கற்ற அந்தண் பெரும்புலவரான கபிலரே!

**குறிப்புரை:** வேரல் - இயற்கையாக வளர்ந்துள்ள சிறுசிறு மூங்கிலாலான. வேலி - வேலியையுடைய. வேர் கோள் பலவின் சாரல் நாட - வேர்களிற் பழக்குலைகளுடைய பலாமரங்கள் நிரம்பிய பக்கமலைகள் பொருந்தின மலைநாடனே! தலைவனே என்று அழைத்துக்கொண்டபடி. செவ்வியை - தலைவியை வரைந்துகொள்ளக்கூடிய நற்பண்புடையையாக. ஆகு - ஆகுக. மதி, அசை. அஃது - தலைவியின் அவ் வருத்தத்தை. அறிந்திசினோர் - அறிந்தவர். ஒருவருமில்லையே என்ற குறிப்பில் இங்ஙனந் தோழி கூறினாள். சாரல் - எங்கள் மலைப்பக்கங்களில். கோட்டு - கொம்பில். பழம் - பலாப்பழம். தூங்கியாங்கு - தொங்கினாற்போல. இவள் - இவளுடைய. தவச் சிறிது - மிகச் சிறிது. (அக)

## வினையற்ற செயல்

[மேலுமேலும் வினையும் அதனால் பிறவியும் கிளைக்காத நிலையில் மக்களுக்குச் செயல்கள் நிகழவேண்டும். பயன் கருதாத கடமைச் செயல்களே அத்தகைய மாட்சியுடையன. இச் செய்யுளில் வரும் எடுத்துக்காட்டும் கருத்தும் இவ்வுண்மையை நன்கு விளக்கும்.]

உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்
படாஅ மஞ்ஞைக்கு ஈத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே [மையே.
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண்

—புறநானூறு, கசக : க0 - கரு.

யாதுங் கருதாமல் வறியோர் இன்னல் போக்கு தலையே எண்ணி நெஞ்சுருகி உதவும் ஈகையாளர் முன்பு பலர் விளங்கியிருந்தனர். மறுமைக்குப் புண்ணியம் உண்டாகும் என்றுகூட அவர்கள் கருதுவதில்லை. அவர்கள் ஈகைக்கு அவர்கள் உருகிய நல்லெண்ணமே ஏது.

காட்டில் குளிரால் நடுங்கிய மயில் ஒன்றைக் கண்ட போது 'பேகன்' என்னும் பழைய வள்ளலின் மனம் உடனே இரக்கவுருவங் கொண்டது. மயில்கள் உடுத்துக் கொள்ளமாட்டா, போர்த்துக்கொள்ளமாட்டா என்பது அறிந்தும் அவன் உடனே விலைமதிப்புடைய தனது மேற் போர்வையை மயிலுக்குப் போர்த்தான். இச்செயலை என்னென்பது! மறுமை நலத்தையோ வேறு எந்நலத்தையோ கருதியதாகுமா பேகனது இக் கைவண்மை! இன்மை என்னும் இன்னலைக் கண்டு பொறுக்கமாட்டாத அழகிய உள்ளத்தின் பண்பன்றோ அது!

மறுமைநலங் கருதினாலும் அது நல்வினையாய் முடியும். நல்வினை என்பதும் ஒரு வினைதானே! மேல் வினைகள் எவையும் உண்டாகாத அருள்நிலையே இப் பேகன் போன்றாரது பண்பு! பிறவி முழுதும் இவ் வருள்நிலையிலேயே செயல் நிகழுமானால், மீண்டும் பிறவியுண்டாவதற்குத்தான் வழி ஏது? என்ன அருமையான நிறைவு நிலையாக இது விளங்குகின்றது!

குறிப்புரை: உடாஅ - உடுக்கமாட்டா; போரா - போர்த்துக்கொள்ளமாட்டா. இங்ஙனம் உடா, போரா ஆகுதலை அறிந்தும் என்று தொடர்ந்துகொள்ள வேண்டும். படாஅம் - போர்வையை. மஞ்ஞைக்கு - மயிலுக்கு. எம் கோ - எம் தலைவன். கடாம் யானைக் கலி மான் பேகன் - மதம் பொருந்திய யானையையும் மனஞ் செருக்கிய குதிரையையும் உடைய பேகனுவான். எத்துணையாயினும் - எவ்வளவாவது. நன்று எனா - பின்பு நல்லது என்று. மறுமை - மறுமை நலத்தை. நோக்கின்றோ - நோக்கியதோ எனின். அன்று - அங்ஙனமன்று. 'எம் கோ பேகன்; அவன் கைவண்மை மறுமை நோக்கியதன்று; பிறர் வறுமை நோக்கியது' என்றபடி.

(அஉ)

## அறமும் அருளும்

[அறம், மன மாசு நீக்குதல்; அருள், அதனாலுண்டாகும் உள்ள நெகிழ்ச்சி. அறம், துன்பத்துக்கு ஏதுவான அடிப்படைக் கோணலைப் போக்குவது; அதாவது ஒழுங்குமுறை கோலுவது. அருள், காணப்பட்ட துன்பத்துக்கு ஒன்று உதவுவது. அறம் என்பது அடிப்படை உதவி; அருள் என்பது அதற்குமேல் நிகழும் உதவி. அருளை விரும்புவோர் அறத்தையும் விரும்பிச் செய்தல் கடமையாகும்.]

மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமும் இலமே;
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோய்என
இஃதியாம் இரந்த பரிசில்அஃ திருளின்
இனமணி நெடுந்தேர் ஏறி
இன்னா துறைவி அரும்படர் களைமே.

—புறநானூறு, ௧௪௫.

பரிசில் என்றதும், பொன் பெறுதலும் பொருள் பெறுதலும் நினைவுக்கு வரும். 'பரணர்' என்னும் பெரும் புலவர் 'பேகன்' என்னும் வள்ளலை உருக்கமாகக் கேட்கும் ஒருவகைப் பரிசு இச் செய்யுளில் வருகின்றது. அவர் கேட்பது இது:

"மெல்லிய இயல்பினையுடைய கரிய மயில் குளிரால் நடுங்கும் என்று இரக்கங்கொண்டு, உடனே மேற்போர்வையை உதவிய அழியாத தூய புகழையுடைய பேக! மதம் பொருந்திய யானையையும் மனக்கிளர்ச்சி மிக்க குதிரையையும் உடைய பேக! யாம் இப்போது பசித்து நும்பால் பரிசிலுக்கு வரவில்லை. சுற்றத்தாரைப் பசியிலிருந்து காக்கவேண்டிய பாரமும் இல்லேம். களாம்

பழத்தை ஒத்த கருநிறமான தண்டினையுடைய எனது சிறிய யாழை இசைநயம் விரும்பி வாழ்வோரும் தலையசைத்து மகிழும்படி இசை மீட்டி யாம் உம்மிடம் இரந்து வேண்டும் பரிசில், 'அருளியல்லை விரும்புவோய், நீ அறவியல்லை விரும்பிச் செய்வாயாக' என்னும் இதுவே.

இதைக் கேட்டதும், பரணர் பெருமானது உள்ளத் தூய்மை கருதிப் பேகனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனல், அதே நேரத்தில் கவலையும் உண்டாயிற்று. 'மயிலுக்குப் போர்வை வழங்கிய அருளிச் செயல் முதலியவற்றால் புலவர் 'அருளியல்லை விரும்புவோய்' என நம்மை அழைத்திருக்கின்றார். ஆனல், நம்மிடம் அறவியல்பில் ஏதோ வழுவுதல் இருத்தலால், 'அறவியல்லை விரும்பிச் செய்வாயாக' எனவும், தமக்கு ஏதோ வேண்டிக்கொள்வதுபோல நமக்கு ஒன்று அறிவுறுத்தியிருக்கிறார்' என்று அவன் அறிந்து கவலையுற்றான். அவன் கலக்கத்துக்குத் தீர்வாகவே இச் செய்யுளின் இறுதி இரண்டு வரிகள் அமைந்திருக்கின்றன.

பேகன் யாதோ காரணமாகத் தன் மனைவியாகிய கண்ணகி என்பாளைச் சில நாட்கள் துறந்திருந்தான். அச் செயல் அறம் உடையதாகப் பரணர் முதலிய ஆசிரியர்களுக்குத் தோன்றவில்லை. அருள் அறத்தையே அடிப்படையாக உடையது. அறம் என்பது ஒழுங்கு. மாசு நீக்குதல்; கோணல் போக்குதல். அருளை விரும்புவோர், தம் செயல்களில் ஒழுங்கு வழுவாதபடி காத்துக்கொள்ளுதல் கட்டாயமாகும். ஒழுங்கு வழுவின், அருள் நிரம்பாது. ஆதலால், அருளை விரும்பும் பேகன் அறமும் உடையனாய் விளங்க வேண்டுமென்பது பரணர் முதலியோர் கருத்து. ஆதலால், பேகனிடம் அவர் விரும்பிய அறப் பரிசில் பின்வருமாறு என்று அவரே புலப்படுத்துகின்றார்.

"அது, இன்றை இரவில், இனமாகிய மணிகளால் அணிசெய்யப்பட்ட உயர்ந்த தேரில் ஏறிச் சென்று, துன்ப

வுருவாய் உறைகின்றவளான கண்ணகியின் பொறுத்தற் கரிய நினைவுநோயைத் தீர்ப்பாயாக" என்பது.

பரணர்பெருமான் எவ்வளவு இரக்கங்கொண்டு இச் செய்யுளை மொழிந்திருக்கின்றார்! பேகன் கானக மயிலுக்குப் போர்வை வழங்கிய அருள் எப்படி? பரணர் இக் கண்ணகி மயிலுக்கு ஓர் ஆதரவுப் போர்வை தேடும் அருள் எப்படி?

**குறிப்புரை:** மடத் தகை - மெல்லிய இயல்பினையுடைய. மா - நீல நிறமான. பனிக்கும் - நடுங்கும். அருளி - இரங்கி. படாஅம் - போர்வை. கெடாஅ - அழியாத. நல் - உயர்ந்த. இசை - புகழையுடைய. கடாம் - மதம். கலி - மனக் கிளர்ச்சி. மான் - குதிரை. கோட்டு - தண்டினையுடைய. புரிந்து உறையுநர் - விரும்பி வாழ்கின்றவர்கள். நடுங்க - தலையசைக்கும்படி. பண்ணி - மீட்டி. அறம் செய்தீமோ - அறம் செய்வாயாக. வெய்யோய் - விரும்புவோய். இருளின் - இரவில். இன்னாது - துன்பமாக; துன்பக்கோலத்துடன். உறைவி - உறைகின்றவளின். படர் என்றது இங்கே மனநோய். களைமே - நீக்குவாயாக. (அரு)

இடர்

[வாழ்க்கையிற் சில சிக்கலான நிலைகள் ஏற்படுவதுண்டு. தாமே தம்மை ஒறுத்துக்கொள்ளும்படி நேரலாம். தம்மால் தீமை சிறிதும் நிகழாமைப்பொருட்டும், மேலும், வினைகள் பெருகாமைப்பொருட்டும் அங்ஙனம் அடியோடு பொருள்களிடம் பற்றற்று நிற்கும்படி அமையும். இடர் என்பது அது. அக் காலங்களில் மூன்னோர் மகிழ்வோடு புறத்துறவு மேற்கொண்டனர்.]

மண்டமர் அட்ட மதன்உடை நோன்றாள்
வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே!
பொங்குநீர் உடுத்தஇம் மலர்தலை யுலகத்து
நின்றலை வந்த இருவரை நினைப்பின், [லர்;
தொன்றுறை துப்பின்நின் பகைஞரும் அல்
அமர்வெங் காட்சியொடு மாறெதிர் பெழுந்தவர்;

நினையுங் காலை நீயும் மற்றவர்க்
கனையை யல்லை அடுமான் தோன்றல்!
பரந்துபடு நல்லிசை எய்தி மற்றுநீ
உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்
ஒழித்த தாயம் அவர்க்குரித் தன்றே; [றும்
அதனால், அன்ன காதலும் அறிவோய்! நன்
இன்னுங் கேண்மதி; இசைவெய் யோயே!
நின்ற துப்பொடு நிற்குறித் தெழுந்த
எண்ணில் காட்சி இளையோர் தோற்பின்,
நின்பெருஞ் செல்வம் யார்க்கெஞ் சுவையே?
அமர்வெஞ் செல்வ! நீஅவர்க் குலையின்,
இகழுநர் உவப்பப் பழிஎஞ் சுவையே;
அதனால், ஒழிகதில் அத்தைநின் மறனே;
[வல்விரைந்
தெழுமதி; வாழ்கநின் உள்ளம்; அழிந்தோர்க்கு
ஏம மாகும்நின் தாள்நிழல் மயங்காது,
செய்தல் வேண்டுமால் நன்றே; வானோர்
அரும்பெறல் உலகத் தான்றவர் [கே.
விதுப்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்

—புறநானூறு, உகந.

ஆண்மைச் செயலில், மிகச் சிறந்தது, தவறு செய்வோர் வழியில் தாமும் வழுவிவிடாமல் கண்ணோட்டமின்றிப் பிழையை எடுத்துக்காட்டி அவரைத் திருத்தி நல்வழிப்படுத்துதலாகும். சங்ககாலத்துப் புலவர்களிடம் இந்த அருஞ்செயல் சிறந்திருந்தது. தவறுகள், மிகக் கடுமையான நிலைமையிலும், எடுத்துக்காட்டப்பட்டன.

மிகச் சான்றோனும் அறிஞனுமான கோப்பெருஞ் சோழனோடு அவன் பிள்ளைகள் இருவர் பகைகொண்டு

அவன்மேற் போருக்குப் படைதிரட்டி எழுந்தனர். கோப்பெருஞ்சோழன் நட்புச் செய்தலிலும் செய்யுள் செய்தலிலுங்கூட வல்லவன். அவன் பிசிராந்தையார் என்னும் மாபெருஞ் சான்றோர்க்கும், பொத்தியார், புல்லாற்றூர் எயிற்றியனூர் முதலிய தக்கோர்க்கும் உயிர் நண்பன். அத்தகையோனுக்கு இத்தகைய இடுக்கண் நேர்ந்துவிட்டது. புதல்வர்களோடு போர் என்பது, காது கொடுத்துக் கேட்கத்தக்கதாக இல்லை. ஒன்று, போரிட்டு அப் புதல்வர்களை மாய்க்கவேண்டும். அல்லது, ஆட்சியை அவர்களிடம் ஒப்புவித்துத் தான் நாட்டினின்றும் நீங்கவேண்டும். இந்நிலைமையே கோப்பெருஞ் சோழனுக்கு நேர்ந்தது. தந்தையாகிய தன்மீதே போருக்கு எழுகின்ற குணக்கேடுடைய பிள்ளைகளிடம் ஆட்சியை ஒப்புவித்தல் எண்ணிறந்த குடிமக்களுக்குக் கெடுதி விளைவிக்கும் என்று சோழன் உள்ளத்துக்குத் தோன்றியது. ஆகவே, அப் பிள்ளைகளைப் பிள்ளைகளாகக் கருதாமல் பகை என்று எண்ணி அவரை எதிர்த்துத் தாக்குவதற்கே முடிவாகத் துணிந்து தானும் போருக்கு ஆயத்தமானான்.

கோப்பெருஞ்சோழன் நண்பர்களுக்கு இம் முடிபு பிடிக்கவில்லை. 'இபபோது பிள்ளைகள் குணக்கேடு உடையவர்கள் என்று ஆட்சியை ஒப்புவிக்காமற்போனாலும், கோப்பெருஞ் சோழனுக்குப் பின்பும் ஆட்சிக்குரியோர் அப் பிள்ளைகளல்லாமல் வேறு எவர்?' என்பது அவர்கள் கருத்து. கருத்துக்களை உரிய காலத்திற் கண்ணோட்டமின்றி எடுத்துக்காட்டுவதன்றோ நண்பர் கடமை! புல்லாற்றூர் எயிற்றியனூர் என்னும் பெரியார், பின்வருமாறு அரசனுக்குத் துணிபு தெருட்டினார்:

"வேந்தே, நின்மேற் போர்க்கு எழுகின்ற இருவரையும் நினைத்தால், அவர்கள் நினக்குப் பகையரசராகிய சேர பாண்டிய மன்னர்கள் அல்லர்; வாளா போர்த் துடிப்பினால், மாறுபட்டெழுந்த மடவோர்; நீயும் அவர்களுக்குப் பகையரசன் அல்லன்.

"மேலும், நீ பலகாலம் அரசாட்சி செய்து பெரும் புகழ் எய்திப் பின்னொருகால் மறுமையுலகம் செல்லுவ தாயினும், அப்போதும் இவ் வரசுரிமை அவருக்கன்றோ உரியது? அது நினக்குத் தெரிந்த செய்தியே."

"இன்னும் ஒன்று, இருதிறத்தாரும் போரிடுவ தாகவே வைத்துக்கொள்வோம். புதல்வர்கள் தோற்றால் நின் பெருஞ் செல்வத்தை யாருக்கு மிச்சப்படுத்துவாய்? நீ அவருக்குத் தோற்றால், பகை யரசர்களாகிய சேர பாண்டியர்கள் உள்ளம் மகிழும்படி நிலையான பழிதானே உனக்கு இவ் வுலகத்தில் மிச்சமாகும்?

"ஆதலால், போர்ச்செயலை உடனே விடு. துறவுக்கு விரைந்து எழுவாய் நின் துணிவு வெல்க. நினக்கும் பிறர்க்கும் ஒரு தீங்கும் உண்டாகாத நிலைமையில் உன் செயல்கள் நன்மையில் துலங்குதல் வேண்டும். விண்ணோர் விரைந்த விருப்பத்தோடு நின்னை விருந்தாக எதிர்கொள் ளும்படி நின் நிலைமைகள் பொலிக."

கோப்பெருஞ்சோழன் மணியன்ன இவ் வறிவுரைப் படியே நாட்டை விடுத்துத் துறவெய்தினான். தவத்தால் மாட்சிமைப்பட்டு, மலைபோன்ற பெரும்புகழை இவ்வுல கில் நிறுவி, விண்ணோர்க்கு விருந்தாயினான். புறத்துறவு, நாட்டில் ஒரோவொருகால் தோன்றிய முறை இதனால் நினைவுகூரபபடும்.

**குறிப்புரை :** மண்டு அமர் - செறிந்த போரில். மதன் உடை - மிகுதி பொருந்திய. நோன் தாள் - வலிய முயற்சியை யுடைய. பொங்கு நீர் - கடல். நின் தலை வந்த - நின் மேல் படையெடுத்து வந்த. தொன்று உறை துப்பின் - பழையதாய்த் தங்கிய வல்லமையுடைய. அமர் வெம் காட்சியொடு - போரின் கண் விரும்பிய அறிவோடு. மாறு - நினக்குப் பகையாய். எதிர்பு - வேறுபட்டு. எழுந்தவர் - எழுந்தவராவர். மற்றவர்க்கு என்பதில் மற்று, அசை. தோன்றல் - தோன்றலே! இசை - புகழ். தாயம் - சொத்துரிமை. நன்றும் - பெரிதும். கேண் மதி - கேள்; இதில் மதி, முன்னிலை அசை. இசை வெய்யோய் - புகழை விரும்புவோய். நின்ற துப்பொடு - நிலைபெற்ற வலிமை

யோடு. எண் இல் - ஆராய்ச்சியில்லாத. காட்சி - அறிவை யுடைய. இளையோர் - இச் சிறுவர். எஞ்சுவை - மிச்சமாக வைப்பாய். அமர் வெம் - போரை விரும்பிய. உலையின் - தோற்றால். இகழுநர் - இகழும் பகைவராகிய சேர பாண்டியர். தில் என்பது, விருப்பக்குறிப்பு உடையது; நீ மறன் ஒழிக என்பது எமது விருப்பம் என்றபடி. அத்தை - அசை. மறன் - இப் போர் வீரம். எழுமதி - எழுக. உள்ளம் - துணிவுள்ளம். அழிந்தோர்க்கு ஏமம் ஆகும் - வாழ்க்கை நிலைகுலைந்தோர்க்குப் பாதுகாப்பு ஆகின்ற. மயங்காது - அங்ஙனம் பிறர்க்குப் பாதுகாப்பாகின்ற நிலையிற் குறைவில்லாதபடி என்பது. ஆல், அசை. ஆன்றவர் - பொருந்தியுள்ளவர். விதும்புறு - விதுப்புற்ற; விரைந்த. எதிர்கொளற்கு நன்றுசெய்தல் வேண்டும் என்று உரைத்துக்கொள்ளவேண்டும். (அச)

### பற்றும் அன்பும்

[பற்று, தீமைகட்கெல்லாம் அடிப்படை. அன்பு, நன்மைகட்கெல்லாம் ஊற்று. வாழ்க்கையின் இனிமை, அன்பில் உள்ளது. செல்வர்கட்கு ஈகையினாலும் புலவர்கட்கு நலம் பாராட்டலாலும் அன்பு மேலுமேலுங் கனிந்து பொங்குகின்றது புலவர்களின் செஞ்சொல் ஆற்றலென்பது அன்பினைச் சிந்தி எங்கும் அதனைப் பரவச்செய்தலேயாகும்.]

மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே;
துன்னருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்
இன்மையின் இரப்போர்க்கு ஈஇ யாமையின்
தொன்மை மாக்களின் தொடர்பறி யலரே;
தாள்தாழ் படுமணி இரட்டும் பூநுதல்
ஆடியல் யானை பாடுநர்க் கருகாக்
கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்
பாடி நின்றனெ னாகக், கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
நாடிழந் ததனினும் நனியின் னாதென

வாள்தந் தனனே தலையெனக் கீயத்
தன்னிற் சிறந்தது பிறிதொான் றின்மையின்;
ஆடுமலி உவகையொடு வருவல்
ஓடாப் பூட்கைநின் கிழமையோற் கண்டே.

—புறநானூறு, கசுரு.

ஓர் அறிவு, பொருளை விரும்பித் தமையன் உயிரையுங் கவர விரும்புகின்றது. மற்றோர் அறிவு, தன் உயிரையுங் கொடுத்துப் பிறர்க்குப் பொருள் உதவ முயல்கின்றது. இவற்றுள் எவ்வளவு நேர் முரண்பாடு! இரண்டும் அறிவேயாயினும் ஒன்று அன்பு முதலிய நல்லியல்புகளோடுகூடாமல் வெறும் பற்றுக்கு இரையாகியது. மற்றொன்றோ, பற்று முதலிய வல்லியல்புகளோடு சாராமல் தூய அன்புக்குத் துணைபோகின்றது.

தமது தலைமையையே சிறப்பாக எண்ணிக்கொள்ளும் உயர்ந்த செல்வர்கள், அதனால் இரப்போர்க்கு இரக்கங் காட்ட முடியாமையால், தொன்றுதொட்டுப் புகழ் எய்தி வரும் வள்ளல்களின் வரிசையில் வைத்துத் தொடர்பாக எண்ண இடமில்லாதவராய்த் தங்கள் காலத்திலேயே விளக்கம் அவிந்து அதோடு மாய்ந்து விடுகின்றார்கள். ஆனால் இந்த நிலையில்லாத உலகத்தில் நிலைத்து விளங்குதலைக் கருதினோர், தாம் தம் உயிரை மாய்த்தேனும் புகழ்தக்க செயல்களைச் செய்து என்றும் அழியாதவாறு தம் புகழை நிலைக்கச் செய்துவிடுகின்றனர். இச் செய்யுளின் முதல் ஐந்து வரிகளில் பெருந்தலைச்சாத்தனார் என்னும் நற்புலவர் இக் கருத்துக்களை விளக்கி, பின் வரிகளில் அவற்றிற்குரிய நிகழ்ச்சியாகிய எடுத்துக்காட்டினையும் அழகாகக் கொடுத்திருக்கின்றார்.

மேற்காட்டிய இருவகை அறிவு நிலையையும் ஒரே குடும்பத்தில் தோன்றிய உடன்பிறந்தார் இருவரிடம் காண்பதென்றால், அது வியப்பன்றோ? குமணன் இளங்குமணன் என்னும் அண்ணன் தமபியர் இருவர் இருந்

தனர். குமணன் அன்பின் தலைவன். இளங்குமணன் பற்றின் கொள்கலம். இளங்குமணன் தன் அண்ணனை குமணனிடம் பகையுற்று அவன் நாட்டைக் கைப்பற்றி அவனை வெளியில் துரத்திவிட்டான். குமணன் நல்லோன் ஆனமையால் அவன் சென்றவிடத்திலும் அவனுக்குப் புகழ் பரந்தது. இளங்குமணனுக்குப் பழியே மிகுந்தது. பொறுக்கமாட்டாத இளையோன், தமையனைக் கொலை செய்துவிட எண்ணி அது செய்வார்க்கு உதவிசெய்வ தாகவும் விளம்பினன். பெருந்தலைச்சாத்தனார் என்னும் புலவர் குமணன் நிலையறியாது அவனை ஓரிடத்தில் சந்தித் துப் பரிசில் விரும்பினர். அன்பும் அருளுமே உருவான அவ் வள்ளல் தன் கையிலிருந்த வாளை அப் புலவர்பெருமா னிடம் கொடுத்துத் தன் தம்பியின் கருத்தையுந் தெரி வித்து, தன்னைக் கொலைசெய்து சென்று தன் தம்பியிடம் பொருள் பெற்றுக்கொள்ளும்படி சொன்னன். அப்போது அவன் மற்றொரு கருத்துந் தெரிவித்தது மிக்க உருக்கந் தருவதாகும். "புலவராகிய தேவரீர் பரிசில் பெறுது போதல், நான் நாடு இழந்ததைவிட மிகவுந் துன்பந்தரு வது; பிறர்க்கு ஒன்று கொடுப்பதென்றால், தன்னையே கொடுப்பதைவிடச் சிறந்தது வேறில்லை" என்பது. புல வர், திடுக்கிட்டு, வாளுடன் நேரே இளங்குமணனிடம் சென்று, கரையாத அவன் கல்நெஞ்சத்தையும் தம் செஞ் சொற்களாற் கரையச்செய்து இருவரையும் ஒற்றுமைப் படுத்தி வாழச் செய்தார்.

குமணன் பெருந்தன்மையும், பெருந்தலைச் சாத்த னரின் புலமைத் திறனும் இனி என்றேனும் அழியுமோ? வாழ்க்கையின் இனிமை பற்றில் உள்ளதோ அன்பில் உள்ளதோ என்பதை அறிதற்கு இதனினும் வேறு எடுத் துக்காட்டும் வேண்டுமோ?

**குறிப்புரை:** மன்னு - நிலையாத. நிரீஇ - நிறுவி. துன் அரு சிறப்பின் - அணுகற்கரிய தலைமையையுடைய. இன்மை யின் - வறுமை காரணமாக. தொன்மை மாக்களின் - தொன்று தொட்டு விளங்கிவரும் வள்ளல்களைப்போல. தொடர்பு - தமக்

குப் பின்னும் தம் பெயர் தொடர்புகொண்டு நிலைத்தலை. அறி யலர் - காணாதவராகின்றனர். தாள் தாழ் - கால் வரையில் தொங்குகின்ற. படு மணி - ஒலித்தலையுடைய மணி. இரட்டும் - மாறி ஒலிக்கின்ற. பூ நுதல் - புகர் பொருந்திய நெற்றியை யுடைய. ஆடு இயல் - வெற்றியின் இயல்பையுடைய. அருகா - இறுக்கஞ் செய்யாத. இசை - புகழ். வய மான் - வலிய குதி ரையையுடைய. தோன்றலை - குமணனை என்றபடி. கொன்னே - வீணாக. வாடினன் பெயர்தல் - வாடினேனாய் நீங்குதல். ஆடு மலி - கருதியது நிறைவேறியதென்னும் வெற்றி நிறைந்த. வரு வல் - வருகின்றேன்; அதாவது வந்தேன் என்றபடி. ஓடா - புறங்கொடாத. பூட்கை - பூண்கை; அதாவது, மேற்கொள்ளுங் கொள்கையையுடைய. கிழமையோன் கண்டு - நினக்கு உரியோ னான தமையனைக் கண்டு. 'பாடுநர்க்கு அருகாத் தோன்றலைப் பாடி நின்றனெனாக, தன்னிற் சிறந்தது பிறிதொன்றின்மையின் தலை எனக்கீய வாள் தந்தனன். அதனால், நின் கிழமையோன் கண்டு உவகையொடு வந்தேன்' என்று கூறியதாக முடித்துக் கொள்ளவேண்டும். (அகு)

## உருகிய உள்ளம்

[உலகம் அன்பினால் உருக்கத்தைப் பெறவேண்டும். அன்பு, குண நலங் கண்டபோது அரும்புவது. பிறருள்ளத்தில் அன்பை விளைப்பதற்கு மக்கள் தாம் குணமாட்சிமையில் விளங்க வேண்டும். உலகத்தை அன்புவண்ணமாக்க விரும்பினோர் இவ்வண்ணமே ஒழுகினர்.]

பாடுநர்க்கு ஈத்த பல்புக ழன்னே ;
ஆடுநர்க்கு ஈத்த பேரன் பினனே ;
அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்னே ;
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே ;
மகளிர் சாயல் ; மைந்தர்க்கு மைந்து ;
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில் ;
அனையன் என்னாது, அத்தக் கோனை
நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று ;
பைதல் ஒக்கல் தழீஇ யதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர் !

நனந்தலை யுலகம் அரந்தை தூங்கக்
கெடுவில் நல்லிசை சூடி
நடுகல் ஆயினன் புரவலன் எனவே.

—புறநானூறு, உஉக.

மக்களுக்கு அன்பும் உருக்கமும் எப்படி வரும்? உயர்ந்தோரிடத்தில் உள்ள குண நலங்களே மற்றவர்கள் உள்ள முருகுதற்கு ஏதுவாயிருக்கின்றது. ஆதலால், உலகத்தில் அன்பு தழைக்கவேண்டுமென்று விரும்புகின்றவர்கள், பிறருள்ளத்தில் அன்பு பொங்கியெழும்படி தாம் குணமலைகளாக விளங்குதல் முதன்மையானது. கோப்பெருஞ்சோழன் அவ்வாறு நற்குணச் செம்மலாய் விளங்கிப் பொத்தியார் முதலிய அறிஞர்களின் உள்ளத்தில் அன்பு பொங்கி யெழும்படி செய்த அரிய நிலை இச் செய்யுளில் விளங்குகின்றது.

'கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து உயிர் துறந்தனன்; அவன் உயிர் துறந்த இடத்தில், அந் நினைவின் அடையாளமாகக் கல் நடப்பட்டது. கோப்பெருஞ்சோழன் என்னும் புரவலன் அங்ஙனம் நடுகல் ஆனமை கண்டு பொத்தியார், அவன் அருமை பெருமைகளை நினைந்து ஆற்றாது நெஞ்சுருகி அன்பு பிழம்பாய் உள்ளம் பொங்கினார். சோழனுயிரைக் கவர்ந்த கூற்றுவனைத் தாம் ஒருவரே வைதல் போதாதென்று புலவர் பலரையும் ஒருங்கு அழைக்கின்றார். இவ்வளவு பேரன்பினை அவருள்ளத்தில் பொங்கித் ததும்ப வைத்தது எது? கோப்பெருஞ்சோழனது குணச் சிறப்பே. அக் குணநலங்களை இச் செய்யுளின் முதல் ஆறு வரிகளில் பொத்தியார் உருக்கமாக எடுத்து மொழிகின்றார்.

'பாடுநர்க்கு ஈத்த புகழுடையவன்; ஆடுநர்க்கு ஈயும் பேரன்பினன்; அறவோராற் புகழப்பட்ட நட்பமான ஆட்சியுடையவன் திறமையுடையோர் போற்றிய நிலைத்த நட்பினன். மகளிர்க்கு மென்றன்மையன்; வலியோர்க்கு

வலியன். குற்றமற்ற கேள்வியையுடைய பெரியோர்களுக்கு உறுதுணையானவன்.'

இங்ஙனம் பொத்தியார் சோழனுடைய அருமை பெருமைகளை எடுத்துப் பாராட்டி அன்புகொள்கின்றார்.

உலகம் பிறரைக் குறைசொல்லி என்ன பயன்? மக்கள் தாம்தாம் குணமாட்சிமை உடையவர்களானால், உலகமெங்கும் அன்பு வெள்ளமே பெருகியோடும்.

குறிப்புரை: பாடுநர்க்கு - புலவர்க்கு. ஆடுநர்க்கு - கூத்தர்க்கு. ஆய் கோல் - நுண்மை பொருந்திய ஆட்சி. திண் அன்பினன் - நிலைத்த நட்பினையுடையவன். சாயல் - மென்மையுடையவன். மைந்தர்க்கு - வலிமையுடைய வீரர்க்கு. மைந்து - வலிய வீரன். துகள் அறு - குற்றமற்ற. புக்கில் - புகலிடமானவன்; அதாவது, உறுதுணையானவன். அனையன் என்னாது - அத்தகைய அருமைப்பாடுடையவன் என்று கருதாமல். அத தக்கோனை - அத் தகுதியுடையோனை. நினையாக் கூற்றம் - நலம் பாராத கூற்றுவன். உய்த்தன்று - உய்த்தது; அதாவது, கொண்டுபோயிற்று. பைதல் ஒக்கல் தழீஇ - அதனால், துன்பமுற்ற சுற்றத்தாரையும் சேர்த்துக்கொண்டு. அதனை - அக் கூற்றத்தை. வைகம் - வைவோம். வம்மோ - வாருங்கள். நனந்தலை - அகன்ற இடத்தையுடைய. அரந்தை தூங்க - துன்பம் மிகும்படி. கெடுவில் - கேடில்லாத. என - என்று சொல்லி. 'புலவீர்! புரவலன் நடுகல் ஆயினன் என அதனை வைகம் வம்மோ' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். (அசு)

### கூற்றுவன்

[உயிரை உடம்பிலிருந்து பிரித்தலையுடையவன் என்னும் பொருளில் கூற்றுவன் என்னுஞ் சொல் வழங்குகின்றது. தக்கோரைக் கூற்றுவன் தாக்க முடியாது. இரந்துதான் அவருயிரை அவன் பெற்றுச் செல்லுதல் வேண்டும். உயிர் அவர்க்கெல்லாம் இனிதாகப் பிரியும் என்பது கருத்து. இச் செய்யுளில் இப் பொருள் விளங்குகின்றது.]

செற்றன் றாயினும் செயிர்த்தன் றாயினும்
உற்றன் றாயினும் உய்வின்று மாதோ;

பாடுநர் போலக் கைதொழு தேத்தி
இரந்தன் றாகல் வேண்டும், பொலந்தார்
மண்டமர் கடக்குந் தானைத்
திண்டேர் வளவற் கொண்ட கூற்றே.

—புறநானூறு, உ௨௬

நல்வினையும் நல்லொழுக்கமும் மெய்யுணர்வும் அருளாற்றலும் உடையவர்களைக் கூற்றுவன் தாக்கான் என்று ஒரு கருத்து நமது நாட்டில் வழங்கி வருகின்றது. அக் கருத்தோடு இச் செய்யுள் இயற்றப்பட்டிருக்கின்றது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை மாறோக்கத்து நப்பசலையார் அவன் இறந்தபொழுது பின் வருமாறு இச் செய்யுளிற் பாடினர்.

"கூற்றுவன் வளவனிடம் கறுவுகொண்டோ, வெளிப் படையாய் வெகுண்டோ, கையால் தீண்டியோ இருந்தால் அவன் பிழைத்திரான். பாடும் இரவலரைப்போல வந்து கைதொழுது புகழ்ந்து அவனுயிரை இரந்துசென்றானதல் வேண்டும்."

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் அத்துணைத் தக்கோன் என்பது அவர் கருத்து. இனிதாகவும் எளிதாகவும் உயிர் பிரிந்தது; நோயால் வருந்திப் பிரிந்த தன்று என்பது அங்ஙனங் கூறியதன் பொருளாகும். நல்லோர்க்கு உயிர் பிரியும் இயல்பு இத்தகையது என்றபடி.

குறிப்புரை: செற்றன்று ஆயினும் - செற்றது ஆயினும்; செற்றது - கறுவியது; இது மனத்துள் நிகழுஞ் செயல். 'செற்ற தானும் உய்வின்று, செயிர்த்ததானும் உய்வின்று, உற்ற தானும் உய்வின்று' என்றபடி. செயிர்த்தன்று - செயிர்த்தது; வெளிப்படையாகச் சினந்தது. உற்றன்று ஆயினும் - உற்றது ஆனாலும்; கையால் தீண்டி ஏர்த்ததானாலும். உய்வு இன்று - பிழைத்தல் இல்லையாகும்; மாது, ஓ, அசை. பாடுநர் - பொது வாக இங்கே, புகழ்பாடி வரும் இரவலர் என்னும்பொருட்டு.

இரந்தன்றாகல் வேண்டும் - இரந்ததாகல் வேண்டும்; அவன் உயிரை இரந்ததாகல் வேண்டும். பொலம் தார் - பொன்னாலான அடையாள மாலையையும். மண்டு அமர் கடக்கும் தானை - செறிந்த போரில் எதிர்நின்று தாக்கி வெல்லும் படையையும். திண் தேர் - உறுதியான தேரையும் உடைய. வளவன் கொண்ட கூற்று - வளவனை உயிர்கொண்ட கூற்றுவன். 'கூற்றுவன் இரந்தானாகல்வேண்டும்' என்றபடி. (அஎ)

## தவவொழுக்கம்

[உடலையும் உணர்வையும் தூய்மையாய் ஆற்றலாக்கிக்கொள் வதையே 'தவவொழுக்கம்' என்பர். முதற்காலங்களில் இவ் வொழுக்கந் தாங்குவோர் வாழ்வு செயற்கையும் இயற்கையுங் கலந்து காணப்படும். பிற்காலங்களில் முற்றிலும் இயற்கை யாகவே நிகழும். பண்டு, ஆற்றல் வாய்ந்த இவ் வாழ்க்கை யில் வாழ்ந்தோர் பலராவர்.]

ஓவத் தன்ன இடனுடை வரைப்பிற்
பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்;
கழைக்கண் நெடுவரை அருவி யாடிக்
கான யானை தந்த விறகின்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே.

—புறநானூறு, உருக.

மனத்தையும், அறிவையும், உணர்வையும் ஆற்றலாக்கி உயர்த்தும் ஒழுகலாறே சமய வாழ்க்கை அல்லது அருள் வாழ்க்கை எனப்படுவதாகும். இதனால், உடம்பும் நோ யின்றித் தூய்தாய் ஆற்றலும் விளக்கமும் பெறுகின்றது. பண்டைக்காலத்திலிருந்தே தமிழ் மக்கள் இச் சிறந்த ஆற்றலுச்சான வழித்துறைகளில் நிரம்பப் பழகி வந்திருக் கின்றார்கள்.

மிகவும் உயர்ந்ததும் தூயதுமான இப் பழக்கத்தில் தலைப்பட்டோர், உலகப் பொருள்களில் அவ்வப்போதும்

வேண்டுவதைமட்டும் தகுதியாகப் பயன்படுத்திக்கொள்வர். அவர்கள் வளர்ச்சிக்கேற்றபடி, முதலிற் பயன்படுத்திய பொருள்கள் பின்பு பயன்படமாட்டாவாய்க் கழியும். இத்தகைய உயிர்வளர்ச்சி யுடையவர்களை நம் நாட்டார் 'அறவோர்' 'துறவோர்' 'முனிவர்' 'சான்றோர்' முதலிய சொற்களால் வழங்குவர்.

முன்னே, ஓவியம்போன்ற இடத்தையுடைய மாளிகைகளில், கொல்லிப் பாவையைப்போன்ற கவர்ச்சி மிக்க உடம்பழகினையுடைய சிறிய வளையலணிந்த மகளிரும் தம் அணிகலன் நிலை நெகிழும்படி நன்மக்களிற் சிலர் அவரோடு அவ்வளவு விரும்பியிருந்திருப்பர். பின்பு, மூங்கில் வளர்ந்த இடங்களையுடைய உயர்ந்த மலையிடமாகிய இயற்கை வெளியில் அருவி நீராடிக் காட்டு யானைகள் தாமே உணர்ந்துகொண்டுவந்து கொடுத்த விறகுகளைக் கொண்டு மிக்க வெம்மையுடைய செந்தீயை வேள்வியாக வளர்த்து வழிபட்டுத் தமது முதுகில் முறுக்குண்ட சடையைத் தாழவிட்டு ஈரம் புலர்த்தும் தவவொழுக்கமுடையராயிருப்பர். முன்பு செயற்கையும் இயற்கையும் கலந்த வாழ்வு; பின்பு இயற்கை வாழ்வு.

இங்ஙனம் முன் நிலையிலும் பின் நிலையிலும் தாம் கண்ட ஒருவரைப்பற்றி மாற்பித்தியார் இச் செய்யுளில் வியந்து பாடியிருக்கின்றார். 'முன்னே இப்படி உலகியலில் தோய்ந்து கிடந்தவரா இப்போது இப்படி அருளியலில் முன்னேறி விளங்குகின்றார்' என்று அவர் உள்ளம் எண்ணி வியந்திருக்கும். தமிழ் நாட்டில் இத்தகைய ஆற்றலான தவவொழுக்கத்தில் முன்பு பலர் விளங்கியிருந்தனர். அருளாற்றலைத் தமது பழக்கத்தில் நன்கு தோய்ந்து கண்டு, பிறர்க்கும் விளக்கிய அரிய தெய்வ நாடன்றோ இது!

குறிப்புரை: ஓவத்தன்ன - ஓவியத்தைப்போன்ற; அத்தனை அழகிய இடம் என்பது கருத்து. வரைப்பில் - வீட்டில். மள்ளன் - இளைஞனை. கண்டிகும் - இதோ கண்டேம். கழை - மூங்கில் வளர்ந்த. கண் - இடத்தையுடைய. ஆடி - நீராடி.

தந்த - கொண்டுவந்த. கடு தெறல் - மிக்க வெம்மையையுடைய. வேட்டு - வளர்த்து வழிபட்டு. புறம் தாழ் புரிசடை - முதுகில் தாழ்ந்த முறுக்குண்ட சடையை. 'புலர்த்துவோனாகிய முன்பு நெகிழ்த்த மள்ளனை இதோ கண்டேம்' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும். (அஅ)

### அன்பும் ஆற்றலும்

['அன்புள்ள இடத்தில் ஆற்றல் வீறிட்டெழுகின்றது. ஆற்றல் உண்டாகும் வாயில் இதுவே ; இதனால், உடம்பின் கருவிகளும் ஆற்றல் பெறுகின்றன. உலகத்தை அழிக்கவும் ஆக்கவும் இந்த ஆற்றலுக்கு இயலும். அன்பின் பெருமையை அளவிட்டுணரவும் முடியுமோ !']

வளியே! எதிர்போம் பலகதிர் ஞாயிற்று
ஒளியுள் வழியெல்லாம் சென்று, முனிபு எம்மை
உண்மை நலனுண்டு ஒளித்தானைக் காட்டிமோ?
காட்டாயேல், மண்ணகமெல்லாம் ஒருங்கு சுடு
கண்ணீர் அழலால் தெளித்து. [வேன்என்

—கலித்தொகை, கசச : சㅇ - சச.

அன்பினால் உள்ளமும் உடம்பும் பேராற்றல் பெறுகின்றதென்பதற்கு இச் செய்யுட் பகுதியிற் சிறந்த எடுத்துக்காட்டு வருகின்றது.

தலைவனைப் பிரிந்திருக்குந் தலைவி கைகடந்த ஆற்றாமை உடையவளானாள் ; எதை எதையோ நோக்கி தன் தலைவனைத் தேடித் தருமாறு கேட்டாள். எதுவும் விடை சொல்லவில்லை. அந் நேரத்தில் தன்மேல் காற்று வீசுவதை உணர்ந்தாள் ; உடனே காற்றை நோக்கிக் கேட்கத் தொடங்கினாள்.

"காற்றே ! நினக்கு எதிராகப்போகும் பல கதிர்களையுடைய ஞாயிற்றின் ஒளி உள்ள இடமெல்லாம் நீ சென்று, எமது இயற்கையழகை நுகர்ந்து பின்பு எம்மை வெறுத்து ஒளித்துக்கொண்ட எம் தலைவனை, தேடிக் கொண்டுவந்து காட்டுவாய் ; அப்படிக் காட்டாயானால், என் வருத்தக்

கண்ணீரைத் தெளித்து அதன் அழலால் இந்த மண்ணக மெல்லாம் நின்னை ஒருங்கே சுட்டுவிடுவேன்.''

எப்படியிருக்கின்றது ஒரு மெல்லியலாளின் உணர் வாற்றல். உண்மை அன்பினாலன்றோ இவ்வளவுக்கு அது, ஆற்றல் பெற்றது. கண்ணகி மதுரையை எரித்தது இங்கே நினைவுகூர்தற்குரியது. நீரிலிருந்து தோன்றும் அழல் என்பது அன்பிலிருந்து தோன்றும் ஆற்றலேயாம். மக்கள், தமக்குள்ளேயே எல்லா ஆற்றல்களையும் பொதிய வைத்துக்கொண்டு, அன்பின்றி எளியோராய் இருப்பது எவ்வளவு இரங்குதற்குரியது !

குறிப்புரை: உள்வழி யெல்லாம் - உள்ள இடமெல்லாம். உண்மை நலன் உண்டு - இயற்கை அழகை நுகர்ந்து. எம்மை முனிபு - எம்மை வெறுத்து. 'உண்மை நலன் உண்டு எம்மை முனிபு ஒளித்தானை' என்று தொடர்ந்துகொள்ளவேண்டும். காட்டீம் - காட்டுவீர். (அக)

## வேள்வி

[பண்டைக்காலத்தில் தமிழ் மக்கள் முத்தீ வேள்வி வளர்த்து அதன் வாயிலாகவும் இறைவனை வழிபட்டு வந்தனர். முழுமுதற் கடவுளை வழிபட்டதனால், உலகுக்கு எல்லா நலங்களுங் கிடைத்துவந்தன ; மழையும் வளமாகப் பொழிந்து வந்தது.]

புகழ்மிகு சாந்தெறிந்து புல்லெரி யூட்டிப்
புகைகொடுக்கப் பெற்ற புலவோர்—துகள் [பொழியும்
வானுயர் வெற்ப ! இரவின் வரல்வேண்டா ;
யானை யுடைய சுரம்.

—திணைமொழி யைம்பது, க.

''மலைநாடனே ! நின் தலைவியை விரும்பி இரவில் வரவேண்டா, நீ வருவது, யானைகளையுடைய வழியாயிருக்கின்றது'' என்று தோழி தலைவனிடம் சொல்லுவதாக வருவது இச் செய்யுள்.

மலைநாடனே என்று அவனை அழைக்கும்போது அவன் நாட்டு மலைகளின் இயல்பைப்பற்றிச் சிறிது கூறுகின்றாள். 'புகழ் மிக்க சந்தன மரங்களை வெட்டி அவற்றைப் பொருந்தும் தீயினை வைத்தலால் நறுமணப் புகை கொடுக்கப்பெற்ற வானவர், மகிழ்ந்து மழை சொரிகின்ற, விண் வெளியில் உயர்ந்து தோன்றுகின்ற மலைகளையுடைய நாடனே' என்பது அவள் சொல்.

வேள்வித்தீ வளர்த்தற்குச் சந்தனக்கட்டைகளை முனிவர்கள் பயன்படுத்துவர்; அப்போது அதிலிருந்து உண்டாகும் நறுமணப் புகையையும் தேவர்கள் ஏற்று மகிழ்கின்றனர். அம் மகிழ்ச்சியும் அவர்கள் மழையைப் பெய்வித்தற்கு ஒரு காரணமாயிற்று. அங்ஙனம் மழை பெய்யப்பெறும் மலைகளையுடைய நாடனே என்று தலைவனைத் தோழி அழைத்தாள். 'முழுமுதற்கடவுளின் திருவருளை விரும்பி, அதன் ஆற்றல் உலகத்தில் விளங்கும் ஞாயிறு தீ திங்கள் என்னும் ஒளிகளின் வாயிலாக விளங்குதலைத் தெரிந்து அவற்றின் நினைவாக முத்தீ வேள்வி வளர்த்து வழிபாடு செய்யப்பெறுகின்ற மலைகளையுடையவனே' என்று தலைவனை அவள் சிறப்பித்தாள்.

முதல்வனானவன் ஞாயிறு தீ திங்களொளிகளின் வாயிலாக விளங்குதல் கருதி அவ் வாயிலின் அடையாளமாகவே சான்றோர் வேள்வி செய்து வழிபடுதலால், உலகத்தில் மழை பெய்தற்கு ஏதுவானமை இதனால் தெரிகின்றது. தலைவனது நாடு, நல்லன நிகழ்தற்கும் அதனால் மழைவளம் பெருகுதற்கும் இடமாய்ச் சிறந்திருக்கின்றதென்று குறித்ததனால், உலகுக்கே நலம் உண்டாக்கத் தக்க அத்தனை சிறந்த தலைவன் இரவில் வருதல் நன்றன்று என்று தோழி விலக்கியபடியாகும். மற்றப்படி, முதல்வனை வழிபடும் முனிவரர் உள்ள நாட்டில் எதற்குத்தான் குறை இருக்கப்போகின்றது ?

குறிப்புரை: சாந்து - சந்தன மரங்களை. எறிந்து - வெட்டி. புல் எரி - புல்லும் எரியை; பொருந்திப்பெருகுந் தீயை. ஊட்டி -

ஊட்டுதலால்; மூட்டுதலால். புலவோர் - தேவர்; மழைக்குத் தேவர்கள். துகள் - துளி; பூம்பொடிபோன்ற மணமுள்ள மழைத்துளிகளை. வான் உயர் - விண்ணில் உயர்ந்த. வெற்ப - மலைகளையுடைய நாடனே. சுரம் - வழி. (கூO)

## துறவு

[காமம் என்னும் அவாவை நீத்தலே துறவு என்பது; அவ்வாறு துறந்த காலத்தில், புதல்வர் சுற்றம் முதலியோருடன் இருந்து, பேரின்பந் தரும் பொதுநலச் செயல்களைச் செய்தலும் அதற்கான ஆற்றலைப் பெறுதலும் 'தவம்' எனப்படும்.]

காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.

—தொல்காப்பியம், ககஙஅ.

தவம், துறந்து செய்தல் என்பர்; துறந்து தவஞ் செய்யுநிலை இந் நூற்பாவில் வருகின்றது.

காமம் அடங்கியமைதலே துறவு என்பது. அவ்வாறு அமைந்த காலத்தில், பிறர் நலங் கருதும் அருளுணர்வு பெருகுகின்றது; பிறர்க்கு உழைக்கவும் நேர்கின்றது. இதுகாறும் வாழ்க்கை நடத்திய தலைவனுந் தலைவியும் இப்போது தம் சுற்றங்களோடும் மக்களோடுங் கூடிச் செய்யுஞ் செயலெல்லாம், இவ்வாறு பிறர்க்குழைக்கும் அருட்செய்கையாக முடிகின்றது.

இதுவரையில் தமக்குழைத்து வந்தனர்; அவாவுடன் உழைத்து வந்தனர். இப்போது, பிறர்க்குழைக்கின்றனர்; அவாவின்றி மன நிறைவுடன் உழைக்கின்றனர். இது, சிறந்தது பயிலுதலாக நலந் தருகின்றது. இதனால், முன் இன்பம் இப்போது பேரின்பமாக மாறுகின்றது.

பேரின்பந்தானே அனைவர்க்கும் வேண்டும்; அது, இங்ஙனந் தவப்பயிற்சியினால் மக்கட்குக் கிடைக்கின்றது.

குறிப்புரை : காமம் - அவா. சான்ற - அடங்கி அமைந்த. கடைக்கோட் காலை - சிற்றின்ப வாழ்க்கையின் கடைசியாகக் கருதப்பட்ட காலத்தில். ஏமம் - பாதுகாப்பு. சான்ற - நிறைந்த. மக்களொடு - புதல்வர்களுடன். துவன்றி - சூழ்ந்து. கிழவனும் கிழத்தியும் - தலைவனும் தலைவியும். சிறந்தது - தவத்தை. இறந்ததன் - முன் கடந்துபோன அவாவோடு கூடிய வாழ்க்கையின். (கக)

## பாவை நோன்பு

[இது, பழைய காலத்திலிருந்தே, தமிழ்நாட்டுக் கன்னிப்பெண்கள் நோற்கும் ஒருவகை நோன்பு. மகளிர்க்குத் தவவுணர்வு இயல்பாகச் சிறந்திருக்கின்றது. இது, 'தைந்நீராடல்' என்றுங் கூறப்படும். தங் காதலரைப் பெறும்பொருட்டும், உலகுக்கு மழை பொழிதல் முதலிய நலங்கள் உண்டாகும்பொருட்டும் இந் நோன்பு நோற்கப்படும்.]

மன்ற எருமை மலர்தலைக் காரான்
இன்தீம் பாற்பயம் கொண்மார் கன்றுவிட்டு
ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும்புலர் விடியலின், விரும்பிப் போத்தந்து
தழையும் தாரும் தந்தனன் இவன்என
இழையணி ஆயமொடு தகுநாண் தடைஇத்
தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெருந்தோட் குறுமகள் அல்லது
மருந்துபிறி தில்லையான் உற்ற நோய்க்கே.

—நற்றிணை, அ0.

தவத்திற்கும் அடிப்படை அன்புதான்; அன்பின் முதிர்ச்சி, தானே தவவுணர்வாக மாறுகின்றது. அன்பின்றித் தவம் இல்லை. மகளிர்க்கு அன்புள்ளமும் அதன் முதிர்ச்சியாகிய தவநிலையும் இயல்பாகவே அமைந்துள்ளன.

ஓர் இளமகளை ஓர் இளைஞன் காதலிக்கின்றான். தன் அன்பின் அடையாளமாக அவளுக்கு உடுக்கத் தழை

ஆடையும் சூட மலர்மாலையும் கொண்டுவந்து அளிக்கின்றான். அவளும் அவன்பாற் காதலுள்ளம் உடையவளே. அன்பு மேன்மேலும் முதிர்ந்தது. அவள் அவனையே நாடி அன்புருவாயினள்; அவ் வுணர்வே நோன்புருவமாயிற்று. ஏக்கமே நோன்புருவம்; அந் நிலையில் ஒழுகும் ஒழுக்கங்களே தவ வொழுக்கங்கள்.

பழைய காலத்திலிருந்தே தமிழ் நாட்டில் கன்னி மகளிர், தைத்திங்களில் நாடோறும் விடியற்காலத்தில் எழுந்து நீர்நிலைகட்குத் தோழிமாருடன் சென்று, குளிர்ந்த நீரில் நீராடித் தாம் கருதியது நிறைவேறும் வண்ணம் இறைவனை வேண்டுதல் வழக்கம். இச் செயல் 'தை நோன்பு' என்றும், 'தைநீராடல்' என்றும் சொல்லப் படும். நினைவு இதனால் உரம் பெற்று இயங்கி அவர் கருதியதை இறைவன் துணைகொண்டு நிறைவேற்றிவிடும். இவ் விளமகளும், விடியற்காலையில் ஆனினங்கள் புலம் மேய்தற்குப் புறப்படும் வேளையில் தன் தோழிமாரும் தனது நாணமும் தன்னைச் சூழ்ந்துகொள்ளத் 'தை நீராடலை' மேற்கொள்கின்றனள்.

இத்தகைய பேரன்பின் உருவமான இளமகளே, அவ் விளைஞனது காதல் நோய்க்கு மருந்தாதல் இயலும். இக் குறுமகளை யல்லது ஒத்த அன்பில்லா வேறு பிறர் அவன் நோய்க்கு மருந்தாதல் எவ்வாறு கூடும்? இவள் தவம், அதாவது உயர்ந்த அன்புள்ளம், அவன் உள்ளத்தை அவ்வளவு கவர்ந்திருக்கின்றது. அன்பால் இயலாதது, அதாவது தவத்தால் இயலாதது உலகத்தில் யாதும் இல்லை. ஈர்ப்பும் பயனும் நலனும் இத் தவவுணர்விலேயே உள்ளது.

மகளிர் மென்மையியல்பு மிக்கவராதலின் அவர்க்கு இத் தவப் பண்பு இயல்பாகவே சிறந்திருக்கின்றது. கன்னியராயினும், மனையவராயினும், கைம்மையராயினும் மகளிர் வாழ்க்கை முழுதும் இத் தவமாட்சியே சிறந்து

திகழ்கின்றது. திண்மை மிக்க இப் பெண்ணினும் பெருந் தக்க உலகில் யாவுள ?

**குறிப்புரை :** மன்ற - மன்றத்தின் ; தொழுவத்தின் ; மன்ற எருமை - தொழுவிலுள்ள எருமையாகிய. மலர் தலை - பெரிய தலையையுடைய. கார் ஆன் - கருமை ஆனினம் ; கார் ஆன் ஆகிய எருமையின் என்றபடி. இன் தீம் பால் பயம் - இனிய தித்திப்பான பாலாகிய பயனை. கொண்மார் - கொள்ளும் பொருட்டு ; மாலையில் மிகுதியாகக் கொள்ளும்பொருட்டு. கன்று விட்டு - கன்றுகளைத் தொழுவிலேயே விட்டுவிட்டு. ஊர்க் குறு மாக்கள் - ஊரிலுள்ள சிறுவர்கள் ; குறுமாக்கள் - சிறுவர்கள் ; அதாவது, மாடு மேய்க்குஞ் சிறுவர்கள். மேற்கொண்டு - அவ் வெருமைகளின்மேல் ஏறிக்கொண்டு. கழியும் - நீங்கிப்போகும் ; அதாவது, ஊரிலிருந்து மேய்புலத்திற்கு நீங்கிப்போகும். பெரு புலர் விடியலின் - பெரிய இருள்நீங்கும் விடியற்காலத்தில் ; இருளை நீக்கும் வகைகளிற் பெரிய வகை ஞாயிறு புறப்படுகின்ற விடியற்காலமாதலால், பெரிய விடியல் எனப்பட்டது. புலர்தல் - இருள் நீங்குதல். போத்தந்து - வந்து. ஆயமொடு - தோழிமா ரோடு. தகு - தகுதியான. நாண் - நாணம். தழீஇ - வளைத் துக்கொண்டு ; சூழ்ந்துகொண்டு. தண் கயம் - குளிர்ந்த நீரில். படியும் - மூழ்கும் ; அதாவது, மூழ்கி நோன்பு நோற்கும். குறு மகள் - இளமகள் ; கன்னி. பிறிது - வேறு. நோய்க்கு - காதல் நோய்க்கு. ‘விடியற்காலத்தில் தண்கயம் படியுங் குறுமக ளல் லது யானுற்ற நோய்க்கு மருந்து பிறிதில்லை’ என்று தலைமகன் சொல்லுவதாக இந்தப் பாட்டு அமைந்துள்ளது. ‘விரும்பி வந்து தழையுடையும் மலர்மாலையும் தன் அன்பின் அடையாளமாகக் கொடுத்தான் இவன் என்று தோழிமாரோடு சொல்லி, அத் தோழிமாராலும் வெட்கத்தாலும் தான் வளைத்துக்கொள்ளப் பட்டுத் ‘தண்கயம் படியும் இக் குறுமகளல்லது மருந்து பிறிதில்லை’ என்பது பின் அடிகளின் பொருள். ‘கொடுத்தான் இவன்’ என்று தன்னைச் சுட்டி அவள் தன் தோழிமாருடன் கூறுவதாகத் தலைவன் கூறினான். தைந் நீராடிப் பாவைநோன்பு நோற்ப தற்குக் காரணம், இவ்வாறு அவன் தழையுடையும் மலர்மாலையுங் கொடுத்துக் காதலித்ததுதான் என்று தலைவி புலப்படுத்தினாள் என்பது. இதனால் அவனைப் பெறும்பொருட்டு நோன்பு நோற் கிறேனென்பது கருத்தாயிற்று. (௬௨)

# 10. இன்பம்

## இன்பமும் அறனும்

[இன்பம் எல்லாராலும் விரும்பப்படுவது. ஆனால், இன்பத்தை விட அறமே மிகுதியாக விரும்பிக் காத்துக்கொள்வதற்குரியது. இன்பம் அறத்தினாலேதான் மாட்சிமைப்படுகின்றது. அறத்தின்வழி நின்று இன்பம் நுகராதார் சான்றோராகார்.]

கல்லாக் கடுவன் நடுங்கமுள் எயிற்று
மடமா மந்தி மாணா வன்பறழ்
கோடுயர் அடுக்கத்து ஆடுமழை ஒளிக்கும்
பெருங்கல் நாடனை அருளினை யாயின்
இனியென கொள்ளலை மன்னே கொன்ஒன்று
கூறுவன் வாழி தோழி முன்னுற
நாருடை நெஞ்சத்து ஈரம் பொத்தி
ஆன்றோர் செல்நெறி வாழாச்
சான்றோ னாதல்நற் கறிந்தனை தெரிமே.

—நற்றிணை, உ௩௬.

களவில் ஒழுகுந் தலைவன் ஒருநாள் தலைவியை நாடி வந்தான். தலைவனுந் தலைவியும் நீண்டகாலங் களவில் ஒழுகுவது தோழிக்கு வேதனையாயிருக்கும். விரைவில் திருமணத்தை முடித்துவைக்கவேண்டுவது அவள் பொறுப்பு. தலைவன் அயலில் வந்திருப்பது தெரிந்ததும் தோழி தலைவியை நோக்கி,

"என்னுடைய சொற்களை நீ இப்பொழுதெல்லாம் காதில் வைத்துக்கொள்வதே இல்லை; தேவை முடிந்து விட்டது; இருந்தாலும் மனம் கேட்கவில்லை" என்று வெறுத்தாற்போலக் கூறினாள்.

தலைவி: "நான் அப்படி நன்றிகெட்டவள் அல்லள்."

தோழி: "இப்போது உன்னை யார் அப்படிச் சொன்னார்கள்? உனக்குத்தான் தலைவர் வந்தார் என்றால்

போதும்; உடனே நன்றியும் அருளும் சுரந்துவிடுமே. அவர் ஒரு சான்றோர் !"

த: "தோழீ, நீ என்ன சொல்லுகிறாய் ; என் தலைவர் ஆனால் சான்றோரல்லரா ? அவர்மேல் ஏன் இவ்வளவு வெறுப்பு ?"

தோ: "நல்ல சான்றோர்தாம் ! அதுவும் ஆன்றோர் ஒழுகும் வழியில் ஒழுகாத அவ்வளவு பெரிய சான்றோர் ! ஆன்றோரைப்போல, அன்புடைய நெஞ்சத்தில் அவருக்கு எவ்வளவுதான் அருள்பொருந்தி யிருக்கிறதென்கிறாய் !"

த: "அப்படியானால், அவர் அன்பும் அருளும் இல்லாதவரா ?"

தோ: "அன்பு இருந்துவிட்டால் ஆய்விட்டதா ? அருள் எண்ணம் வேண்டாமா ? இத்தனை நாளுந் திருமணஞ் செய்துகொள்ளாமையால், நீ எத்தனை துன்பப் படுகிறாய் ; நான் எவ்வளவு இடர்ப்பாட்டில் இருக்கிறேன். நமது குடிப்பெருமையெல்லாம் ஒரு மயிரிழையில் இப்போது ஒட்டிக்கொண்டிருக்கிறது. தலைவருக்கு நிரம்ப அருள் ! அவர் நாட்டில் நடப்பதுபோலவே நாமும் அவருக்கு நடந்துகாட்டினால், அப்போது தெரியும் அவர் பாடு ! அறவழியில் ஒழுகாத இன்பம் ஓர் இன்பமா ?"

த: "தலைவர் சிறிதும் கவனிக்காமல் இருப்பது எனக்குமட்டுங் கவலையில்லையா ? அதிருக்கட்டும் ; அவர் நாட்டில் என்ன நடக்கிறது ?"

தோ: "அப்படியே நாம் நடப்பதற்கு நீ ஒத்துக் கொள்வதானால் சொல்லுகிறேன்."

த: "ஒத்துக்கொள்ளுகிறேன், சொல்லு."

தோ: "அவர் நாட்டு மலைப்பக்கங்களில் மேகங்கள் தாவிததாவிச் சூழ்ந்துகொண்டிருக்கும், குரங்குகள் இயல்பாகவே சும்மா இருக்கமாட்டா. ஆண் குரங்கு தன் பெண் குரங்கைத் தேடிக்கொண்டு வரும்போது,

பெண் குரங்கு தன் குட்டியுடன் மேகங்களினிடையில் ஒளித்துக்கொள்ளும். ஆண் குரங்கு காணுமல் தவித்து நடுங்கும்.''

த: ''நாமும் அப்படியா ஒளித்துக்கொண்டு தலைவரை நடுங்க வைப்பது? உடனே அவர் திருமண முயற்சியை மேற்கொண்டுவிட்டால் எத்தனை நாளைக்கு அவரை இப்படி நடுங்கவைக்க முடியும்?''

தலைவன் பக்கத்திலிருந்து இவற்றையெல்லாங் கேட்டுக்கொண்டான்; 'ஆகட்டும், உடனே திருமணத்துக்கு முயன்று ஒரு நாள்கூட இவர்கள் நம்மை ஏமாற்றாதபடி செய்து விடுகிறேன்' என்று தீர்மானித்துக்கொண்டான். எண்ணம் நிறைவேறியது. தோழியின் எண்ணமா, தலைவன் எண்ணமா, யார் எண்ணம் நிறைவேறியது!

குறிப்புரை: கல்லா - தன் தொழிலையன்றிப் பிறவற்றைக் கல்லாத. எயிற்று - பல்லினையும். மடம் - மடப்பத்தையுமுடைய. மா - கரிய; கரிய முகத்தையுடைய. மாணு வன் பறழ் - இன்னும் வளர்ந்து மாட்சிமைப்படாத தனது வலிய குட்டியோடு. கோடு உயர் அடுக்கத்து - உச்சி உயர்ந்த மலைப் பக்கங்களில். ஆடு மழை ஒளிக்கும் - அசைந்து செல்லும் மேகத்தில் ஒளித்துக்கொள்கின்ற. பெரு கல் நாடனை - பெரிய மலை நாடனாகிய தலைவனை. அருளினை - அவன் எண்ணப்படி அருள் செய்து ஒழுகுகின்றனை. ஆயின் - அங்ஙனம் நீ அருள் செய்கின்ற நிலையை ஆராயின். என - என்னுடையன; அதாவது, என்னுடைய சொற்களை. கொள்ளலை - கொள்வாய் அல்லை; மன், அங்ஙனங் கொள்ளாது கழித்துவிடுகின்றனை என்னுங் கழிவுப்பொருளில் வந்தது. கொன் ஒன்று கூறுவன் - இருந்தாலும் வீணானதொன்றே கூறுவேன்; கொன் - வீண்; தலைவி தன் சொல்லை எடுத்துக்கொள்வதில்லை என்னுங் கருத்தில், இங்ஙனம் 'வீணானதொன்றை' என்று சொல்லிக்கொண்டாள்; தோழி என்றது, இங்கே தலைவீ! என்னும்பொருட்டு முன் உற - முன்னே பலநாளுந் தலைவன் வருதலால். நார் உடை - அன்பு உடைய. ஈரம் - அருள். பொத்தி - நிறைத்து. நற்கு அறிந்தனை தெரிமே - நன்கு அறிந்தனையாய்த் தேர்ந்துகொள். சான்றோன் என்றது, இங்கே, சான்றோன் அல்லன் என்னும் இழிவுப் பொருள் உட்கொண்டது. (கூ௯)

## உழுவலன்பு

[ஆண் உயிரும் பெண் உயிரும் பிறவித் தொடர்புடையவை. பிறவி தோறும் அன்புரிமை கொண்டு காதலித்து வாழ்ந்து வருபவை. ஆதலால், காதலன்புடையோர் இனி வரும் பிறவிகளிலும் காதற்கெழுதகைமை விரும்புவது இயற்கையாயிருக்கின்றது. ஒருத்தி உருக்கமாக அங்ஙனம் விரும்புதல் இச் செய்யுளில் வருகின்றது.]

தோளும் அழியும் நாளுஞ் சென்றென ;
நீளிடை அத்தம் நோக்கி வாளற்றுக்
கண்ணுங் காட்சி தௌவின ; என்னீத்து
அறிவும் மயங்கிப் பிறிதா கின்றே ;
நோயும் பெரும் ; மாலையும் வந்தன்று ,
யாங்கா குவென்கொல் யானே ? ஈங்கோ
சாதல் அஞ்சேன் ; அஞ்சுவல், சாவின்
பிறப்புப்பிறி தாகுவ தாயின்
மறக்குவேன் கொல்என் காதலன் எனவே.

—நற்றிணை, ௩௯௭.

அன்பு என்பது, தொடர்புடையோரிடத்தில் உண்டாகும் உள்ளநெகிழ்ச்சி என்று கூறுவர். காதலன்பு, தொடர்ந்த தொடர்பினையே அவாவிநிற்கின்றது. காதலன்பைப்போல் உள்ளத்தை உருக்கிச் செல்லும் அன்பு உலகத்தில் வேறொன்றும் இல்லை. அதனியல்பை, காதலன்பினர் ஒருவரையொருவர் பிரிவாற்றாது வருந்தும் உருகிய நிலையிலிருந்து நன்கு அறியலாம்.

தலைவனது பிரிவினை ஆற்றமாட்டாமல் வருந்துந் தலைவி யொருத்தியின் உரை இச் செய்யுளில் வருகின்றது.

"தலைவர் பிரிந்து நீண்டகாலம் ஆயிற்றென்று என் தோள்களும் சாயும் ; அவர் சென்ற தொலைவிடமாகிய வழியை நோக்கி நோக்கி என் கண்களும் ஒளியற்றுக் காட்சி மழுங்கின. எனது அறிவும் என்னை மீறி மயங்கி

வேறுகின்றது. என் உயிரானது நீங்கும் எல்லையில் இருத்தலின் பிரிவாற்றுமையால் எனக்கு உண்டான நோயும் நீங்குகின்றது. உயிரை நீக்குதற்குரிய மாலைப்பொழுதும் வந்தது. இனி யான் எங்ஙனம் ஆவேனே? இவ்வுலகில் நான் சாதலுக்காக அஞ்சுகின்றேனல்லேன். சாவினில், என் அருமைக் காதலனோடு கூடாத வகையில் என் மறுபிறப்பு வேறொன்றாயின் அப்போது என் காதலனை மறந்துவிடுவேனே என்றுதான் அஞ்சுவேன்."

இதனாற், காதலென்பது பிறவிதோறுந் தொடரும் இயல்புடையதாயிருக்கின்றது என்பது விளங்கும்.

**குறிப்புரை:** சென்று என - சென்றது என. அத்தம் - வழியை. வாள் - ஒளி. தௌவின - மழுங்கின. என் நீத்து - என்னைக் கடந்து. வந்தன்று - வந்தது. யாங்கு - எங்ஙனம்? ஆகுவென்கொல் - ஆவேனோ? ஈங்கு - இங்கு. ஓ, அசை. 'அஞ்சுவல் மறக்குவென்கொல் என் காதலன் என' என்று சேர்த்து உரைத்துக்கொள்ளவேண்டும். அஞ்சுவல் - அஞ்சுவேன். சாவின் - சாவினிடத்து. பிறப்பு - மறுபிறப்பு. பிறிதாகுவதாயின் என்றது, இயைபுகூடாத பெண்ணாய்ப் பிறந்துவிட்டால் என்னும் கருத்தில் வந்தது. மறக்குவென்கொல் - மறந்துவிடுவேனே. (கச)

## அறத்தொடு நிற்றல்

[பொதுவாக, யாரும் அறத்தோடு பொருந்தி யொழுகுதல் சிறந்த ஒழுக்கமாகும்; அது தூய இன்பமும் பயக்கும். என்றாலும், அகப் பொருளொழுக்கமாகிய தலைவன் தலைவியரது காதல் நிகழ்ச்சியில், அறத்தின்வழி நிற்றல் மிகவும் இன்றியமையாததாயிருக்கின்றது. தமிழ்நாடு மக்கள் அக் கற்பொழுக்கத்தில் மிக்க விழிப்புடையவர்.]

மள்ளர் குழீஇய விழவி னானும்,
மகளிர் தழீஇய துணங்கை யானும்,
யாண்டுங் காணேன் மாண்தக் கோனை;
யானுமோர் ஆடுகள மகளே; என்கைக்

கோடீர் இலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும்ஓர் ஆடுகள மகனே.

—குறுந்தொகை, ௩௧.

பழைய காலத்தில் விழாக் காலங்களில் வீரர்கள் தத்தம் சேரிகளில் விளையாட்டுப் போர் நடத்திக் களிப்பது வழக்கம். மகளிரும் அக் காலங்களில் துணங்கைக் கூத்து முதலியன ஆடுவர். சேரிகள் ஆரவாரமாயிருக்கும்.

மகளிர் துணங்கைக் கூத்து ஆடுங்கால், ஆடவர் அவர்கட்கு முதற்கை கொடுத்துத் தொடங்கிவிடுவதும் வழக்கமாகும். ஒரு கூத்தில் ஆடவன் ஒருவன், துணங்கை ஆடுகின்ற களத்தில், நங்கை ஒருத்திக்கு முதற்கை கொடுத்தான். அவனும அவளும் காதலுங் கற்பும் உடையராயினர்.

தமிழ் நாட்டிற் காதல் என்பது, எந் நிலையிலும், கற்பு வழுவாத மாட்சிமை அமைந்தது. நிகழ்ந்த நிலைமையை அறியாமல் தலைவியின் சுற்றத்தார் வாளா இருந்தனர். அயலார் அந் நங்கையை வரைந்துகொள்ளக் கருதி மணம்பேசி வந்தனர். இந் நிலையிலும் தலைவி, உண்மையைப் புலப்படுத்தாமல் இருத்தல் முறையாகத் தோன்றவில்லை. அறத்தோடு பொருந்தி ஒழுகுதலன்றோ மக்கட் பிறப்பிற்குப் பெருமை! தலைவி, மெல்லத் தன் தோழியினிடம் தன் உண்மையைப் புலப்படுத்தி அறத்தொடு நிற்க முயன்றாள். அவள் வாய்மொழி வருமாறு :

"வீரர்கள் கூடியுள்ள சேரி விழாவிலும், மகளிர் தழுவியாடுகின்ற துணங்கைக் கூத்திலும், மாட்சிமை பொருந்திய தக்கோனை, எங்குங் காணேன்; யானும் துணங்கையாடுங் களத்திற் சேர்ந்த ஒரு மகளே; என் கையிலிருக்குஞ் சங்கு வளையலை நெகிழச் செய்த பெருமைபொருந்திய தலைவனும் அந்த ஆடுகளத்திற்சேர்ந்த மகனொருவனே!" என்பது.

தோழி கருத்தை அறிந்துகொண்டாள்; பிறரும் அறிந்துகொண்டனர். அறிந்துகொண்டோர் உள்ளம்

எப்படியிருக்கும்? தலைவியின் கற்புச் சிறப்பறிந்து மகிழ்ந்தனர்; மகிழ்ந்து, வேண்டுவனவுஞ் செய்தனர்.

**குறிப்புரை:** மள்ளர் - வீரர். குழீஇய - கூடிய. விழவினுனும் - விழவிலும். கோடு ஈர் இலங்கு வளை - சங்கை யறுத்துச் செய்த விளங்குகின்ற வளையல்; அதாவது, சங்கு வளை. பீடு கெழு குரிசிலும் - பெருமை பொருந்திய தலைவனும். (கூ௫)

### காதலும் காமமும்

[பெண்மைப் பண்பு அழகும் இனிமையும் உடையது. அழகிய இனிய பெண்ணின் மொழிகளால் அப் பெண்மையின் இனிமை விளங்குகின்றது. காதல் என்னும் அன்பினால் அவ் வினிமை இன்பமாம். காமம் என்னும் அவாவினால் அவ் வினிமை துன்பமாம். ஆதலால், காதலோடு காமமும் உடன் நிகழ்தல் பொருந்ாது.]

அமிழ்தத் தன்ன அந்தீங் கிளவி!
அன்ன இனியோள் குணனும் இன்னா
இன்னா அரும்படர் செய்யு மாயின்,
உடனுறைவு அரிதே காமம்;
குறுகல் ஓம்புமின் அறிவுடை யீரே.

—குறுந்தொகை, உ0சு.

பெண்மையைக் காமத்தினால் நுகர்தல் ஆகாது; அது, இனிமையல்லாத பெருந்துன்பத்தினைச் செய்யும். பெண்ணின் மொழிகள் அமிழ்தத்தைப்போன்ற அழகிய இனிய மொழிகள்! உள்ளத்தின் இனிய பண்புக்கு மொழிகளே அடையாளம்! அத்தகைய இனிய பெண்ணின் குணமும் காமத்தினால் துன்பந் தருவதாயின், காமத்தையும் உடன் நிகழும்படி செய்துகொள்ளுதல் பொருத்தமாக இல்லை. ஆதலால், காமத்தைக் குறுதலை நீக்கிக்கொள்ளவேண்டும். பெண்ணின் இனிமையை, அதாவது பெண்ணின் பெருமையை உயர்வகையான அன்பினாற் கண்டு நலங்கொள்ளுதல் வேண்டும்.

தலைவி யொருத்தி இங்ஙனமே அமிழ்தம் போன்ற மொழியோடு இனியளாய் இருந்தாள். தலைவன் ஒருவன், காதலோடு காமமும் உடன்நிகழ அணுகினான். காதல் அவள் இனிமையை உணர்ந்தது; காமம் அவனை வருத்தியது. பாங்கனுக்கு இச்செய்தி தெரிந்ததும், 'இவ்வாறும் ஒழுகலாமோ' என்று அவன் தன் தலைவனைக் கேட்டான். அதற்குத் தலைவன் கூறுகின்ற விடையே இச் செய்யுள்.

"அமிழ்தம் போன்ற அழகிய இனிய மொழிகள்! அத்தகைய இனியோள் குணமும் இத்தகைய பெருந்துயரைச் செய்கின்றது. காரணம், எனது காமமே. ஆதலால், உயர்ந்த காதலோடு இத் தாழ்ந்த காமமும் உடன் நிகழ்தல் ஒன்றற்கொன்று பொருந்தாமையாயிருக்கின்றது. ஆதலால் அத்தகைய காமத்தை எவரும் அடைதல் நீக்குமின்' என்பது.

தலைவன், மெய்ம்மையைப் புலப்படுத்தி அறிவுறுத்தினான். இன்னலின் காரணம் இதன்கண் நன்றாக எடுத்துக் காட்டப்படுகின்றது.

குறிப்புரை: கிளவி - சொல்; கிளவிக்கு அழகும் இனிமையுங் கூறியது, கருத்தின் உயர்வாலும், ஒலியின் மென்மையாலும். இன்னா - இனியவல்லாத. அரு படர் - மிக்க துன்பம். உடன் உறைவு - காதலோடு காமமானது உடன் நிகழ்தல். அரிது - பொருந்தாது. குறுகல் - அணுகுதலை. ஓம்புமின் - பாதுகாத்துக்கொள்ளுமின், நீக்கிக்கொள்ளுங்கள் என்பது. 'அறிவுடையீரே' என்றது, தன்னை இடித்துரைத்த பாங்கனையும் உட்கொண்டு நின்றது. (கக)

## நலம் உசாவல்

[அன்பின் நிகழ்ச்சிகளுள் நலம் உசாவுதலும் ஒன்று; அன்பர்களுக்கு நலம் உசாவுதல் என்பது ஓர் ஆர்வமான நிகழ்ச்சி. பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழன் என்னும் உயிர் நண்பர்களிடமும் இந் நலம் உசாவல் நிகழாமலில்லை. மிக வியக்கத்தக்க வகையாக நிகழ்ந்திருக்கின்றது. பிசிராந்தையார் உருக்கமான தூது விடுகின்றார்.]

அன்னச் சேவல், அன்னச் சேவல்!
ஆடுகொள் வென்றி அடுபோர் அண்ணல்
நாடுதலை யளிக்கும் ஒண்முகம் போலக்
கோடுகூடு மதியம் முகிழ்நிலா விளங்கும்
மையல் மாலையாம் கையறுபு இனையக்
குமரியம் பெருந்துறை அயிரை மாந்தி
வடமலைப் பெயர்குவை யாயின், இடையது
சோழநன் நாட்டுப் படினே கோழி
உயர்நிலை மாடத்துக் குறும்பறை அசைஇ
வாயில் விடாது கோயில் புக்கெம்
பெருங்கோக் கிள்ளி கேட்க இரும்பிசிர்
ஆந்தை அடியுறை எனினே மாண்டநின்
இன்புறு பேடை அணியத்தன்
நன்புறு நன்கலம் நல்குவல் நினக்கே.

—புறநானூறு, சுஎ.

ஒருநாள் மாலையில் பிசிராந்தையார் தம்து பிசிர் என்னும் ஊரில், தம் உயிர் நண்பனை கோப்பெருஞ் சோழனை நினைத்துக்கொண்டு அவன் அன்பினால் விழுங் கப்பட்டு உருகிய உள்ளத்தோடு இருந்தார். பிசிர் பாண்டிநாட்டில் உள்ளது; கோப்பெருஞ்சோழன் சோழ நாட்டின் உறையூரில் இருக்கின்றனன். ஒருவரை யொரு வர் நேரிற் கண்டதில்லை. ஆனால், அவர்களிடைப்பட்ட நேய வுணர்வோ இணையற்றது. ஓங்கிய அவ் வுணர்வில் கரைவுண்டுதான் பிசிராந்தையார் அன்றுமாலை ஆற்றுமை மேலிட்டிருந்தார்.

அப்போது வானத்தில் அன்னப்பறவைகள் இரண்டு வடக்குமுகமாகப் பறந்து செல்வது பிசிராந்தையார் கண் ணுக்குத் தெரிந்தது. புலவர் உள்ளம் உடனே அள்ளுண் டது; அன்னப்பறவைகளோடு ஏதோ சொல்லத்தொடங்கி

யது. ஆண் அன்னத்தை நோக்கிப் பின்வருமாறு அவர் சொன்னார் :

"ஆண் அன்னமே, ஆண் அன்னமே! மிக்க வெற்றியையுடைய எங்கள் பாண்டியமன்னன் இந்த நாட்டைக் காத்தளிப்பதற்குக்கொள்ளுங் குளிர்ந்த விளங்கிய முகம் போல இந்த மாலைநேரத்தில் மதியம் ஒளி விளங்கித் தோன்றுகின்றது. எனக்கு, இது, ஆற்றுமை தருகின்ற மயக்கமான மாலையாய் இருக்கின்றது. நான்மட்டும் இங்ஙனம் என் நண்பனையின்றிச் செயலற்று வருந்திக்கொண்டிருக்க நீங்கள்மட்டும் துணையோடு இந்த முழு நிலவில் இன்பமாகப் பறந்து செல்லுகின்றீர்கள். நீங்கள் வடக்கு முகமாகப் போவதை நோக்கினால் தெற்கே குமரித்துறையில் அயிரைமீன் உண்டு வடக்கே இமயமலைக்குச் செல்வது போலத் தோற்றுகின்றது. அப்படியானால், இடையிலிருக்கும் சோழநன்னாட்டின் வழியாகத்தான் நீங்கள் போகும்படியிருக்கும். அங்கே உறையூர் என்னும் தலைநகரம் இருக்கின்றது. அங்கே உயர்ந்த அரண்மனை தோன்றும். நின் பெண் அன்னத்தோடு அங்கே சிறிது தங்கலாம். தங்கி, வாயிற்காவலனுக்கு நின் வரவைச் சொல்லி விடாமல் நீயே நேராக அரண்மனையுட் சென்றால் அங்கே எம் உயிர்நண்பன் கோப்பெருஞ்சோழன் இருப்பான். அவன் கேட்கும்படி நீ உன்னைப் 'பிசிராந்தையின் தொண்டன்' என்று ஒரு சொல் சொன்னால், மாட்சிமைப்பட்ட நின் இன்புறும் பெண் அன்னம் அணிந்துகொள்ளும்படி விரும்பத்தக்க உயர்ந்த அணிகலனை உனக்கு அவன் வழங்குவான். இவ் வுதவியை நீ சிறிது செய்ய வேண்டும்" என்பது.

கோப்பெருஞ்சோழனோடு நலம் உசாவி மகிழ்தலிற் பிசிராந்தையார்க்கு ஆர்வம் எவ்வளவு கொழுந்தோடியிருந்தால், இங்ஙனம் அன்னச்சேவலை அவர் தூதுக்கு வேண்டுவார்? உணர்வுதான் உலகத்தில் என்ன வேலை செய்கின்றது! பொல்லாப் புழு மலிந்த இப் புன்குரம்பையில் இத்தகைய உணர்வு ஒன்றுதானே மிகவும் மதிப்

பதற்குரிய ஒளிபெற்று விளங்குகின்றது. பிசிராந்தையார் நட்போடு ஒத்ததொன்றை உலகத்தில் இதுவரையில் எவரும் கேட்டதில்லையன்றோ!

**குறிப்புரை:** சேவல் என்றது, ஆண். ஆடு - வென்றி. வென்றிகொள்வென்றியாவது, மேன்மேல் வென்றி. அடு போர் அண்ணல் - கொல்லும் போர்த்தொழிலையுடைய அரசன்; அண்ணல் என்றது இங்கே பாண்டியனை. தலையளிக்கும் - அருளோடு பாதுகாக்கும்; பாதுகாத்தற்குக் கொள்ளும் என்றபடி. ஒண்முகம் போல மதியம் நிலாவிளங்கும் என்று தொடர்ந்து கொள்ளவேண்டும். கோடு கூடு மதியம் - இருபக்க முனையும் கூடுகின்ற முழு நிலா. கோடு - பக்கம். பிறைநிலாவாக இருந்த போது இருபக்கமும் முனைகளிருந்தன. முழு நிலவில் அவை ஒன்று பொருந்தி நிரம்புவதனால் இவ்வாறு கூறினர். முகிழ் நிலா - தோற்றுவிக்கும் ஒளி. மையல் - மயக்கந்தரும். மாலை - இம் மாலையில். யாம் கையறுபு இனைய - யாம் செயலற்று வருந்த. அயிரை என்பது ஒருவகை மீனின் பெயர். மாந்தி - உண்டு. வடமலை - இமயமலைக்கு. பெயர்குவையாயின் - திரும்பிச் செல்லுவதாயிருந்தால். இடையது - இடையிலுள்ளதாகிய. படின் - பொருந்தினால். கோழி - உறையூர். குறு பறை - சிறிய நின் பெண் பறவையோடு. பறை - பறவை. அசைஇ - தங்கி. வாயில் - வாயிற்காவலரை. வேண்டாது - சொல்லிவிட வேண்டாமல். கோயில் - அரண்மனையுள். புக்கு - புகுந்து. பெருங்கோக்கிள்ளி என்றது கோப்பெருஞ்சோழன் என்பதற்கு. கிள்ளி என்பது பொதுவில் சோழன் என்னும் பொருளுடையது. இரு பிசிர் - பெரிய பிசிர் என்னும் ஊரிலுள்ள. ஆந்தை - ஆந்தை என்னும் பெயருடைய எனது. அடியுறை - அடிக்கீழ் உறைவோன்: அதாவது, தொண்டன் என்பது. எனின் - என்று கூறினால். நன்பு உறு - விரும்புதலுற்ற. நன் கலம் - உயர்ந்த அணிகலனை. (கஎ)

## வாழ்தல்

[உடம்பு, வாழ்க்கைக்காகக் கிடைத்த கருவி. பிறவி எடுத்தபின் வாழ்க்கையின் நோக்கங்களில் ஈடுபட்டுச் செய்யத்தக்கவைகளைச் செய்தலே வாழ்தல் என்பது. கருவியாகிய உடம்பை ஓம்பிக்கொண்டிருப்பதுமட்டும் வாழ்தலாகாது. நன்றாக வாழ்ந்தபின் உடம்பு எப்படியானாலும் கவலையில்லை. அதன்

பின், உடம்புக்கு உண்டாகும் உயர்வு தாழ்வுகள் உண்மையில் உயர்வு தாழ்வுகளாகா.]

தொடியுடைய தோள்மணந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
தண்கமழுஞ் சாந்துநீவினன்
செற்றோரை வழிதபுத்தனன்
நட்டோரை உயர்புகூறினன்
வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத்தான் இரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடை அவையத்து ஓங்குபுகழ் தோற்றி[னன்
வருபடை எதிர்தாங்கினன்
பெயர்படை புறங்கண்டனன்
கடும்பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவில் தேர்வழங்கினன்
ஓங்கியல களிறூர்ந்தனன்
தீஞ்செறி தசும்புதொலைச்சினன்
பாண்உவப்பப் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன், ஆங்குச்
செய்ப வெல்லாம் செய்தன னாகலின்,
இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகஇப் புகழ்வெய்யோன் றலையே.

—புறநானூறு, உ௩௯.

நம்பி நெடுஞ்செழியன் என்பவனைப் பேரெயின் முறுவலார் என்னும் புலவர் பாராட்டிப் பேச விரும்பினார்; அவர் சொன்னது இது: "அவன் தலையை வாளால் வெட்டி இடினும் இடுக; அல்லது சுடலையில் வைத்துச்

சுடினும் சுடுக; அல்லது இயல்பாக அவன் உடம்பு எப்படி கிடந்து சிதைந்து போகின்றதோ அப்படியே கிடந்து போகட்டும்" என்பது.

புலவர் பாராட்டு எப்படி இருக்கின்றது? 'நம்பி நெடுஞ்செழியன் இனி எப்படியாவது இறந்து போகட்டும்' என்று சொல்லுவதுதானா அவனைப் பாராட்டுதல்? இதற்கு அவர் ஓர் அழகான காரணம் கூறுகின்றார்.

'நம்பி நெடுஞ்செழியன் இவ்வுலகத்தில் துய்க்கவேண்டிய இன்பங்களையெல்லாம் துய்த்து, மனிதரில் மனிதனாய்ச் செய்தக்க செயல்களையெல்லாம் செய்து, தன் புகழை இவ்வுலகில் நிலைபெறச் செய்துவிட்டான். உடம்பினால் பெறவேண்டிய பயனையெல்லாம் பெற்றுவிட்டபின், இனி அந்த உடம்பு எப்படியானால் என்ன? ஆதலால், அத்தகைய புகழ் விரும்பினவன் தலையை என்னவேண்டுமானாலும் செய்துகொள்க' என்கின்றார்.

நம்பி நெடுஞ்செழியன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தனன் என்பது புலவர் கருத்து. வேறு பொது முறையிற் பாராட்டிப் பேசினால், இவ்வளவு உறைப்பாக அவன் புகழை எடுத்துக்கூறியதாக ஆகுமா?

உலகத்தில் உடம்பெடுத்துவரும் மக்கள், கருவியாகிய உடம்பைமட்டும் காத்துக்கொண்டிருந்து இறந்துபோய் விடுவது, வாழ்க்கை அன்று; செய்தக்க செயல்கள் பலவும் செய்து இம்மை மறுமை நலன்களை எய்தலே வாழ்க்கையாகும் என்று உலகத்தார்க்கும் பேரெயின்முறுவலார் இதனால் அறிவுறுத்தினாராயிற்று.

நம்பி நெடுஞ்செழியன் துய்த்த இன்பங்களிலும் செய்த நன்மைகளிலும் சில இச் செய்யுளில் வரிசையாக வருகின்றன.

குறிப்புரை: தொடி - வளையலை. தோள் - இல்லக்கிழத்தியின் தோளை. மணந்தனன் - கூடினன்; கடி - காவல்பொருந்திய. காவில் - இளமரச் சோலையில். சாந்து - சந்தனம். நீவி

னன் - பூசினன். செற்றோரை - பகைவரை. வழி - கிளையோடு. தபுத்தனன் - அழித்தான். உயர்பு - உயர்த்து. வழி மொழி யலன் - வழிபாடு சொல்லி யறியான். வழி என்றது, இங்கே வழிபாடு. மீ கூறலன் - தன்னை மிகுத்துப் பேசியறியான். வேந்து உடை அவையத்து - பிற வேந்தர்களுடைய அவையில். வரு படை - தன்மேல் பகைத்து வருகின்ற படையை. எதிர் தாங்கினன் - எதிர்நின்று தடுத்தான். பெயர் படை - தனக்குத் தோற்றுப் பெயர்கின்ற படையை. புறங் கண்டனன் - தான் மேலும் பின்பற்றிச் செல்லாமல் அவை முதுகு காட்டி ஓடுதலைத் தன் எல்லையிலிருந்தே கண்டனன்; அப்படி பின்பற்றிப்போய் அழிக்காமைக்குக் காரணம், அவற்றின்மேல் வைத்த இரக்கமே. கடு பரிய மா - விரைந்த நடையையுடைய குதிரையை. கடவி னன் - அதன்மேல் ஊர்ந்து செலுத்தி மகிழ்ந்தனன். வழங்கி னன் - இயங்கவிட்டனன். ஓங்கு இயல - உயர்ந்த தன்மையை உடையனவான. தீ செறி தசும்பு - இனிய நிறைவையுடைய மதுக்குடத்தை. தசும்பு - குடம்; இங்கே, மதுக்குடம். தொலைச் சினன் - செலவிட்டான்; பலர்க்கும் வழங்கிச் செலவிட்டனன் என்பது. பாண் - பாணர்கள். விடுத்தனன் - சிக்கு நீக்கித் தீர்ப்புக் கூறினன். அங்கு - அப்படி. செய்ப - செய்யத்தக்க வற்றை. இடுக - தாழியில் வைத்துப் புதை குழியில் இடினும் இடுக; ஒன்றோ - அல்லது; படுவழிப் படுக - பட்டபடி படுக; அதாவது இயல்பாக நிகழ்கின்றபடி நிகழ்க. இப் புகழ் வெய் யோன் தலை - இப் புகழ் விரும்பினவன் தலையை; 'தலையை இடுக; அல்லது சுடுக; அல்லது படுவழிப் படுக' என்பது. 'ஒன்றோ' என்பது எண்ணிக்கொண்டுபோகுங் கருத்தில் வந்தது. இதனை 'எண்ணிடைச்சொல்' என்பர்; ஆதலால் அக் கருத்துத் தோன்ற இங்கே 'அல்லது' என உரைக்கப்பட்டது. (கூஅ)

## கடப்பாட்டாளர் உடைமை

[உலகம் நில்லாமையையே நிலையாக உடையது. எதுவும் உலகத் தில் நிலையாது; ஆதலால், இந்த உலகியலை அறிந்து பொருள் களை நல்ல துறைகளில் விரைந்து பயன்கொள்வோரே தக் கோர். ஈதல் உயர்ந்த புகழைக்கொடுக்கும். ஆதலால், ஈகை யாளரிடம் செல்வம் உடனே தீர்ந்துவிடும்; அவர்கள் உலகின் இயல் அறிந்தவர்கள்.]

அழியல் ஆயிழை! அழிபுபெரி துடையன்;
பழியும் அஞ்சும் பயமலை நாடன்;

நில்லா மையே நிலையிற் றாகலின்,
நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சின்
கடப்பாட் டாளன் உடைப்பொருள் போலத்,
தங்குதற் குரிய தன்றுநின்
அங்கலுழ் மேனிப் பாய பசப்பே.

—குறுந்தொகை, கசங.

செல்வம் நிற்பதும் செலவாவதும் கேள்வியல்ல; செல்வம் பயன்பட்டதா என்பதே கேள்வி. பயன்படும் முறையில் விரைந்தும் செலவாய்விடலாம்; பயன்படாமை யால் நிலைத்தும் இருக்கலாம்; ஆனல் எவ்வளவு விரைவில் நல்ல வழிகளிற் பயன்படுத்திக்கொள்ளலாமோ அவ்வளவு விரைவிற் செல்வத்தைப் பயன்கொள்ளவேண்டும்; ஏனென் றால், இவ்வுலகம் நிலையாமையியல்பையே நிலையாக உடைய தாய் இருக்கின்றது. இதனாலேதான், ஒப்புரவாளர் பல ரும் தமது செல்வத்தை உடனே நல்ல துறைகளிற் பயன் படுத்திச் செலவழித்து விடுகின்றனர்; பலர்க்கும் உதவியா யிருப்பதுதான் 'ஒப்புரவு' எனப்படும்; அதுவே, மக்கட் பிறவியில் வந்தவர்க்குச் சிறந்த கடமையாதலின், 'கடப் பாடு' என்றும் அது கூறப்படும். அத்தகைய கடப்பாட் டாளர்க்குப் பொருள் கிடைத்தால், அவரிடம் அது நில் லாமல் உடனே நீங்கிவிடுவது இதனால் இயல்பாயிருக் கின்றது.

இந்த அழகினை இச் செய்யுளில் ஆசிரியர் நக்கீரர் நன்றாகப் பயன்படுத்தியிருக்கின்றார். தலைவன் தன் தலைவி யைப் பிரிந்த நிலை; வருத்தத்தால் தலைவியின் உடம்பில் அழகு மாறிப் பசலைநிறம் பரவியிருக்கின்றது; தோழி அவளை ஆற்றுவிக்கும் முறையிற் பின்வருமாறு சொல்லு கின்றாள்:

"தெரிந்தெடுத்த இழைகளையுடைய நங்காய்! வருந் தாதே; நம்மைப்போலவே தலைவரும் இப் பிரிவுக்கு இரங்குதல் பெரிதுடையர்; பயன் நிறைந்த மலைகளை

யுடைய மலைநாடராகிய அவர், நமக்கும் தமக்கும் வரும் பழியையும் அஞ்சும் இயல்பினர்; ஆதலால், நின் அழகு ஒழுகும் மேனியிற் பரந்த இப் பசலைநிறமானது, கடப்பாட்டாளருடைய செல்வம்போல உடனே தீர்ந்துபோம் நிலையுடையதே யன்றித் தங்குதற்குரியதன்று'' என்பது. தலைவன் உடனே வந்து தலைவியின் துயரைத் தீர்ப்பன் என்பது அவள் கூறியதன் கருத்து.

இங்ஙனம் நக்கீரர், கடப்பாட்டாளர் தமது செல்வத்தைப் பயன்படுத்தும் இயல்பை நன்கெடுத்துக் காட்டுகின்றார். காட்டுமிடத்தும், 'உயர்ந்த புகழை விரும்பிய அன்பார்ந்த நெஞ்சினையுடைய கடப்பாட்டாளர்' என்று அவரைச் சிறப்பித்திருக்கின்றார். ஒப்புரவாளர்க்கு உண்டாகும் இன்பம் மற்றவர்க்கு ஏது ?

குறிப்புரை : அழியல் - வருந்தாதே. ஆய் இழை - தெரிந்தெடுத்த அணிகலையுடைய தலைவி ! அழிபு - அழிதல். பெரிது - மிக. அஞ்சும் - அஞ்சுவன். பயம் - பயன் பொருந்திய. நில்லாமையே - நிலையாமையே. நிலையிற்று - நிலையாக உடையது; இவ்வுலகம் நிலையாக உடையது. நல் இசை - உயர்ந்த புகழை; ஈதலால் உண்டாகும் புகழே உயர்ந்த புகழ் என்றபடி. வேட்ட - விரும்பிய. நயன் - அன்பு. கடப்பாட்டாளன் - ஒப்புரவாளனது. உடைப் பொருள் - உடைமையாகிய பொருளை. அம் கலுழ் - அழகு ஒழுகும். மேனி - உடம்பில். பாய - பரவிய. பசப்பு - பசலைநிறம். (கூக)

## பொருள்

[மதிக்கப்படுவது 'பொருள்' எனப்படும். பண்டங்கள் பெரும்பாலும் மதிக்கப்படுவதனால், அது பொருள் எனப்பட்டது. இருந்தாலும், மதிக்கப்படும் பொருளாக உயிரன்பும் வேறு உள்ளது. அதனையே உயர்வாக மதிக்கவேண்டும். அம்முறைமை தவறுவது இம்மைக்கும் மறுமைக்கும் நல்லதன்று.]

பொருளல்லாற் பொருளுமுண் டோஎன யாழ [நின்
மருளிகொள் மடநோக்கம் மயக்கப்பட் டயர்த் [தாயோ ;

காதலார் எவன்செய்ப பொருளில்லா தார்க்
[கென
ஏதிலார் கூறுஞ்சொல் பொருளாக மதித்
[தாயோ;
செம்மையின் இகந்தொரீஇப் பொருள்செய்
[வார்க் கப்பொருள்
இம்மையும் மறுமையும் பகையாவது அறியா
அதனுல், [யோ;
எம்மையும் பொருளாக மதித்தீத்தை; நம்முள்
[நாம்
கவவுக்கை விடப்பெறும் பொருட்டிறத்து
அவவுக்கை விடுதல்; அதுமனும் பொருளே.

—கலித்தொகை, கச: க0 - கக.

'பொருள்' என்னுஞ் சொல் 'ஒன்றைப் பொருள் செய்தல்' என்னுங் கருத்துடையது. அதாவது, மதித்தல் என்பது. பொருள் செய்வதற்குரியவை உலகத்தில் இரண்டு உண்டு. ஒன்று, பண்டம்; மற்றென்று உயிர். பண்டங்களைப் பொருள் செய்வது, 'பொருட்பா'லிலும் உயிர்களைப் பொருள் செய்வது 'காமத்துப்பா'லிலும் வைத்துப் பேசப்படும். இரண்டையும் அறமுறைமையிற் செய்யவேண்டும் என்பதை 'அறத்துப்பா'லில் அடக்கிச் சான்றோர் பேசுவர். பண்டங்களைப் பொருள்செய்வதை விட, உயிர்களைப் பொருள்செய்வது உயர்ந்தது. அம் முறைமை தவறினுல், அது, அறம் தவறியதாய் முடியும். அந் நிலையில், அது, அவா எனப்படும். அறம் தவறி ஈட்டிய பொருள், கடைசியில் இம்மையிலும் மறுமையிலும் பகையாகவே முடியும். உயிரினிடத்தில் அன்பை மறத்தலும் மயக்க அறிவென்று கருதப்படும். இக் கருத்துக்க ளெல்லாம் இச் செய்யுட் பகுதியில் வருகின்றன.

பண்டங்களின்மேல் அவாக்கொண்டு தலைவியின் அன்பைப் பொருள்செய்யாது பிரிய நினைந்த தலைவனை நோக்கித் தோழி பின்வருமாறு சொல்கின்றாள் :

"மயக்கங்கொண்ட நின் அறியாமைக் கருத்தினால், பொருளல்லாமல் வேறு பொருள் செய்யததக்கது உண்டோ என்று நீ மயங்கி நின் தலைவியின் அன்பை மறந்தனையோ?"

"கையிற் பொருளில்லாதவர்களுக்கு, அவர்களாற் காதலிக்கப்பட்டவர் என்ன மதிப்புக்காட்டுவர் என்று அயலார்கூறுஞ் சொல்லையே நீ பொருளாக மதித்தாயோ?"

"முறைமையிலிருந்து நீங்கிப்போய்ப் பொருள் தேடுவார்க்கு அப்பொருள் இம்மையிலும் மறுமையிலும் பகையாவதை நீ அறியாயோ?"

"ஆதலால் எங்களை நீ பொருளாக மதித்தல் செய். நம்முள் நாம் தழுவிய கை நீங்குதற்கு ஏதுவான பொருள் வகையில் அவாவைக் கைவிடுவாய்; அவா நீங்கிய அந் நிலையே, நிலைக்கும் பொருளாகும்."

அறம் இன்னது, அவா இன்னது, பொருள் இன்னது, அது தேடும் முறை இன்னது என்னுங் கருத்தழகுகள் இச் செய்யுட் பகுதியில் நன்றாக விளங்குகின்றன.

**குறிப்புரை :** பொருளும் உண்டோ - பொருள் செய்யத்தக்க வேறு பொருளும் உண்டோ? யாழ, அசைச்சொல்; இதற்குப் பொருளில்லை. மருளி கொள் மட நோக்கம் - மயக்கம் கொண்ட அறியாமைக் கருத்தால். அயர்த்தாயோ - மறந்தாயோ. அன்பை மறந்தாயோ. காதலார் - காதலிக்கப்பட்டவர்கள்; எவன் செய்ப - என்ன செய்வர்; அதாவது, என்ன மதிப்பர். ஏதிலார் - அயலார். செம்மையின் - முறைமையிலிருந்து. இகந்து ஒரீஇ - கடந்து நீங்கி. பொருள் செய்வார்க்கு - பொருள் தேடுவார்க்கு. மதித் தீத்தை - மதிப்பாய். கவவு - முயக்கத்தை. கைவிடப் பெறும் - கைவிடப் பெறுதற்கு ஏதுவான. அவவு - அவா. கைவிடுதல் - கைவிடுக. மனும் - மன்னும்; நிலைபெறும். (௧00)

## இயற்கைக் காட்சி

[இயற்கைக் காட்சிக்கும் இன்பத்துக்கும் நெருக்கமிருக்கின்றது. இன்பத்தை விரும்புவோர் இயற்கை யழகிற் படிந்தே தீர வேண்டும். இதற்கு விலக்கானவர் எவருமிலர். காதலர்க்கு, இன்னுஞ் சொல்லவேண்டுமோ !]

மாயவனும் தம்முனும் போலே மறிகடலும்
கானலும்சேர் வெண்மணலும் காணாயோ—[கான
லிடையெலாம் ஞாழலும் தாழையும் ; ஆர்ந்த
புடையெலாம் புன்னை ; புகன்று.

—திணைமாலை நூற்றைம்பது, ௫௮.

தோழி, தன் தலைவிக்குச் சோலையின் இடத்தைச் சுட்டிக் காட்டுகின்றாள். தலைவனைச் சந்திக்கும் இடம் அது வாதலால், அதன் பொருத்தத்தைக் குறித்துக் கூறுகின்றாள். அப்படிக் கூறும்போதே கடலும் கடற்கரையுமான நெய்தல் நிலத்தின் அழகைத் தலைவியின் உள்ளத்துக்குக் கொண்டுவந்து அவளை இனிமை நினைவில் இருத்துகின்றாள்.

கடல் கருநிறமாய்ப் பரந்து காட்சியளிக்கின்றது ; அலைகள் மறிந்து மறிந்து வீழ்கின்றன. அறிதுயிலில் நினைவு அலைகளை இயக்கிக்கொண்டிருக்குங் கரிய திரு மேனியையுடைய கண்ணனைப்போலவே அவளுக்கு அந்தக் கடல் தோற்றுகின்றது. அதன்பின், கடற்கரை முழுதும் சோலை அடர்ந்து ஒரே வெண்மணல் வண்ணமாயிருக்கின்றது. கால் பதியும் இடமெல்லாம் வெண்மணற் பரப்பு. அந்த வெண்கோலம், கண்ணனுடைய தமையனான வெண்ணிறத் திருமேனியுடைய வாலியோனைப்போல அவளுக்குத் தோற்றுகின்றது.

இங்ஙனம் மாயவனும் அவன் முன்னவனும் போலத் தோற்றுங் கடலையும் கரையையும் பார், என்ன அழகாயிருக்கின்றன என்று காட்டி, பின்பு, சோலையின் வளத்தையுந் தோழி எடுத்துக் கூறுகின்றாள். சோலையின் இடை

யெல்லாம் ஞாழல் மரமும் தாழை மரமுமாயிருக்கின்றன; அதன் நிறைந்த பக்கங்களெல்லாம் புன்னை மரங்களா யிருக்கின்றன; அவற்றின் தழைவை விரும்பிப் பார்; என்ன வளம்! தலைவன் சந்திப்புக்கு எவ்வளவு பொருத்த மான இடம்! என்று ஓர் அரிய குறிப்போடு பொருத்திச் சொல்லுகின்றனள்.

இயற்கை யழகுக்கும் இன்பத்துக்கும் இயைபில்லா மலா இவ்வளவு கிளர்ச்சியான உரை இவர்களிடம் தோன்றியிருக்கின்றது!

குறிப்புரை: மாயவனும் - கண்ணனும். தம் முனும் - அவன் தமையனும். மறி - அலைகள் சுருளுகின்ற. கானலும் சேர் - சோலை சேர்ந்த; இதில் வரும் உம் என்பதற்குப் பொரு ளில்லை. 'கடலும் வெண்மணலும் காணாய்' என்று கொள்ள வேண்டும். ஞாழல் - கோங்கு மரம். ஆர்ந்த புடையெல்லாம் - நிறைந்த பக்கங்களெல்லாம். புன்னை - புன்னை மரங்களாயிருக் கின்றன. புகன்று - விரும்பி. காணாய் என்று செய்யுளின் இடையில் வந்த சொல்லை இறுதியிலும் சேர்த்துப் 'புகன்று காணாய்' என்று உரைத்துக்கொள்ளவேண்டும். 'விரும்பிப் பார்' என்று தோழி சொன்னது, தலைவன் சந்திப்புக்கு அந்தச் சோலை யின் நடுவையே இடமாகக் குறித்துக்கொள் என்று குறிப்பால் உணர்த்தியபடியாகும். (௧0௧)

முற்றும்.

# செய்யுள் முதற்குறிப்பு அகர வரிசை

